# ஆனந்த மாநடம்



க. சி. கமலையா

# ஆனந்த மாநடம்

(கட்டுரைகள்)

இருந்தமிழே உன்னாலிருந்தேன் இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்.

## க. சி. கமலையாவின் நூல்கள்

| | |
|---|---|
| நமது பண்பாடு | ரூ. 5 00 |
| மாதவி அரங்கேறினாள் | ரூ. 7 50 |
| ஆனந்த மாநடம் | ரூ. 10 00 |
| **Preface in the Kural** | **Rs. 20 00** |
| **Ananda Coomaraswamy – Wise Man From The East** | **Rs. 20 00** |

### பதிப்பித்த நூல்

| | |
|---|---|
| தமிழக நுண் கலைகள் | ரூ. 7 50 |

# முன்னுரை

'ஆனந்த மாநடம்' என்ற இக்கட்டுரைத் தொகுப்பில் பதினைந்து கட்டுரைகள் உள. உலகக் கலையன்பர்களிடையில்—சிந்தனையாளர்களிடையில் 'நடராஜர் ஆடல்' பற்றிய கருத்தை உலவ விட்ட பெருமை ஆனந்த குமாரசாமியைச் சாரும். சென்னை வானொலி நிலையத்தினின்றும் ஒலி பரப்பப் பட்ட பேச்சின் விரிவாகும் இக்கட்டுரை. நூலின் தலைப்பையும் இக்கட்டுரை பெறுகிறது. 'திருக்குறளில் நுண்கலைகள்' என்ற கட்டுரை சென்னை ஜைன இளைஞர் மன்றம் கொணர்ந்த 'திருக்குறளில் அறிவுத்துறைகள்' என்ற வெளியீட்டுக்கு வழங்கப்பட்டது. கம்பராமாயணம் பற்றிய இரண்டு கட்டுரைகள் புது டெல்லி லக்ஷ்மிபாய் நகர் தென்னிந்திய சமாஜ் இராமநவமி மலரில் இடம் பெற்றன. 'கம்பராமாயணத்தில் இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றல்கள்' 1977 ஆம் ஆண்டு திருப்பதித் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் கம்பராமாயணம் பற்றிய ஆய்வுக் கருத்தரங்கில் நான் பங்கேற்ற பொழுது படிக்கப்பட்ட கட்டுரையாகும். 'திரிகூட ராசப்பக்கவிராயர் நூல்களும் அவரது இலக்கியக் கொள்கையும்' என்பதன் சுருக்கமே சென்னை அடையாறு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனக் கருத்தரங்கில் என்னால் படிக்கப்பட்ட 'திரி கூட ராசப்பர் இலக்கியக் கொள்கை என்ற கட்டுரை. 'இதய மலர்கள்' பற்றிய மதிப்புரையின் சுருக்கம் 'உலக இதய ஒலி'யில் வெளிவந்தது.

இத்தொகுப்பில் இடம்பெற்ற இரண்டு கட்டுரைகள் பற்றிச் சொல்வது பொருத்தமானது. திரிகூட ராசப்பக் கவிராயருடைய நூல்களுள் 'திருக்குற்றாலக் குறவஞ்சி'யே அறிஞர்களிடை பெரிதும் இடம்பெற்றது. அவருடைய மற்றைய நூல்களைப் போற்றாது ஒதுக்கிவிடுவது ஒரு பேரிழப்பாகும்,

பலர் இந்நூல்களைப் பற்றியே அறியார்போலும்! சலிக்காத இன்பம் தரும்—புலமை நிறைந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க—இயற்கை எழிலை ஓவியம் தீட்டும்—கற்பனை சிறகடித்துப் பறக்கும்—வண்ணக்களஞ்சியமாகும் அவருடைய நூல்கள். பக்தி அந்நூல்களின் ஊடிழை. மற்றொரு கட்டுரையான 'நீக்ரோ உபதேசம்' அதே பெயருள்ள ஆங்கிலக் கவிதையையும் கொண்டது. அமெரிக்கக் கவிதையுலகில் இக்கவிதை சிறப்பான இடம் வகிக்கிறது. இது ஒரு வசன கவிதை. இக்கவிதையைப் படித்த உடனேயே அதனால் ஈர்க்கப்பட்டுத் தமிழுலகுக்கு வழங்கவேண்டும் என்ற இதயத் துடிப்பே இந்நூலில் அக்கவிதை பெற்றுள்ள இடம்.

இக்கட்டுரைத் தொகுப்பு என்னுடைய மூன்றாவது தமிழ் நூலாகும். ஆசிரியனே தன்னுடைய நூலைப்பற்றிச் சொல்வது பொருந்தாது. அஃது படிப்போரின் உரிமை.

இந்நூலை அணி செய்யும் அச்சுப்படங்கள் கொடுத்துதவிய சென்னை அரசு அருங்காட்சியகத்தினர்க்கும் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர்க்கும் என்னுடைய நன்றி. ஆனந்த குமாரசாமியின் படத்தைக் கொடுத்துதவிய அவருடைய திருமகனார் டாக்டர் இராம. பொன்னம்பலம் குமரசாமியவர்களுக்குக் கடப்பாடுடையேன். நாவல் அச்சகத்தின் உரிமையாளர் திரு. நாரா. நாச்சியப்பன் அவர்கள் விரைவில் நூல் வெளிவரவும் நல்ல முறையில் அச்சிட்டுதவியதற்கும் என்னுடைய நன்றி உரித்தாகும்.

அசோகநகர், சென்னை
17—8—1978.

க. சி. கமலையா

# உள்ளுறை

எண் | | பக்கம்



படங்கள்

# பஃறுளியாறும் குமரிக்கோடும்

சங்ககாலம் தமிழிலக்கியத்தின் பொற்காலம். பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும் சங்க இலக்கியத்தில் அடங்குவன. ''புறநானூறென்பது, அமிழ்திற் சிறந்த தமிழ் மொழியதனை ஒன்பான் சுவைபுணர்த் தன்பால் வளர்த்தருள் நச்சும் பெருமை முச்சங்கத்துள் கடைச்சங்கப் புலவர்கள் அருளிச் செய்த எட்டுத் தொகையுள் ஒன்று; எட்டுத் தொகையாவன நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன. இதனை அடியில் வரும் வெண்பாவாலுணர்க:-

*நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ*
*றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்*
*கற்றறிந்தார் சொல்லுங் கலியோ டகம்புறமென்*
*றித்திறத்த வெட்டுத் தொகை.*

இவற்றுள் ஒவ்வொன்றும் பலராற் செய்யப்பட்டுத் தொழில் அளவு பாட்டு பொருளென்பவற்றுள் ஒவ்வொன்றால் தொகுக்கப் பட்டமையின், இவை தொகையென்று பெயர் பெற்றன வென்பர்''[1] என்று உ. வே. சாமிநாதையர் எழுதுகிறார்.

சங்கநூல்கள் தமிழின் தங்கச் சுரங்கம். இன்பம் பற்றி அகத்தே நிகழும் ஒழுக்கம் அகம் என்றும் புறத்தே நிகழும் அறனும் பொருளும் பற்றிய ஒழுக்கம் புறம்என்றும் சொல்லப்

படுகின்றன. அகம், புறம் என்பன ஆகுபெயர்கள். (அகம்-உள்; புறம்-வெளி).நானூறு பாக்களைக் கொண்ட புறநானூறு தமிழ் நாட்டு முடியுடை வேந்தர் மூவர் பற்றியும் கடையேழு வள்ளல்கள் பற்றியும் பழந்தமிழ் நாட்டினரின் நடை முதலியன பற்றியும் மேலும் பலவற்றைப் பற்றியும் அறிவிக்கும் வரலாற்றுக் களஞ்சியம் ஆகும். இந்நூலிற் காணும் செய்யுட்களைப் பாடியவர்களும் அவைகளிற் பாடப் பட்டோரும் ஒரு காலத்தவரோ ஓரிடத்தவரோ அல்லர். புறநானூற்றில் காணப்படும் சில பாக்கள் காலத்தால் மிக முந்தியதாயிருக்கவேண்டும். சங்க நூல்கள் கிறிஸ்துவுக்கு முன்னும் பின்னும் உள்ள நூற்றாண்டுகளில் எழுந்தவை என்பது ஆராய்ச்சியாளர்களில் பெரும்பாலோர் கருத்து.

இன்றையக் குமரிமுனைக்குத் தெற்கே நிலப்பரப்பு இருந்ததென்றும் அதனைக் கடல் விழுங்கிவிட்டதென்றும் மேலை நாட்டு அறிஞர்கள் சொல்லி 'லெமூரியா' என்றும் அதற்குப் பெயரிட்டனர். நில நூல் வல்லாரும் விஞ்ஞானிகளும் இவ்வுண்மையை அலசிப்பார்த்து இன்னும் ஆராய்ந்து வருகின்றனர். கடல் கொண்ட நிலப்பரப்பில் ஆறுகளும் மலைகளும் இருந்தன என்பது பற்றி இலக்கியச் சான்றுகள் கிடைக்கின்றன.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடிய காரிகிழாரின் பாடல் தெற்கிலிருந்த குமரியாறு பற்றிக் குறிப்பிடுகிறது.

*வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்*
*தெனாஅ துருகெழு குமரியின் தெற்கும்*
*குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்*
*குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்*
*கீழது, முன்புண ரடுக்கிய முறைமுதற் கட்டின்*
*நீர்நிலை நிவப்பின் கீழும் மேலது*
*ஆனிலை யுலகத் தானும் ஆனாது*

*உருவும் புகழு மாகி...*
*... ... ... ...*
*தண்டா ஈகைத் தகைமாண் குடுமி*
*தண்கதிர் மதியம் போலவுந் தெறுசுடர்*
*ஒண்கதிர் ஞாயிறு போலவும்*
*மன்னிய பெருமநீ நிலமிசை யானே.* (புறநானூறு-6)

"தண்டா ஈகைத் தகைசால் குடுமி! வடக்கில் நெடிய பனி வரையின் வடக்கும் தெற்கில் கன்னியாற்றின் தெற்கும் கிழக்கில் தொடுகடலின் கிழக்கும் மேற்கில் தொன்மையான முதிர்ந்த கடலின் மேற்கும் நிலம், வானம், மேலுலகம் என்றடுக்கப்பட்ட அடைவில் நீர் நிலைக்கு மேல் ஓங்கிய நிலத்தின் கீழும் மேலுலகத்திலும் உருவும் புகழுமாகி வரையாது நல்கி குளிர்ந்த மதியம் போலவும் ஒளி காலும் ஞாயிறு போலவும் நீ நிலத்தின் மிசை சிறக்க!" என்பது பொருளாகும். 'தெனுஅ துருகெழு குமரி' யென்று குமரியாறும் 'குடா அது தொன்று முதிர் பௌவம்' என்று மேலைக் கடலும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. மேற்குக் கடல் கிழக்குக் கடலைக் காட்டிலும் பழைமையானது என்ற கருத்து நிலநூல் வல்லாரும் விஞ்ஞானிகளும் ஆராய்ச்சியாளரும் கூர்ந்து நோக்கற்பாலது.

முன் சொன்ன பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடிய நெட்டிமையார் பாடல் ஒன்றும் வரலாறு பொதிந்தது.

*ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்*
*தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்*
*பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்*
*எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென*
*அறத்தாறு நுவலும் பூட்கை மறத்திற்*
*கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்*
*எங்கோ வாழிய குடுமி தங்கோச்*

*செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த*
*முந்நீர் விழவின் நெடியோன்*
*நந்நீர்ப் பஃறுளி மணலினும் பலவே* (புறநானூறு-9)

'எங்கோவாகிய குடுமி! பஃறுளியாற்று மணலினும் நீ பல காலம் வாழ்வாயாக!' என்பது பாடலின் கருப்பொருள்.

'பஃறுளி' என்ற சொல்லாட்சி பிறிதோரிடத்தில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் பாடிய பாடலில் இடம் பெறுகிறது.

... ... ... ...
... ... ... *பெருமவிவ் வுலகத்துச்*
*சான்றோர் செய்த நன்றுண்டாயின்*
*இமயத் தீண்டி யின்குரல் பயிற்றிக்*
*கொண்டன் மாமழை பொழிந்த*
*நுண்பஃறுளியினும் வாழிய பலவே.*

(புறநானூறு-34, வரிகள் 19-23)

''பெரும! இவ்வுலகத்துச் சான்றோர் செய்த நன்றுண்டாயின் பனிவரையின் கண்ணே திரண்டு இனிய ஓசை பயிற்றிக் காற்றால் உந்தப்பட்டு வரும் மாமுகில் பொழிந்த நுண்ணிய பல துளியினும் பல காலம் வாழ்வாயாக!'' என்று ஆலத்தூர் கிழார் வளவனை வாழ்த்துகிறார். இங்கு, 'பஃறுளி' என்பது 'பலதுளி' என்று பொருள்படும். நெட்டிமையார் புறநானூற்று ஒன்பதாவது பாடலில் 'பஃறுளி' என்பதற்கு 'நந்நீர்ப் பஃறுளி' என்று அடைமொழி கொடுத்ததாலும் 'மணலினும்' என்று விளக்கம் தந்ததாலும் ஆங்கே 'பஃறுளி' என்பது பஃறுளியாற்றைக் குறிக்கும்.

சங்ககாலத்தை யொட்டி எழுந்த சிலப்பதிகாரத்து வேனிற்காதையில் தமிழை எல்லைப்படுத்தின நாட்டை,

*''நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமுந்*
*தமிழ்வரம் பறுத்த தண்புன லன்னாடு''*

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார். 'தொடியோள் பௌவம்' என்பதற்குக் 'குமரிக்கடல்' என்று அரும்பதவுரையாசிரியர் பொருள் எழுதுகின்றார். பிற்காலத்துத் தமிழ் நாட்டின் தெற்கெல்லை, பஃறுளியாறும் குமரியாறும் முன்னரே கடலாற் கொள்ளப்பட்டுவிட்டதால், கடலைக் கொண்டது. எனவேதான்,

*பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்*
*குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள*

என்ற காடு காண்காதைப் பகுதியில் 'குமரிக்கோடு' என்று ஐயத்திற்கிடமின்றி இளங்கோவடிகள் உரைக்கிறார். 'கோடு' என்பதற்கு அரும்பதவுரையாசிரியர் 'கரை' என்று பொருள் எழுதுகிறார். குமரிக்கோடு என்பதற்குக் குமரிக்கரை அல்லது குமரியாறு என்று பொருள் கொள்வது பொருந்தும். குமரியாறு தோன்றிய மலையைக் குமரிக்கோடு என்றும் கொள்ளலாம். சங்க காலத்துக்குப் பின்வந்த நூல்களில் பல நூற்றாண்டுகள்வரை கடல் கொள்ளப்பட்ட பஃறுளியாறும் குமரியாறும் இடம் பெறவில்லையென்பது குறிப்பிடத்தக்கது. சங்க காலத்து மக்கள் மனத்தில் இடம் பெற்ற கொடுங்கடல் விழுங்கிய தென்பகுதியும் அதன்கண் ஓடிய பஃறுளியாறும் பற்றிய செய்தி இளங்கோவடிகள் காலத்தில் பசுமையாயிருந்திருக்க வேண்டும். சிலப்பதிகாரக் காலவரையறைக் கணக்கில் ஈடுபட்டு அந்நூலை மிகப் பிற்கால நூலென்று நிறுவ அவதிப்பட்டுழல்வோர் இஃதை நினைவிருத்திக் கொள்ளுதல் நன்று.

வடமொழியில் தமிழ் 'திராவிடம்' என்று சொல்லப்படுகின்றது. அம்மொழியில் 'திராவிட பாஷை' என்றாலே தமிழ் மொழியைத்தான் அச்சொல்லாட்சி சுட்டுகிறது. எனினும், மேலை நாட்டவர் தொடர்புக்குப்பின், 'திராவிட மொழிகள்' என்பது தமிழ், கன்னடம், களி தெலுங்கு, கவின் மலையாளம், துளு என்ற அனைத்து மொழிகளையுமே சுட்டுவதாயிற்று. இம்மொழிகளைப் பேசும் மக்களும் 'திரா

விட' இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று சொல்லப்பட்டனர். இத்திராவிடர் என்பார் யார்? அவர்கள் எங்கிருந்து வந்தனர்? ஆரியர் இந்தியாவுக்கு வருமுன்னர், அவரைப் போலவே திராவிடரும் மத்தியதரைப்பகுதியிலிருந்து இங்கு வந்தனரா? மொகஞ்சதரோ-ஹரப்பா அகழாய்வுகளும், லோதல் அகழாய்வும் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்பு தழைத்த உயர் நாகரிகத்தை எடுத்தோதுகின்றன. திராவிட நாகரிகம் என்று சொல்லப்படும் அந்நாகரித்துக் குரிய மக்கள் மூன்று பக்கங்களிலும் கடலாற் சூழப்பட்ட இந்தியாவின் தென்பகுதிக்கு வடக்கிலிருந்து வந்து குடி யேறிக் காலூன்றித் தங்கள் நாகரிக வாழ்க்கையைத் தொடர்ந்து நடத்தினரா? போக்கு வரவு வசதிகள் இல்லாத அக்காலத்தில் மூவாயிரம் ஆண்டுகளோ அதற்கு முன்போ காடுமலை தாண்டி உயிருக்கு உலைவைக்கும் பயணத்தை மேற் கொண்டிருப்பரா? கடற் பயணத்தில் ஊறித்திளைத்த அம்மக்கள் அரபிக் கடலில் இந்திய மேற்குக் கரையை யொட்டி மரக்கலங்களில் பயணம் செய்து சேர நாட்டில் முதலில் இறங்கிப் பிறகு கோயம்புத்தூர், கன்னியாகுமரி வழியாக மேற்குத் தொடர்ச்சி மலைகளுக்குக் கிழக்கேயுள்ள சமவெளிப் பகுதிகளை அடைந்தனரா? தரை வழியாக விந்திய மலைகளைத் தாண்டிக் கிழக்குத் தொடர்ச்சி மலைகளை யொட்டித் தென்பகுதிக்கு வந்தார்களா? திராவிடர்கள் தென்னிந்தியாவின் ஆதிக் குடிகளென்றால், பலுசிஸ்தானில் திராவிட மொழியான பிராஹி இன்றும் பேசப்பட்டு வருவதேன்? அரபிக் கடல் திராவிடர்கள் பயணம் செய்த பெரு வழியாதலால், எளிதில் தொடர்பு கொள்ள முடியும். அவ் வாறெனின், சிந்து நதிப் பள்ளத்தாக்குப் பகுதிகளில் தெற்கி லிருந்து போய்த் திராவிடர்கள் குடியேறினரா? இந்திய வரலாற்றுராய்ச்சியில் ஈடுபட்டிருப்போர் மேற்கண்ட கேள்வி களுக்கு விடைகள் காணப் பல ஆண்டுகளாக முயன்று வரு கின்றனர்.

சிந்து வெளி நாகரிகத்தின் எழுத்துக்கள் இன்னும் படிக் கப்படவில்லை. சிந்துவெளி நாகரிகமே முன்னோடித் திரா

விட மக்களின் நாகரிகம் என்ற ஜான் மார்ஷலுடையவும் அவருடைய தோழர்களுடையவும் கருத்துக்களுக்கு ஏனோ எதிர்ப்பு பெருகிக்கொண்டு வருகிறது? இந்தியப் புதை பொருட் துறையின் வெளியீடாக வந்த அவருடைய அறிக் கையை மிஞ்சிய நூல் இதுவரை இந்தியத் துணைக் கண்டத் திலேயே அதற்குப்பின் வரவில்லை. ஆரியர் வருமுன்பு மொகஞ்சதரோவில் உயர் நாகரிக மக்கள் அங்கு வாழ்ந்தார் கள் என்பதும் மறுக்கப்பட்டு வருகிறது. ஆரியரே வெளி யிலிருந்து வந்தவரல்லர்; அவர் இந்தியத் துணைக்கண்டத் தினரே என்று கிளிப்பிள்ளை போல் பேசுபவரும் உளர். ஆரிய நாகரிகத்தின் பெரும்பகுதிகள் அதற்கு முன் ஓங்கி வளர்ந்த சிந்து வெளிமக்களிடமிருந்து கடன் வாங்கியவை என்ற கருத்து உலக அறிஞர்களிடம் உரம் பெற்றது; இன்றும் அவ்வாறே மக்களினங்கள் கலக்கும் பொழுது பண்பாட்டில்-நாகரிகத்தில்—பழக்க வழக்கங்களில் கொடுக்கல் வாங்கல் என்பதைத் தவிர்க்க முடியாது. வெளியிலிருந்து வந்த ஆரியர் சிறு தொகையினர்; பெண்களின் எண்ணிக்கை குறைவு. எனவே முன்பே வதிந்த மக்களுடன் கலக்காம லிருந்திருக்க முடியாது. இவற்றால் ஆரியர்க்கு இழுக்கொன்று மின்று. இனத் தூய்மை என்பது கானல் நீர். ஆரியரோ, திராவிடரோ, மங்கோலியரோ இதற்கு விதிவிலக்கன்று. என்றாலும் பற்பல பகுதிகளில் வாழும் ஒருவன் பெரும் பகுதி ஓரினத்தைச் சேர்ந்தவன். நம்பிக்கையை விஞ்ஞானத்தில் புகுத்தி உழல்வது கூடாது. ஓர் எடுத்துக் காட்டு: மங்கோலிய இனத்தைச் சேர்ந்த மொகலாய அரசர்களில் அக்பர் இராஜ புத்திரப் பெண்ணை மணந்த அம்மனைவியின் பிள்ளையே ஜஹாங்கீர். ஜஹாங்கீரின் இராஜபுத்திர மனைவியின் பிள்ளையே ஷாஜஹான். மங்கோலிய இனத் தூய்மை எங்கு போயிற்று? எனினும் சிறு கூட்டத்தவரான மொகலாயர் இந்தியமக்களின் பெருவெள்ளத்தில் கலந்து இரு கூட்டத் தினரும் ஒரு மக்கள் ஆயினர். மேல் நாட்டறிஞர் மொகஞ்ச தரோ நாகரிகம் பற்றியும் கடல் கொண்டதாகச் சொல்லப் படும் தமிழ் நாட்டின் தென்பகுதி பற்றியும் திராவிட இன

மக்கள் என்று சொல்லப்படுபவர் பற்றியும் விரிவாக ஆராய்ந்து வருகின்றனர். அவ்வரிசையில் ஒருவர் அலெக்சாண்டர் கோண்ட்ரடாவ் (Alexander Kondratov) என்ற ருஷ்ய அறிஞர். அவருடைய 'மூன்று பெருங்கடல்களின் அவிழ்க்கப்படா முடிச்சுகள்' (The Riddles of Three Oceans)[8] என்ற நூல் இந்தியா பற்றிய ஆராய்ச்சியாளரும் (Indologists) தமிழ் பற்றிய ஆராய்ச்சியாளரும் (Tamilologists) கூர்ந்து படிக்க வேண்டிய நூலாகும். இவ்வாராய்ச்சியில் இந்நூலை ஒரு மைல்க்கல் என்று சொல்லலாம். அந் நூலின் இந்தியப் பெருங்கடல் (Indian Ocean) என்ற பகுதியின் சுருக்கத்தை மேலே காணலாம்.

பத்து லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு நிலத்தில் மனிதன் தோன்றினன். ஆனல் எங்கு தோன்றினன் என்று திட்ட வட்டமாய்க் கூற முடியாது. எழுதப்பட்ட வரலாற்றுக் குறிப்புகள் பயனுள்ளவையே என்ருலும் மிகப் பழங்காலங்கள் பற்றிக் கிடைக்கும் அடிப்படைகள் நேரடியானவை அன்று; அதுவும் மிகக் குறைவு; மங்கலாயுமுள்ளது. இங்கு தான் தொன்றுதொட்டுச் சொல்லப்பட்டு வரும் பழைய கதைகளும் கற்பனை விரவிய நிகழ்ச்சிகளும் கைகொடுத்துதவுகின்றன; ஏனெனில் அவற்றில் பலவற்றிற்கு ஆதாரம் உண்டு. பழங்கால மக்களுடையவும் அவர்களுடைய நாகரிகங்களுடையவும் பற்றிய அறிவு இதுவரை தரையில் நிகழ்த்திய அகழாய்வின் அடிப்படையில் கிடைத்ததுவே. ஆனல் இன்றோ நீருக்குள் புகுந்து நடத்தும் ஆராய்ச்சி மனிதனைப் பற்றிய தகவலை மேலும் மேலும் வெளிக்காட்டுகிறது. இந்நூலில், நீருக்குள் நிகழ்த்தும் அகழாய்வு மனிதனுடைய அறிவுலக வெட்டவெளியினை உற்று நோக்கி மேலும் தகவலைத் தருவது பற்றி அலெக்ஸாண்டர் கோண்ட்ரடாவ் ஆராய்கிருர்.[9]

''மடகாஸ்கரில் (Madagascar) காணப்படும் பறவைகளும் மலர்களும் ஆப்பிரிக்க உறவை விடுத்து இந்தியப்

பறவைகளையும் மலர்களையும் ஒத்திருப்பதேன்? பூமியின் நடுக்கோட்டை (Equator) ஒட்டி வாழும் மக்களின் ஒவ்வொரு பெரும்பிரிவிலும் குள்ளமாயுள்ள ஒரு பகுதி மக்கள் காணப்படுவதேன்?'' என்ற வினுக்களை அலெக்ஸாண்டர் கோண்ட்ரடாவ் கேட்டு விடையும் ஒரு கேள்வியிலேயே அளிக்கிருர். ''ஆப்பிரிக்கா, தெற்கு ஆசியா, ஆஸ்திரேலியா ஆகிய இடங்களில் வாழ்ந்த குள்ளர் பிரிவின் எச்சங்களா அவர்?''[4] இந்தியாவின் நடுப்பகுதியில் அந்நாட்டின் பழங்குடிகளான முண்டா (Munda) நீக்ரோ (Negro) ஆகிய மக்களினங்களும் தென் இந்தியாவில் கறுப்புத் தோல் திராவிடர்களும் உளர். இவர் எவ்விடத்தைச் சார்ந்தவர் என்பது விஞ்ஞானப் புதிராகும். அவர்களுக்கே உரித்தான பண்பாட்டுடன் விளங்கும் திராவிட இன மக்களான தமிழர்கள் பற்றித் தீவிரக் கருத்து வேறுபாடு நிறைந்த சர்ச்சை நிலவுகிறது. அறிஞர்கள் பல நாடுகளையும், ஏன் பல கண்டங்களையும் தமிழர்கள் முதன் முதல் வாழ்ந்த இடங்கள் என்று குறிப்பிடுகிருர்கள். தமிழர்களே, சரியாகச் சொல்வதென்ருல், அவர்களின் வரலாற்ருசிரியர்களே, மிக மிகப் பழங்காலத்தில் தமிழர்களின் தாய்நாடு நாவலந்தீவின் தென் பகுதியிலிருந்த தென்றும் பூமத்தியரேகை (Equator)யில் ஆதியில் எழுந்த நிலப்பரப்பின் பெரிய தீவென்றும் நாகரிகத் தொட்டில் என்று கருதப்பட்டுக் கடலாற் கொள்ளப்பட்ட லெமூரியாவின் (Lemuria) பகுதியென்றும் நம்பினுர்கள்.[5] டாலமி (Ptolemy) உள்ளிட்ட பூகோள அறிஞர்கள் இந்தியப் பெருங்கடலை (Indian Ocean) நாலா பக்கமும் நிலத்தால் சூழப்பட்ட பேரேரி என்று நம்பினுர்கள்.[6] இந்திய நாகரிகத்தின் முன்னேடி நாகரிகத்துக்குரிய மக்கள் யாவர்? இந்திய சித்திர எழுத்துக்களுக்கு (Hieroglyphic inscriptions) முந்தியவைகளை X (எக்ஸ்) மொழி என்று கொண்டு ஆராய்ந்ததில் இந்தியாவின் மிகப் பழைய நாகரிகத்தைப் படைத்தோர் சமஸ்கிருதம், ஹிட்டைட் (Hittite) ஹர்ரியன் (Hurrian) ராபனுய் (Rapanui) முதலிய மொழிகளுக்குரியவரல்லர். இறுதியில், எக்ஸ் மொழிக்கு மிக நெருங்கிய உறவு கொண்டாடும் தகுதி

திராவிட மொழிகளுக்கே கிட்டியது.[6] கி.மு. இரண்டாவது ஆயிரம் ஆண்டுகளின்போது இடம் விட்டு இடம் பெயர்ந்து சென்ற ஆரியர் இந்தியாவுக்கு வந்தனர். இந்தியர்களின் முன்னோடிகளிடமிருந்து அவர்கள் பெற்ற கொடைகள் பல. தசாம்ச எண்ணிக்கை (Decimal numeration) இந்தியாவில் கண்டு பிடிக்கப்பட்டது. ஆரியர்களால் அன்று; ஆரியப் படையெடுப்புக்குப் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இந்திய முன்னோடிகளால் கண்டுபிடிக்கப்பட்டு அவர்களுடைய வணிகர்களும் கணக்கர்களும் அம் முறையைப் பயன் படுத்தினார்கள். இந்திய முன்னோடிகளின் சமயத்தினுடையவும் பழைய நம்பிக்கைகளுடையவும் தாக்கம் அவர்களை வெற்றிகண்ட ஆரியர்களின் சமயத்தில் இடம் பெற்றன என்பது பற்றி ஐயம் ஏதும் இல்லை.[7] ஒரே இனத்தைச் சேர்ந்த வெப்பத்தை விரும்பும் மண்புழுக்கள் ஆஸ்திரேலியாவின் தென்மேற்குப் பகுதியிலும் இந்தியாவிலும் இலங்கையிலும் காணப்படுகின்றன. தங்களுடைய வலிமையினாலேயே இவை இந்தியப் பெருங்கடலைக் கடந்து வந்திருக்க முடியாதாதலால் இந்தியாவும் ஆஸ்திரேலியாவும் நிலப் பகுதியால் இணைக்கப்பட்டோ அல்லது ஒன்றுடன் மற்றொன்று சேர்ந்தோ இருந்து பின்னர் ஆயிரக்கணக்கான மைல்கள் இடைவெளியுள்ள பெருங்கடலால் பிரிக்கப்பட்டிருக்க வேண்டும்.[8] திராவிடர்கள் இந்தியாவின் மிகப் பழைய மனித இனங்களில் ஒன்றைச் சேர்ந்தவர்கள். ரிக்வேதத்தில் சொல்லப்பட்ட ஊர் சுற்றித் திரியும்—சண்டை போடும் ஆரியர்கள் இந்தியாவுக்கு வருமுன்பே அங்கு அவர்கள் வாழ்ந்தார்கள். ஒரு வியப்பு என்னவெனில் உலகின் மிகப் பழைய நாகரிகங்களில் மூன்றுக்கு இரண்டு திராவிட மொழிகளைப் பேசும் மக்களுடையனவாகும்.[9] காய்தல் உவத்தல் இன்றி அலெக்ஸாண்டர் தம் கருத்துக்களை வெளியிட்டுள்ளார் என்பதை மேலே வருவன குறிக்கும்.

மிக வியப்பான செய்தி என்னவெனில் இந்தோ—ஐரோப்பிய மொழிகளும் முண்டா மொழிகளும் இந்தியாவில்

தலை காட்டுவதற்கு முன்பே திராவிட மொழிகள் இந்தியாவில் தலை காட்டினவென்றாலும், அத்திராவிடமொழிகளும் வேற்று மொழிகளே;[10] திராவிடர்கள் இந்தியாவின் பழமையான மக்கள் என்றாலும் அவர்களும் வேறு எங்கிருந்தோ வந்தவர்கள் என்பது வாதத்துக் கிடமில்லா உண்மையாகும். திராவிட மொழிகள் வடக்கிலிருந்து தெற்கே பரவாமல் தெற்கிலிருந்து வடக்கே பரவின என்பதை மொழி பற்றிய தகவல்கள் சுட்டுகின்றன.[11] இந்தியாவில் கற்காலத்தின் தொடக்கத்திலிருந்து மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். இன்றைய இந்தியாவில் மூன்று பெரிய மொழிக் குடும்பங்களைச் சேர்ந்த மொழிகளைப் பேசுபவர்கள்—அதாவது, திராவிடர்கள், முண்டா, (Munda) ஆரியர்கள் என்ற இவர்கள் எல்லோருமே வேற்று நாட்டவர்.[12]

அலெக்ஸாண்டர் கோண்ட்ரடாவ் கருத்துக்கள் எல்லாம் இக்கட்டுரையில் இடம் பெறவில்லை. ஓரளவே அவை இடம் பெற்றுள்ளன. நூலின் பின்னுரையில் அவர் குறிப்பிட்ட கருத்துக்களைத் தவிர்ப்பது முறையன்று. எனவே அவற்றையும் மேலே காணலாம்.

*வாதத்திற்கு அப்பாற்பட்டது :* ஐயத்திற்கே உறைவிடமான ஆராய்ச்சியாளர்கள் கூட அழிவுற்ற பண்டைக்காலச் சிற்றூர்களும், நகரங்களும் பெருங்கடல்கள், சிறுகடல்கள், குடாக்கள், ஆற்றையொட்டிய வண்டல் மணல் வெளிகள் ஆகியவற்றின் கரைகளில் புதைந்து கிடக்கின்றன என்று ஒப்புக் கொள்கிறார்கள். தண்ணீருக்குள்ளிருந்து மனிதர்கள் வாழ்ந்த இடங்கள் ஆண்டு தோறும் கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன.

**இருந்திருக்கலாம் :** நில இணைப்புகள் அநாகரிக மனிதனைச் சிதறடித்து பல தீவுகளிலும் கண்டங்களிலும் கூடக் குடியேற உதவின. இதுபற்றிப் பல வாதப் பிரதிவாதங்கள் உள.

பழைய நாகரிகங்களின் படைப்பாளர்களில் பெருவாரி யான மக்கள், இந்திய, பசிபிக், அட்லாண்டிக் பெருங்கடல் களில் இருந்த பெரிய நிலப்பரப்புகளில் பெரிதும் வாழாமலே இருந்திருக்கலாம். வாதத்துக்குரிய பசிபிக் கண்டமும், லெமுரியாவும், அட்லாண்டிசும் ஒரு காலத்தில் இருந்தன என்பதற்கு வாய்ப்புண்டு; இல்லாமலும் இருக்கலாம்.[13]

அலெக்ஸாண்டர் கோண்ட்ரடாவ் கருத்துக்கள் தமிழ் பற்றியும், தமிழர்கள் பற்றியும், திராவிடர்கள் பற்றியும், திராவிட நாகரிகம் பற்றியும் ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்கள் மனத்தில் கொள்ளத்தக்கவை. மேலும் அவ்வாராய்ச்சி யைத் தொடரப் பெரிதும் உதவும். "இந்தோ—ஐரோப்பிய மொழிகளின் மிகப் பழைய இந்திய இலக்கியம் ரிக்வேதம்; (கி.மு. இரண்டாம் ஆயிரத்தின் இரண்டாவது பாதி). திரா விட மொழியில் மிகப் பழமையானது தமிழின் சங்க இலக் கியம். (கி.மு. இறுதி நூற்றுண்டுகளுக்கும் கி.பி. தொடக்க நூற்றுண்டுகளுக்கும் இடைப்பட்டவை)"[14] என்பது மேனுட்டாசிரியர் கருத்து. வேதங்களும் சங்க நூல்களும் இந்திய வரலாற்றுராய்ச்சிக்கு இன்றியமையாதவை. பஃறுளி யாற்றையும் பன்மலையடுக்கத்துக் குமரிக்கோட்டையும் எவரே மறக்க முடியும்? இன்றையத் தமிழாராய்ச்சியாளரிற் பெரும்பாலோர் நெடுங்கதைகளும் சிறு கதைகளுமே இலக் கியம் என்று அவற்றில் ஒட்டிக்கொண்டு தொன்மை இலக் கியத்தை மறந்து வருகின்றனர். அதில் தவறென்று மின்று. இருப்பினும், நெடுங்கதையாசிரியர்களில் ஒரு சிலர் அத்தொன்மை இலக்கியத்தில் ஊறிப் பயின்றவர்கள். தென்னுட்டின் இலக்கியத்துக்குக் கருவூலமாய் விளங்கும் சங்க இலக்கியப் பக்கம் திரும்பி விளக்கம் கொடுத்தால் அவர்களும் பயன் பெறுவர்; படிப்போரும் பயன் பெறுவர்.

## குறிப்புகள்


1. பதிப்பாசிரியர் உ. வே. சாமிநாதையர் : புறநானூறு மூலமும் உரையும். முதற்பதிப்பின் முகவுரை. 1894.
2. Alexander Kondratov: The Riddles of Three Oceans (Progress Publishers, Moscow) 1974.
3. Academecian S. Kalesnik: Foreword to The Riddles of Three Oceans.
4. Alexander Kondratov: The Riddles of Three Oceans. P. 121.
5. ஷெ p. 122
6. ஷெ pp. 133-134.
7. ஷெ p. 184.
8. ஷெ p. 124.
9. ஷெ p. 132.
10. ஷெ p. 148.
11. ஷெ p. 150.
12. ஷெ p. 151.
13. ஷெ p. 267.
14. Bridget and Ramond Allchin: The Birth of Indian Civilization.

# திருக்குறளில் நுண் கலைகள்

## திருக்குறளும் நுண்கலையும்

'நுண்கலை' என்ற சொற்றொடர் 'நுண்,' 'கலை' என்ற இரண்டு சொற்களாலாயது. நுட்பமான கலை என்று பொருள் படும். இசை யொரு நுண்கலை; ஓவியமும் நுண்கலையாகும்; சிலை சமைத்து வடித்தலும் நுண்கலையே. எனவே, பன்மையில் 'நுண் கலைகள்' என்று குறிப்பிடுவது பொருந்தும். நுண்கலைகள் என்ற சொல்லாட்சி மேலைநாட்டு மொழிகளினின்றும்—சிறப்பாக ஆங்கிலத்தினின்றும் மொழி பெயர்க்கப் பட்டது என்று சொல்வதில் தவறில்லை; திரித்துக் கூறப் பட்டதுமன்று. 'நுண்கலை' என்ற சொற்றொடர் திருக் குறளில் காணப்படாத ஒன்று. நுண் (407, 424,) நுண் ணவை (726) (நுட்பமான அறிவுடையோர் கூடிய அவை), நுண்ணிய (373) (நுட்பமான), நுண்ணியம் (710) (நுட்ப மான அறிவுடையேம்), நுண்ணியர் (1126) (நுட்பமான அறிவுடையவர்), (நுணங்கிய (419) (நுட்பமான), நுட்பம் (636) நுண்மையானவை), என்ற சொற்கள் குறட் பாக்களில் உள. 'நுட்பம்' என்ற சொல் உட்பட அனைத்தும் 'நுண்' என்ற வேர்ச்சொல்லிலிருந்து கிளைத்தனவே. 'கூரிய' என்ற பொருளுடைய 'நுண்' என்ற சொல் திருக் குறளில் இடம் பெற்றுள்ளது. 'கலை' என்ற சொல்லுக்கு அத்தகைய சிறப்பில்லை. 'கலை' திருக்குறளில் தலை காட்ட வில்லை. கல்வி (383,398,400,684,717,939), கற்க (391,725), கற்பவை (391), கற்பினும் (373), கற்பு (54), கற்றக் கடைத் தும் (823), கற்றடங்கல் (130), கற்றதனால் (2), கற்றது (650),

கற்றறிதல் (632) கற்றறிந்தார் (399), கற்றனைத்து (395), கற்றூரனைத்து (409), கற்றார் (395,403,409,722), கற்றான் (949), கற்று (130,140,355,399,632,685,717,728,729) ஆகியவை 'கல்' என்ற வேர்ச்சொல்லைக் கொண்டதாகும். கல்லா (814), கல்லாத (845), கல்லாதவர் (393,395,403,406), கல்லாதவாறு (397), கல்லாதார் (409), கல்லாதான் (402,404), கல்லார் (140,408,570), கல்லான் (870), கற்றிலன் (414) என்ற எதிர்மறைச் சொற்களும் 'கல்'லிலிருந்து தோன்றியவை. கலை என்ற சொல் திருக்குறளில் இடம் பெறவில்லையாயினும் 'கல்' என்ற ஊற்றிலிருந்து வந்ததுவே. 'கலா' என்ற வடமொழிச் சொல்லும் 'கலை' என்ற தமிழ்ச் சொல்லும் ஒரே கருவறையிலிருந்து வெளிவந்தவையன்று. பிற்காலத்தில் தோன்றிய 'கலை'க்கும் தொல்காப்பியக் காலத்துக் 'கலை'க்கும் பொருள் வேற்றுமையுண்டு. அங்கே கலை என்ற சொல் ஆண்மானைக் குறிக்கும்.

*இரலையும் கலையும் புல்வாய்க்குரிய.*

கலை என்ற பெயர் உழையையும் முசுவையும் சுட்டும்.

*கலையென் காட்சி உழைக்கும் உரித்தே.*
*நிலையிற்றப் பெயர் முசுவின் கண்ணும்.*

'நில்' என்பதினின்று 'நிலை'யும், 'தொல்' என்பதினின்று 'தொலை'யும் போலக் 'கல்' என்பதினின்றும் 'கலை' என்ற சொல் தோன்றியிருக்கலாம்.

வச்சிரநாட்டுக்கோன் திறையாக விட்ட முத்தின் பந்தரும், மகதவேந்தன் தந்த பட்டி மண்டபமும், அவந்தி நாட்டரசன் உவந்து கொடுத்த வாயிற்றோரணமும் பற்றிய செய்தி,

*பொன்னினும் மணியினும் புனைந்தன வாயினும்*
*நுண்வினைக் கம்மியர் காணு மரபினது* (வரிகள் 105-106)

என்று சிலப்பதிகாரம் இந்திர விழவூரெடுத்த காதையில் பேசப்படுகிறது. எனவே கம்மியர் நுண்ணிய தொழில்

வல்லர். கம்மியன் கையாலடித்துக் காய்ச்சி வெட்டித் தீர்ந்த பொன்னுலாய பொருள்கள் அவன் நுண்தொழிலை வெளிப்படுத்தின வெனலாம்.

கலை என்பது பன்மையில் செவிநுகர் இசையையும், கண்டு களிக்கும் காட்சிப் பொருள்களையும் குறிப்பதாகும். இசையும்,கண்ணுக்கு இன்பம் தரும் ஆடல்,ஓவியம்,சிற்பம் என்ற இவை போன்றவைகளும் நுண்கலைகளாகும். பொறிகள் வழிக் கலைகளை நுகர்ந்தாலும் புலன்களை உலுக்கிக் கலை இன்பம் கொடுக்கிறது. உள்ளத்தில் அலைமோதும் கருத்தலைகள் செவி கேட்கக் கண் காணக், கலைகளாய் மிளிர்கின்றன 'நுண்கலைகளில்' 'கலை'கள் இன்றியமையாதவை. சுவர் இல்லாமல் சித்திரம் வரைவதெவ்வாறு? கலைகளில் மெருகேறியவை நுண் கலைகளாய் ஒளிர்கின்றன. கலை என்ற மண் கொண்டு வனையப்பட்ட கலங்களே நுண்கலைகளாய்த் திகழ்கின்றன.

திருக்குறள் மனிதன் வாழ வழி வகுத்த நூல். 'வியாழனும், வெள்ளியும், ஞாயிறும், திங்களும், புறவிருளைப் போக்கும். குறள் வெண்பா உலகத்தோர் உள்ளிருளை நீக்கும் ஒளியாகும்' என்பர் மதுரைப்பாலாசிரியனார். இரண்டாவது உலகப்பெரும் போரில் அணுவைத் துளைத்துப் பிளந்து உலகம் உய்யவோ நையவோ ஓர் ஆற்றல் எழுந்தது. ஆனால் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே 'அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக் குறுகத்தறித்த குறள்,' மனிதனை மனிதனாய் வாழச் செய்யத் தக்கதெவை, தகாதெவை, எவை நலன் செய்யும், எவை அல்லன செய்யும் என்பவை சொல்லி, அறன் என்பதென்ன, அந்தணரென்போர் யாவர் என்பவை போன்றவைக்கு இலக்கணம் வகுத்து, சாதி, சமயம், நாடு, மொழி என்பவைக்கும் அப்பாற்பட்டு எழுந்த உலகப் பொதுமறை நூல். இது ஒரு வழிகாட்டும் நூல்; நன்னெறி புகட்டும் நூல்; மனிதனுக்கு ஒரு கொழு கொம்பு போன்றது. இத்தகைய நூலில் கலையைத் தேடியலைவது பெருங்கடலில் சிறுமீனைத் தேடுவது

போலாகும். நீதி நூலில் கலைபற்றிய செய்தி அரிது என்பது ஒரு புறமிருக்க இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு இன்று நாம் கலையென்று சொல்வது, மக்களின் வாழ்க்கையில் தோன்றியிருந்தது. எனவே, மேற்சொன்ன பின்னணியுடன், நுண்கலைகளுக்கு எத்தகைய இடம் திருக்குறளில் கிடைத்தது என்பதை ஆராய முற்படலாம்.

## 2. நடுகல்

சங்க காலத்தில் போர்க்களத்தில் உயிர் நீத்தவர்க்கு நடுகல் நாட்டப்பட்டது. வள்ளுவர் காலத்திலும் அவ்வாறே. நடுகல் வீரக்கல் எனப் பிற்காலத்திலும் வழங்கப்பட்டது. 'வீரக்கல்'களை இன்றும் தமிழ் நாட்டின் பல பகுதிகளிற் காணலாம். தொல் பொருளாராய்ச்சியாளர் இவற்றைக் கலைப்பொருளாய்ப் போற்றுகின்றனர். திருக்குறளில் 'படைச் செருக்கு' என்ற அதிகாரத்தில் ஒரு காட்சி. வீரன் ஒருவன் பகைவரை நோக்கி முழங்குகின்றான்: ''என் தலைவனுக்கு எதிராக நின்று போரில் உயிர் நீத்தவர் பலர் என்பதை அறியீரோ? அவர் கல்லாய் நிற்பதையும் அறியீரோ, பகைவீர்? என் தலைவனுக்கெதிராக நில்லாதீர்.''

நினைவுச் சின்னங்களாய் நடப்பட்ட கற்களில் காலப் போக்கில் போர்க் காட்சிகள் செதுக்கப்பட்டன. நடுகல் பற்றிய குறள்:

*என் ஐ முன் நில்லன்மின் தெவ்விர்! பலர் என் ஐ*
*முன்னின்று கல் நின்றவர்.* (771)

## 3. நாகரிகப் பாதையில் இரும்பு

நாகரிகப் பாதையில் இரும்பு சிறப்பான இடம் வகிக்கிறது. திருக்குறளில் 'பொன்' என்றே குறிக்கப்படுகிறது. உட்பகையுற்ற குடி அரத்தால் இரும்பு போலத் தேயும்.

*அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது*
*உட்பகை யுற்ற குடி.* (888)

பிறிதோரிடத்தில் தூண்டில் முள் இரும்பாலானது என்று ஒரு குறட்பா தெரிவிக்கிறது. சூதில் வெற்றி பெறும் ஒருவன் தூண்டிலிரும்பினை இரையென நம்பி விழுங்கிய மீனினை ஒப்பான்.

*வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்*
*தூண்டில்பொன் மீன்விழுங்கி யற்று.* (931)

அரமே இரும்பாலானது. அரம் இரும்பாலான பொருளை யும் தேய்க்க வல்லது.

*அரம்போலுங் கூர்மைய ரேனும் மரம்போல்வர்*
*மக்கட்பண் பில்லா தவர்* (997)

அறிவுக் கூர்மையைத் திருவள்ளுவர் அரத்திற்கு ஒப்பிடு கிறார்.

4. *மக்களிடை மரப்பொருள்*

கற்கால மனிதன் நாகரிகம் வளர்ந்த போது கல்லைக் காட்டினும் தான் வழங்குதற்குரிய பொருள்களை மரத்தால் ஆக்கினான். கல்லைச் செதுக்குவதற்கோ அல்லது குடை வதற்கோ கூரிய - வலுவுள்ள இரும்புக் கருவிகள் தேவைப் பட்டன. உழைப்பு மிகுதி. விரைவில் களைத்துப் போய் விட்டான். மரத்தில் தேவையான பொருள்களைச் செய்வது எளிது. மரப்பாவை செய்து அதை ஆட்டுவிப்பது ஒரு பொழுது போக்காய் வள்ளுவர் காலத்தில் இருந்திருக்க வேண்டும். மனத்தின் கண் நாணில்லாதார் இயங்குவது மரப்பாவையைக் கயிற்றினால் கட்டிக் கூத்தாட்டுவான் இயக்குவது போலாகும். மரப்பாவை மக்கள் மனத்தை ஈர்க்கும் வகையில் எழிலுடன் அமைந்திருக்கவேண்டும்.

*''நாணகத் தில்லார் இயக்கம் மரப்பாவை*
*நாணால்உயிர் மருட்டி யற்று.* (1020)

'ஏற்பதிகழ்ச்சி' என்றுரைத்த ஔவையார் 'ஐயமிட்டுண்' என்று அறிவுரை வழங்கினார். ஏற்பதை

இகழ்ச்சி எனக் கருதிச் செயலினும் காட்டுவது என்று மக்கள் முனைந்துவிட்டால் உலக வாழ்க்கை சப்பென்றுகி விடும். எங்கு நோக்கினும் எழில் கொழிக்கும் வளம் என்றுல் கொடை வள்ளல்கள் பெறுவாரில்லையே என ஏங்கி நிற்கும் நிலை ஏற்பட்டுவிடுகிறது. அப்பொழுது உலகம் மரப் பாவை செல்வது போலும் வருவது போலுமிருக்கிறது.

*இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்*
*மரப்பாவை சென்றுவந் தற்று.* (1058)

செப்பு என்பதும் மரத்தால் செய்யப்பட்ட அழகுப் பொருள். இன்று செப்பு என்றும் சிமிழ் என்றும் வழங்கு கிறது. செப்பு இருகூறுகளைக் கொண்டது. கீழ்ப்பகுதியின் மீது மேற்பகுதியை ஏற்றி மூடப்படுவதாகும். செவ்வையாகச் செய்யப்பட்டு மேற்பகுதி அரைத் தாமரை மொட்டை ஒக்கும். மரத்தாலான செப்புகள் இப்பொழுதும் காணப்படு கின்றன. வழுவழு வென்று நல்ல வண்ணங்கள் பூசப்பட்டு வட்டமாயிருக்கும்.

*''செப்புக்குவி முலையார் சேல்விழியும் வானரமும்*
*கொப்புக் குழைதாவும் குற்றுலம்''*

என்று பாடுவார் திரிகூடராசப்பக் கவிராயர். மூடிய செப்பைக் காணும்போது அது இரண்டு பகுதிகளைக் கொண்டது எனக் காட்சியளவையில் சொல்ல முடியாது. செப்புச் சேர்ந்திருப்பது போல, மாறுபட்ட குடியும் ஒன்றுகச் சேர்ந்திருப்பது போலக் காணப்பட்டாலும் அவர் அகன்றே நிற்பர். செப்பின் தோற்றம் ஒன்று; ஆனல் அதன் ஆக்கம் இரண்டு.

*செப்பின் புணர்ச்சி போல் கூடினும் கூடாதே*
*உட்பகை உற்ற குடி* (887)

பழங்காலச் செப்பின் அமைப்பு முறையைப் பின் பற்றியே இக்காலத்துக் காணப்படும் குங்குமச் சிமிழ்கள் அமைந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

5. கூத்தாட்டவை

இசை, ஓவியம், சிலேவடித்தல், ஆடல் ஆகியவை நுண்கலைகளில் இன்று அடங்குகின்றன. கூத்து நிகழ் கின்ற இடம் ஒன்று பற்றித் திருக்குறட்பா ஒன்றிலிருந்து தெரிந்து கொள்கிறோம்.

*கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்லம்*
*போக்கும் அதுவிளிந் தற்று* (332)

கூத்தைக் காண மக்கள் திருவள்ளுவர் காலத்திலேயே திரண்டு வந்தனர் என்று தெரிகின்றது. சிலப்பதிகாரத்தில் சொல்லப்படும் 'அரங்கு' என்ற சொல் திருக்குறளில் சூதாடு தற்குரிய கோடுகள் - கட்டம்—என்பதைக் குறிக்கின்றது (401). கூத்து என்ற சொல் சிறப்பாக நாட்டியத்தைக் குறித்தாலும் அது ஆடலேயும் உள்ளடக்கியது. கூத்து என்பது முத்தமிழும் விரவப் பெற்றது. அவை இயல், இசை, நாடகம் என்பதாகும். இசைபற்றி ஒரு குறட்பா கூறு கிறது.

6. பண்ணும் பாட்டும்

*பண்என்னும் பாடற்கு இயைபின் றேல் கண்என்னும்*
*கண்ணோட்டம் இல்லாத கண்.* (573)

இசையில் வாய்ப்பாடலுக்கு எப்பொழுதும் சிறப்பிருந்தது. பாட்டுடன் இணையாவிட்டால் பண் என்பதில்லே. பாட்டிற்கு இசையுள்ளது பண். இவ் 'இயைபு' பின் 'இசை' என வழங்கலாயிற்று. 'பண் என் பயத்ததாம் பாடல் தொழி லோடு பொருத்தம் இன்றாயின்; அது போலக் கண் என்ன பயத்ததாம் கண்ணோட்டம் இல்லாவிடத்து'', என்று இக் குறளுக்குப் பரிமேலழகர் உரை எழுதுகிறார். அவர் விளக்க வுரையாவது: ''பண், கண் என்பன சாதிப்பெயர். பண் களாவன பாலே, யாழ் முதலிய நூற்று மூன்று. பாடல் தொழில்களாவன யாழின்கண் வார்தல் முதலிய எட்டும்,

பண்ணல் முதலிய எட்டும், மிடற்றின்கண் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம் என்னும் ஐந்தும், பெருவண்ணம், இடை வண்ணம், வனப்பு வண்ணம் முதலிய வண்ணங்கள் எழுபத்தாறுமாம். இவற்றோடு இயையாத வழிப்பண்ணால் பயனில்லாதவாறு போலக் கண்ணோட்டத்து இயையாத வழிக் கண்ணாற் பயனில்லை என்பதாம்.''

''பண் என்ன பயனுடைத்தாம் பாடலொடு பொருந் தாதாயின்,'' என்று மணக்குடவரும் பரிப்பெருமாளும் உரையெழுதுகின்றனர்.

''பாடுதலாவது பாடல் தொழில். அஃதாவது மந்தம், உச்சம், குடிலம் முதலாயின. அதனோடு பொருத்தம் இன்மையாவது எடுத்துக் கொண்ட பண் இவ்விடங்களில் ஒவ்வாது நின்று கேட்டார்க்கு இன்பம் பயவாமை. இது, பிறர்க்கு இன்பம் பயவா தென்றது'' என்று பரிப்பெருமாள் விளக்கவுரை எழுதுகிறார்.

''சங்கீத லட்சணம் இல்லாத பாட்டுப் பாட்டாமோ?'' என்று வினவுகிறார் பாரதியார்.

''இலக்கண முறையான் இசை அறியாது மயக்க மாந்தர் தமது இயற்கைச் செவியினால் கேட்டு மற்று இது மிகவும் இனியது ஓர் பண் என்றார் ஆயினும், அதனை நாம் பண் என்று சொல்லோம்; என்னையோ எனின் பாடல் தூக்காகிய இசைத் தொடர்பின்கண் தான் வந்து மேவி அவ்விசை நூல் யாப்பிற்கு இனிது இயைபின்றி நிற்கு மாயின்; மற்று அதுபோல ஈண்டு நுண்ணுணர்வில்லோர் கண் என்றாராயினும் அதனைக் கண் என்று சொல்லோம், கண்ணோட்டம் இல்லாத கண்ணினை'', என்று காலிங்கர் உரை எழுதுகிறார். பாடலொடு அல்லது பாடல் தொழில் களொடு பொருந்தாதது பண் அல்ல. பாவென்பதென்ன? பண் என்பது யாது?

*பாவோ டணைத லிசையென்றார்; பண்ணென்றார்*
*மேவார் பெருந்தான மெட்டானும்—பாவாய்!*
*எடுத்தல் முதலா விருநான்கும் பண்ணிப்*
*படுத்தமையாற் பண்ணென்று பார்*

என்று அடியார்க்கு நல்லார் அளிக்கும் மேற்கோட்பாடல் தெளிவாக்குகின்றது. ‘‘பல இயற்பாக்களுடனே நிறத்தை இசைத்தலால் இசையென்று பெயராம். நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணுக்கு, உதடு, பல், தலை என்ற எட்டு இடங்களிலும், எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என்ற எட்டுத் தொழில் களாலும் பண்ணிப் படுதலால் பண்ணென்று பெயராயிற்று’’ என்று அடியார்க்கு நல்லார் விளக்குகிறார். நிறம் என்பது பண்ணைக் குறிக்கும். இக்காலத்தில் இதை இராகம் என்று கொள்ளலாம்.

*7. அறைபறை*

தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக் கருவி என்பவை பற்றியும் திருக்குறளில் காண்கின்றோம். பறை தோற்கருவி யாகும். பறை மக்களுக்குச் செய்தி சொல்லப் பயன்படுத்தப் பட்ட கருவி. தொலைவிலும் அதன் ஒலி எட்டக் கூடியது.

*அறைபறை அன்னர் கயவர் தாம்கேட்ட*
*மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான்* (1076)

அறை பறை என்ற சொல்லாட்சி இக்கால மொழியில் ஒரு விளம்பரக் கருவி என்ற பொருளுடையது.

தலைவன் பிரிவாற்றுமையால் வருந்தும் தலைவி நெஞ் சினுள் மறைத்து வைத்திருக்கும் ஏக்கத்தை ஊராரறியாமல் மூடி வைப்பது முடியாது. கண்களோ பலருமறியத் தட்டிச் சாற்றும் பறைபோலக் கண்ணீரை உகுக்கின்றன. தலைவி சொல்கின்றாள் :

*மறைபெறல் ஊரார்க் கரிதன்றால் எம்போல்*
*அறைபறை கண்ணார் அகத்து* (1180)

குழல் என்ற துளைக்கருவியும் யாழ் என்ற நரம்புக்கருவியும் இனிய ஓசையை எழுப்புவன.

8. குழலும் யாழும்

*குழல் இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்*
*மழலைச் சொல் கேளா தவர்* (66)

மாலைப் பொழுதில் ஆயன் குழலிசைப்பாள். ஆயன் குழல் மாலை வந்து விட்டது எனத் தூது சொல்கிறது. தலைவன் பிரிவினால் வாடும் தலைவிக்கும் குழல் மாலையின் வரவுணர்த்தும். ஆயன் இனிய குழலோசையோ தலைவிக்கு அழல் போலக் கொல்லும் படையாய்விட்டது.

*அழல் போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்*
*குழல் போலும் கொல்லும் படை* (1228)

குழலினிமையை மட்டுமன்றி யாழின் இனிமை பற்றியும் மற்றொரு குறள் இயம்புகிறது. செவ்வையாயிருக்கும் அம்பு கொடுமையைச் செய்யும். வளைவாயமைந்த யாழ் இசையால் இன்பம் பயக்கும். அதைப் போல ஒருவரை அவரது செயலைக் கண்டு மதிப்பிட வேண்டும்; உருவத்தைக் கண்டல்ல. யாழின் இனிமையொடு அதன் அமைப்பையும் ஒரு குறட்பா விளக்குகின்றது.

*கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன*
*வினைபடு பாலாற் கொளல்* (279)

9. சுதை வண்ணம்

வெண்மைக்கு உவமை எது? பால்போல் வெண்மையெனலாம். யானைத் தந்தம்போல் வெண்மையென்றும் பனிக்கட்டி போன்று வெண்மையென்றும் சொல்வதுண்டு.

வெண்மையாயிருப்பதனாலன்றோ வெண்ணெய்க்கு அப்பெயர் வந்தது. ''ஒரு கண்ணுக்குள் வெண்ணெயும் ஒரு கண்ணுக் குள் சுண்ணாம்பும் வைக்கலாமா?'' என்ற பழமொழி பலரும் அறிந்தது. ஓரவஞ்சகம் கூடாது என்பதுவே அதன் பொருள். சுண்ணாம்பின் வெண்மை பற்றி ஒரு குறட்பா உரைக்கிறது. சுதையென்பது சுண்ணாம்பு, மணல், நீர் கூடிய கலவை. கட்டட வேலையில் செங்கல்லுடன் சுதையும் சேர்த்தே பயன்படுத்தப்படுகிறது. வானளாவி நிற்கும் கோபுரங்களில் வாயிலுக்குமேல் அடுக்கடுக்கான தளங்கள் சுதையாலானவை. ஆயிரக்கணக்கான சுதையாலான உரு வங்களைப் பார்க்கிறோம். சுதையுருவங்கள் செய்வது கலை ஞனுக்கு எளிது. உழைப்பு ஒரே தன்மைத் தென்றாலும் கல்லிற் செதுக்குவதில் இடர்ப்பாடு உண்டு. பிழையைத் திருத்திக்கொள்ள முடியாது. வெண்மை நிறம் சுதைக்கு இயல்பு. மிக்க—ஒத்த அறிவுடையார் முன் சுதைபோலும் வெண்மை நிறத்தைக் கொள்க என்று ஒரு குறட்பா அறிவு புகட்டுகிறது.

*ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் வெளியார்முன்*
*வான்சுதை வண்ணங் கொளல்* (714)

'வெளியர் என்பது வெள்ளியர்; அறிவுக்கேடர்' என்று காலிங்கர் விளக்குகிறார்.

### 10. பொன்னும் அணியும்

தங்கத்தைக் குறிக்கும் பொன் இரண்டு குறட்பாக்களில் இடம் பெற்றுள்ளது. அறிவுடையார் பொறுத்தாரைப் பொன் போற் பொதிந்து வைப்பர். அஃதாவது போற்றுவர் என்பதாம். (155) நெருப்பில் இட இடப்பொன் ஒளிரும் என் கிறது இன்னொரு குறள்.

*சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்*
*சுடச்சுட நோற்கிற் பவர்க்கு* (267)

தங்கத்தை நெருப்பிலிட்டுப் பின் அடித்தே அணிகள் செய்யப்படுகின்றன. பொன் அணிகள் பற்றித் திருக்குறள் குறிப்பிடவில்லையாயினும் பொன்னை நெருப்பிலிடுதல் என்ற குறிப்பு அணிகள் செய்யப் பொன் பயன்பட்டிருக்கலாம் என்ற குறிப்பை அளிக்கிறது.

அணிகள் அழகுப் பொருள்களாகும். பயன்படும் மூலப் பொருள் எதுவானலும் உருவாகும் அணி ஒரு கலைப்படைப் பாய் மிளிர்கிறது. பெண்கள் அணியும் வளை பல குறட்பாக் களில் இடம் பெறுகிறது. 'தொடியொடு தொல்கவின் வாடிய தோள் (1235) என்றும், 'தொடியொடு தோள் நெகிழ' (1236) என்றும் தோள்வளை குறிக்கப்படுகிறது. பெண்ணணிந்த பைந்தொடி இரண்டு குறட்பாக்களில் இடம் பெறுகின்றது (1234, 1238). 'பைந்தொடி' என்பதற்குப் 'பசிய பொன்னாற் செய்த தொடி' என்று பரிமேலழகர் விளக்கவுரை எழுதுகிறார். மணக்குடவரோ 'பசுத்தவளை' என்று உரை எழுதி மரகதத்திறைற் செய்த வளை என்று பொருள் சொல்கிறார். ஆய்தொடி (911) என்றும் குறுந்தொடி (1135) என்றும், சொறி தொடி (1275) என்றும் அடைமொழிகள் கொடுக்கப்படுகின்றன. ஆராய்ந்து பொறுக்கப்பட்ட வளையல்கள், சிறிய வளையல்கள், நெருங்கிய வளையல்கள் என்று இவை பொருள்படும்.

தலைவன் பிரிந்து செல்லவும் முன்கை வளையல்கள் தாமே கழன்று விழுந்து விடுகின்றன (1157). மெய்யால் கூடியிருந்து மனத்தால் பிரிந்த தலைமகன் குறிப்பைக் கைவளையல்கள் அறிவிக்கின்றன (1277).

## 11. முடிப்புரை

இதுகாறும் திருக்குறளில் நுண்கலைகள் உலவுகின்றனவா என்பதைக் காண முயன்றோம், நடந்து சென்ற பாதையில் கண்டவை நுண்கலைகளைக் காட்டுவனவா என்பதை முடிவு செய்து கொள்வதை அறிஞர்க்கு விட்டு விடுதல் நன்று.

# படியெடுத்துரைத்துக் காட்டும் படித்தன்று படிவம்

அரக்கியர் குழுவின் நடுவில் அனுமன் சீதையைக் கண்டான். ''அழுக்கடைந்த மணியைப் போன்றவள்; கதிரவன் ஒளியைக் கண்ட திங்களைப் போன்ற தேய்ந்த ஒளிபடைத்தவள். கூந்தலும் சிக்குப் பிடித்துள்ளது; எனினும் அவள் கற்பும் அதைக் காக்கும் திறனும் வழுவாமல் உள்ளாள். அறத்துக்கு ஈறுண்டோ?'' என்று அனுமன் சொல்லிக் கொண்டான். எதைப் புகழ்வது? இராகவன் புயவலியையா? பெண்கள் திலகத்தின் மனத்தின் மாண்பையா? 'இராமன் தவஞ்செய்திலனே!' என்று அனுமன் ஐயுறுகின்றான்.சீதை பிறத்தலால் குடிப்பிறப்பும் பெண் பிறப்பும் உயர்த்து நின்றன. கணவனையே நோற்றுச் சீதை தவம் செய்வதை இராமன் தன் கமலக் கண்களால் பார்க்கக் கொடுத்து வைத்திலனே. அவ்வளவு தான் அவன் செய்த தவம். இவ்வாறெல்லாம் அனுமன் எண்ணினான்.

*பேண நோற்றது மனைப் பிறவி பெண்மை போல்*
*நாண நோற்றுயர்ந்தது நங்கை தோன்றலால்*
*மாண நோற்றீண்டிவள் இருந்த வாறெலாம்*
*காண நோற்றிலன் அவன் கமலக் கண்களால்*

அனுமன் இவ்வாறெல்லாம் எண்ணிக் கொண்டிருக்கையில் துன்று பூஞ்சோலைவாய் அரக்கன் தோன்றினான். கிளர்ந்த காதலும் சீற்றமும் எதிரெதிர் நின்று போராட,

சீதையை அதட்டிச் சென்றான் இராவணன். அவனைத் தொடர்ந்து அரக்கியர் சீதையை அச்சுறுத்தினர். திரிசடையின் மொழிகேட்டு அவர்களும் அடங்கினர். அரக்கியர் உறங்கவும் சீதை ஆவி துறப்பதைத் தவிர வேறு உய்யும் வழியில்லையென்ற முடிவுக்கு வந்தாள். அப்பொழுது அனுமன் அவள் முன் தோன்றி 'அண்டர் நாயகன் அருள் தூதன் யான்' என அவளுக்கறிவித்தான். இராமனுடைய தூதனே வந்த அனுமன் எனத் தெளிந்த சீதை அருவி நீரொழுகும் கண்களுடன், "ஐய! சொல், ஐயன் மேனி எப்படிக்கு அறிதி" என்றாள். இராமன் எழிலுருவத்தைக் கேட்டாவது மன அமைதிபெறலாம் என்ற சீதை அனுமனைக் கேட்டாள். உவமையில்லாத அவ்வுருவத்தைச் சொல்வது எளிதன்று என்று தொடங்கி பாதாதிகேசமாய் இராமன் மேனியழகை அனுமன் விரித்துரைத்தான்.

*படியெடுத் துரைத்துக் காட்டும் படித்தன்று படிவம் பண்பின்*
*முடிவுள உவம மெல்லாம் இலக்கணம் ஒழியும் முன்னர்த்*
*துடியிடை அடையாளத்தின் தொடர் அவை தொடர்தியென்ன*
*அடி முதன் முடியின் காறும் அறிவுற அனுமன் சொல்வான்.*

புலவர்கள் இராமன் திருவடியைச் சேயிதழ்த் தாமரை யென்றனர். இருந்தாலும் சொல்வது அவ்வளவு எளிதன்று. செந்தாமரை இதழ்களும் அவன் சேவடிகளுக்கு குறைந்ததே. பவளமும் குவளையும் போன்றவை கூட அத்திருவடிகள்.

*சேயிதழ்த் தாமரை யென்று சேனுளோர்*
*ஏயினர் அதன்றுனை யெளிய தில்லையாம்*
*நாயகன் திருவடி குறித்து நாட்டுறின்*
*பாய்திரைப் பவளமும் குவளைப் பண்பினும்*

திருவடிவிரல்கள் கிழக்குதிக்கும் சூரியன் கதிர்கள் போன்றவை என்கிறான் அனுமன். நகங்களின் சிறப்பையும் புற

வடியின் சிறப்பையும் கணைக்கால்களின் அழகையும் அனுமன் எடுத்துரைத்தான்.

> 'மறங்கிளர் மதகரி கரமும் நாணின
> குறங்கினுக் குவமை யிவ்வுலகிற் கூடுமோ.'

மதயானைகளின் துதிக்கைகள் இராமன் தொடைகளைக் கண்டு நாணின என்றால் வேறு உவமை இவ்வுலகில் ஏது? என்று அனுமன் சொன்னான். அவனுடைய கொப்பூழ் அழகை எவ்வாறு விவரிப்பது? கங்கையில் தோன்றும் நீர்ச் சுழியா? அது பொருந்தாது. மகிழம் பூவை ஒத்ததா? வேறு உபமானத்துக்கு எங்கு செல்வது? இடையறாது திருமகள் வாசஞ் செய்யும் மார்பினன். அவனுடைய திருக்கைகள் தந்தங்கள் பொருந்திய ஐராவதத்தின் துதிக்கையை ஒத் திருக்கின்றன என்று ஒருவாறு சொல்லலாம். அவன் தோள் கள் போல் மலை உயர்ந்தது என்று சொல்ல முடியாது. மலைக்கு ஒளியில்லை; திருவில்லை; சிவதனுசை யொடித்த பெருமையில்லையே.

> திரண்டில ஒளியில திருவின் சேர்வில
> முரண்டரு மேருவில் முரிய மூரி நாண்
> புரண்டில புகழில பொருப்பென் றென்று போன்று
> இரண்டில் புயங்களுக் குவம மேற்குமோ

கடலில் தோன்றும் சங்கமும் பாக்குமரமும் அவன் கழுத் துக்கு உவமம் என்று சிற்றறிவுடையோர் சொல்வர். உடற் பட வொண்ணுமோ. ஐயன் கண்களுங் கமலம். திருமுகமும் தாமரை. திங்களென்று சொல்லலாமென்றால் அது வளர்ந்து தேயக் கூடியதாயிற்றே.

> அண்ணல் தன் திருமுகம் கமலமா மெனில்
> கண்ணினுக் குவமை வேறுயாது காட்டுகேன்
> தண்மதியாமென உரைக்கத் தக்கதோ.

இராமபிரானது செவ்வாய் செங்கேழ் நளினம் என்றால் அத்தாமரை தனக்குப் பொருந்தாது என்று வெட்கும். அது

பவளமோ? அவனுடைய பல்லினழகை என்னென்றுரைப்பது?

*முத்தம் கொல்லோ முழுநிலவின் முறியின் திறனோ முறையமுதச்*
*சொத்தின் துள்ளி வெள்ளியினந் தொடுத்த கொல்லோ துறையறத்தின்*
*வித்து முளைத்த அங்குரங்கொல், வேறே சிலகொல் மெய்ம் முகிழ்த்த*
*தொத்தின் தொகை கொல் யாதென்று பல்லுக்கு உவமை சொல்லுகேன்.*

திருமுக்கின் அழகைச் சொல்லி, இராமன் புருவங்களுக்கு அவன் வளைத்த வில்லை உவமித்தான் அனுமன்.

*பனிக்கச் சுரந்துக் கரன் முதலோர் கவந்தப் படையும் பல்பேயும்*
*தனிக்கைச் சிலையும் வானவரும் முனிவர் குழுவும் தனியறனும்*
*இனிக் கட்டழிந்தது அரக்கர் குலமெனும் சுருதி யீரிரண்டும்*
*குனிக்கக் குனித்த புருவத்துக் குவமை நீயே கோடியால்*

'நீயே உவமம் கண்டு கொள்வாயாக' என்று சீதைக்கு அனுமன் உரைத்தான்.

'வில்லினையொத்த புருவம் வளைத்தனை, வேலவா' என்ற பாரதியின் சொற்களை ஒப்பிட்டுப் பார்க்கவும். எட்டாம் நாள் வானில் ஒளிவீசும் பாதிமதி போன்றது அவன் நெற்றி. அவன் குழல் நீண்டு, திரண்டு, இருண்டு, நெடுநீலம் பூண்டு, சுருண்டு வேறு மணமுள்ள பூக்கள் வேண்டுமென்றில்லாமல் இயற்கை மணம் கமழுகின்றது. இப்பொழுது சடையாயுள்ளது: மத்த யானையும் அவன் நடை கண்டு வருந்தாதோ, தனக்கு அத்தகைய நடையில்லையே என்று!

புல்லல் ஏற்ற திருமகளும் பூவும் பொருந்தப் புவியேழும்
எல்லே ஏற்ற நெடுஞ் செல்வம் எதிர்ந்த ஞான்றும்
அஃதின்றி
அல்லல் ஏற்ற கானகத்தும் அழியா நடையை இழிவான
மல்லல் ஏற்றின் உளதென்ருல் மத்தயானை வருந்தாதோ.

அனுமனை இராமன் சொல்லின் செல்வன் என்று சிறப்பித்துச் சொன்ஞன். அத்தகைய ஏற்றம் பெற்ற அனுமன் இராமனுடைய எழிலுருவத்தைத் திருவடி முதல் முடிவரை பல உவமைகள் சொல்லி அவையனைத்தும் எவ்வாறு ஒவ்வாது போகின்றன என்றும் சீதைக்குச் சொல்கின்ருன்.

'இன்ன மொழிய அம்மொழி கேட்டு எரியினிட்ட
மெழுகென்னத்
தன்னையறியாது அயர்வாளைத் தரையின்,

வணங்கிஞன் அனுமன். இராமாயணப் பாத்திரங்களில் சீதைக்கடுத்தபடி இராமனிடம் அன்பு காட்டுபவன் அனுமன் என்று கொள்வது பொருந்தும். எனவே இராமனைப்பற்றிய அனுமன் கருத்தோவியம் சீதையின் உள்ளத்தைக் கரைத்ததில் வியப்பொன்றுமில்லை.

# சொல்லேருழவன் இராமன்

இராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டத்துக்குத் தனிச் சிறப்புண்டு. சீதையின் பிரிவு இராமனைப் பெரிதும் வருத்தியது. அண்ணனும் தம்பியும் மட்டும் சீதை இருக்குமிடத்தைக் கண்டு பிடித்துவிட முடியாது. வாலிக்கு அஞ்சி ஓடியொளித்திருந்த சுக்கிரீவன் நட்பு இராமனுக்குக் கிட்டியது சுக்கிரீவனுக்கு உறுதுணையாய் நின்ற 'சொல்லின் செல்வன்' அனுமன் இராமன் பணியில் தன் உடல், பொருள், ஆவியனைத்தையும் செலவிட்டான். தம்பியின் தாரத்தை அபகரித்த வாலியை அழித்துவிடுவதாக இராமன் சொல்லக் கேட்டு சுக்கிரீவன் மனமகிழ்ந்தான்.

*உலகம் ஏழினெடு ஏழும் வந்தவன் உயிர்க்குதவி*
*விலகும் என்னினும் வில்லிடை வாளியின் வீட்டித்*
*தலைமையோடு நின்தாரமும் உனக்கின்று தருவேன்*
*புலமையோய்! அவன் உறைவிடம் காட்டு என்று*
*புகன்றான்*

(விலகும் என்னினும்—தடுக்கும் என்றாலும்; வில்லிடைவாளி—வில்லினின்று செல்லும் அம்பினால்; வீட்டி—அழித்து)

சொன்ன சொல்லின்படி இராமனும் வாலியின் மார்பைத் துளைத்துச் செல்லும் கணையை ஏவி வாலியைக் கொன்றான். சுக்கிரீவன் வானரர்களுக்கு அரசனானான். கார்காலம் கழித்துத்தானே சீதை இருக்குமிடத்தைத் தேடி அவளை மீட்டுக்

கொண்டு வரும் முயற்சி துவங்கவேண்டும். கார்காலத்தில் குறிஞ்சி நிலத்து வேங்கை மலர்கள் குறமகளிர் கூந்தல் போல் மணம் வீசின; நெய்தல் நிலத்துப் புன்னை மலர்கள் செம்படவச்சிகள் கூந்தல் போல் நாறின; மருத நிலத்து உழத்தியர் கூந்தல்போல் செங்கழு நீர்க் கொடிகள் பூத்துக் குலுங்கி நாறின; முல்லை நிலத்து ஆய்ச்சியர் கூந்தல்போல முல்லைக் கொடிகள் நறுமணம் வீசின. காரைக் கண்ட இராமன் சீதையின் பிரிவுத்துயர்க்கொரு கரை காணுன்.

*தேரைக்கொண்ட பேரல்குலாள் திருமுகம் காணுன்*
*ஆரைக் கண்டு உயிர் ஆற்றுவான், நல்லுணர் வழிந்தான்*
*மாரற் கெண்ணில் பல்லாயிரம் மலர்க்கணை வகுத்த*
*காரைக் கண்டனன், வெந்துயர்க்கொரு கரை காணுன்.*

(தேரைக் கொண்ட பேரல் குலாள் சீதை)

ஆம், மன்மதனுக்கு எண்ணற்ற மலர்க்கணைகளைப் படைத்த கார்காலத்தைக் கண்ட இராமன் தன்னைவாட்டும் வெந்துயர்க்கொரு கரை காணவில்லை. மழைக்காலம் முடிந்தும் மதுவிலும் மாதரிலும் மயங்கிக் கிடந்தான் சுக்கிரீவன். சீதையைத் தேடும் பணியில் தன் படைகளுடன் சுக்கிரீவன் குறித்த காலத்தில் வரவில்லை. வெகுண்டெழுந்த இலட்சுமணன் சீற்றத்தை மாற்றி, தவறுகளுக்கு வருந்தி சுக்கிரீவன் தன் படைகளுடன் இராமனிடம் வந்து சீதையைத் தேட வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு என்ற நான்கு திசைகளுக்கும் திறமை வாய்ந்தவர்களை அனுப்பினுன். தெற்கு நோக்கிச் சென்றவன் அனுமன். அனுமனுக்கும் அவனுடன் தென்திசை நோக்கிச் சென்றவர்கட்கும் சீதையைத் தேட வேண்டிய இடங்களையெல்லாம் சுக்கிரீவன் விவரித்துச் சொன்னுன். முத்துக்களை இழுத்துக் கொண்டும், பொன் துகளை அள்ளிக் கொண்டும், மரங்களை உருட்டிக் கொண்டும், மலைப்பாறைகளைப் புரட்டிக் கொண்டும், விலங்குகளும் தன் வேகத்தைத் தாங்க முடியாதபடி ஓடுகின்ற கோதாவிரியாறு பற்றிச் சொன்னுன். வடமொழிக்கும் தென்மொழிக்கும் எல்லைக்கோடு ஒன்றுண்டு. அதுவே திருவேங்கடம்.

வடசொற்கும் தென்சொற்கும் வரம்பிற்ருய் நான்
மறையும் மற்றை நூலும்
இடைசொற்ற பொருட்கெல்லாம் எல்லையதாய்
நல்லறத்துக்கு ஈருய் வேறு
புடைசுற்றுந் துணை வேறு இன்றிப் புகழ் பொதிந்த
மெய்யே போற் பூத்து நின்ற
அடைசுற்றுந் தண்சாரலோங்கிய வேங்கடத்திற்
சென்றடைவீர் மாதோ.

(புடை சுற்றும்—பக்கத்திலுள்ள; துணை வேறு இன்றி—உவமானப் பொருள் வேருென்றுமின்றி)

இப்புறம் அப்புறம் என்றில்லாமல் எப்புறத்தும் தேடும்படி சுக்கிரீவன் வானர வீரர்களுக்கு ஆணையிட்டான். அனுமனிடம் உள்ள நம்பிக்கையால் அவனே சீதையைத் தேடிக் கண்டு பிடிக்கும் திறமையுள்ளவன் என்று இராமன் ஒரு சொல்லோவியம் தீட்டினுன். அனுமனுக்குச் சொல்வதாயிருந்தாலும், மனைவியின் நினைப்புபிறர் கேட்கும் வகையில் அமைந்தாலும், தனிமொழியாக அமைந்தது என்றே கொள்ளவேண்டும்.

பாற்கடலில் பிறந்த பவளங்களுக்குச் செம்பஞ்சிக் குழம்பை ஊட்டிப் பல சந்திரர்களை அவற்றில் பதித்தது போன்றவை சீதையின் கால் விரல்கள். தாமரையும் பிறவும் அவள் கால்களுக்கு உவமையாகா. மாதர் புறவடிகளுக்கு ஆமை உவமையாகும். சீதையைக் குறித்து அவ்வாறு சொல்வது இழுக்காகும். ஓவியர் எழுதற்கரிய எழில் வாய்ந்தது சீதையின் கணைக்கால்கள். புலவர்கள் சினை வரால் மீனையும், அம்பருத்தூணியையும், முதிர்ந்த நெற்பயிரையும் மாதர் கணைக்காலுக்கு இணையாக உரைப்பர். அதையே மீட்டும் சொல்லி என்ன பயன்? கடைந்தெடுத்த கால்களையும் முழுமை பெற்ற உறுப்புக்களையும் உடையவள் சீதை. இடையிருந்தாலன்றோ அவளிடைக்கு உவமை சொல்ல முடியும்! ஆலிலை போலும் வெண் தட்டைப் போன்றதும் அவள் வயிறு என்ருல் அது புனைந்துரையே யாகும்.

கங்கை நீரில் தோன்றும் சுழி போன்றது அவள் கொப்பூழ். உருவிலான் (மன்மதன்) முன் தோற்றுப்போன மூன்றுலக மாதர்களையும் குறிப்பது அவள் வயிற்றின் மடிப்புகள். கரும்பு கண்டது போலும் மூங்கிலைக் கண்டது போலும் உள அவளுடைய தோள்கள். அவளது மணிக்கையைக் காந்தள் மலரென்று சொல்லவா, அன்றி மகரயாழ் என்று கூறுவதா? அசோக மரத்தின் இளந்தளிர்களும் கமலமென்பூ இதழ்களும் அவளுடைய கால்களுக்குத் தோற்குமென்றால் அவள் கைகளுக்கு உவமையேது? கிளியின் மூக்கைச் சீதையின் கைந்நகங்கட்கு ஒப்பிடலாமோ? பந்தர் இளங்கமுகும் சங்கமும் சீதையின் கழுத்துக்கு உவமையென்று நினைப்பினும் குற்றம். பவளமும் பைங்குமுதப்போதும் இந்திர கோபமும் இலவமும் சீதையின் வாய்க்குமுன் மிக வெண்மையாகவே தோன்றும் சுவைக்கும் போதுதான் அமிழ்தமும் தேனும் மகிழ்விக்கும். உரைக்கும் போதே சீதையின் வாய் உவகை ஊற்றைக் கிட்டவைக்கும். அவளுடைய பற்கள் முத்தையும் முல்லையரும்புகளையும் ஒக்கும். சீதையின் மூக்கு தொளையுள்ள குமிழம்பூவையும் எட்பூவையும் போன்றது. எனினும், ஓவியர் எழுதுவதற்கு அவைகளில் பொன்—மணி ஆகியவற்றின் ஒளிக்கு எங்கே போவது? வள்ளைக் கொடியின் இலை, கத்தரிக்கோல் காதுகளுக்கு உவமைப் பொருள்கள். வெண்மையான தோடுகள் செய்த தவப்பயனே சீதையின் காதுகள்.

***பெரியவாய்ப் பரவையொவ்வா பிறிதொன்று நினைந்து பேச***
***உரியவாயொருவர் உள்ளத் தொடுங்குவ அல்ல உண்மை***
***தெரிய ஆயிரக் கால் நோக்கில் தேவர்க்குந்தேவனென்னக்***
***கரியவாய் வெளியவாகும் வாட்டடங் கண்களம்மா.***

சீதையின் கரிய—வெண்மைக் கண்களை ஒரு தடவைக்கு ஆயிரம் தடவைகள் பார்த்தாலும் பரந்து விரிந்த கடலைத் தான் எண்ணத் தோன்றும்—ஆம், ஒளி பொருந்திய, விசாலமான கண்கள்; வேலை இரு கூறுகளாகப் பிரித்து

வைத்த கண்களுக்கு அரணாய் நிற்கும் புருவங்களுக்கு மன்மதன் வில்லும் உவமையாகாது. ஏனெனில் மன்மதன் வில்லில் இரண்டு நுனிகளும் பொருந்தி நிற்கும்.

முழுமதி ஒளியுடன் பாதிமதி ஒக்கும் சிறிதளவில் சீதையின் நெற்றி.

*கொண்டலின் குழவி ஆம்பல் குனிசிலை வள்ளை கொற்றக்*
*கெண்டை ஒண் தரளம் என்றிக் கேண்மைய கிடந்த திங்கள்*
*மண்டிலம் வதனமென்று வைத்தனன் விதியே நீயப்*
*புண்டரிகத்தை யுற்ற பொழுது பொருந்தித் தேர்வாய்.*

(ஒண்தரளம்—ஒளி பொருந்திய முத்து;விதி —பிரமன்)

கார்மேகக் கொழுந்தையும், ஆம்பலையும், குனித்த வில்லையும், வள்ளைக் கொடியையும் கெண்டை மீன்களையும், ஒளிபொருந்திய முத்துக்களையும் கொண்ட சந்திர மண்டலத்தை நான்முகன் சீதையின் முகமென்று படைத்தான். சீதையை நெருங்கிக் காணும் போது இவ்வுண்மையை நீ தெரிந்து கொள்வாய்.

*காரினைக் கழித்துக் கட்டிக் கள்ளினோடு ஆவியூட்டிப்*
*பேரிருட் பிழம்பு தோய்த்து நெறிவுறீஇப் பிறங்குகற்றைச்*
*சோர் குழற்கொரு தியென்று சும்மை செய்தனைய தம்மா*
*நேர்மையைப் பருமை செய்த நிறை நறுங்கூந்தல் நீத்தம்.*

(நெறிவுறீஇ—நேர்படச் செய்து; சும்மை—சுமை; நீத்தம்—தொகுதி)

கார்மேகத்தை வெட்டிக் கட்டி, தேனூட்டி, அகில் முதலிய நறுமணப் புகையூட்டி, பேரிருட் பிழம்பிலே தோய்த்து, நேர்படச் செய்து, சுமையாக் வைத்தாற் போன்றது சீதையின் கற்றைக் குழல்.

*புல்லிதழ் கமலத் தெய்வப் பூவிற்குமுண்டு, பொற்பின்*
*எல்லையின் மதிக்கும் உண்டாம் களங்கமென்றுரைக்கும்*
*ஏதம்*
*அல்லவும் சிறிது குற்றம் அகன்றில, அன்னம் அன்ன*
*நல்லியலாளுக் கெல்லா நலனன்றிப் பிறிதுண்டன்றால்.*

(ஏதம்—குற்றம்)

கமலப் பூவிலும் புறவிதழ்கள் உண்டு; அழகின் எல்லையை எட்டிப் பிடிக்கும் திங்களுக்கும் களங்கம் உண்டு. எவ்வழகுப் பொருள் தான் முழுமை பெற்றிருக்கிறது? அன்னம் ஒத்த நடை பயிலும் சீதைக்கு முழுவதும் நன்மையே அன்றி வேறேது குறை? எல்லா உத்தம இலக்கணங்களும் அமையப் பெற்றவளன்றோ சீதை!

குழலோசையோடு யாழ் ஒலியைக் குழைத்து, குயிலின் குரலோடு கிளியின் கிளவியைக் கூட்டி, மழலையோடு பிற இன் சொற்களைக் கலந்து சீதையின் சொற்களைப் படைத்தான் அலர்மேல் உறை அந்தணனாகிய பிரமன். அவள் குரலுக்கு உவமை காட்டக் குற்றமற்ற பொருளையும் படைத்தானில்லை, ஒரு வேளை இனிப் படைப்பானோ?

*குழல்படைத்து யாழைச் செய்து குயிலொடு கிளியுங்*
*கூட்டி*
*மழலையும் பிறவும் தந்து வடித்தகைம்மலரின் மேலோன்*
*இழைபொரு முலையினாள்தன் இன்சொற்கள் இயையச்*
*செய்தான்*
*பிழையிலது உவமை காட்டப் பெற்றிலன், பெறும்*
*கொல் இன்னும்.*

(மலரின்மேலோன்—பிரமன்)

தேனும் பாலும் தேவாமிர்தமும் நாவிற்கு இன்பம் தருமே யன்றி வேறொன்றில்லை. சீதையின் சொற்கள் செவிக்கின்பம் அளிக்கின்றன. அன்னமும் மடப்பிடியும் தேவர்களும் கண்டு மயங்கும்படியான நடையையுடையன. சீதையின் நடையை அவற்றுடன் ஒப்பிடுவது தகாது. புலமை நிறைந்த

பாவலர்களின் நாவிலிருந்து வரும் இனிமையான சொற்களைக் கொண்டு யாத்த கவிதையின் செவ்விய நடையே சீதையின் நடை.

பூவரு மழலையன்னம் புனைமடப்பிடி யென்றின்ன
தேவரும் மருளத்தக்க செலவின எனினுந் தேறேன்
பாவரும் கிழமைத் தொன்மை பருணிதர் தொடுத்த பத்தி
நாவரும் கிளவிச் செவ்வி நடைவரு நடையள்,
நல்லோய்.

சீதை எவ்வண்ணத்தள்? மாவின் இளந்தளிர் நிறமா? அல்லது பொன்னின் பொலிவா? முந்தியது முதிர்ந்து தோன்றும், பிந்தியது கறுத்துத் தோன்றும் சீதை முன். மாணிக்கத்தின் ஒளி குன்றித் தோன்றும்; மின்னலென்றாலோ எப்போதும் ஒளிர்வதில்லை. தாமரை மலரே அவள் முன் பின் வாங்கும். அவள் தன்னிறம் தான் தன்னையொக்கும்,

எந்நிறம் உரைக்கேன், மாவின் இள நிறம் முதிரும்,
மற்றைப்
பொன்னிறம் கருகுமென்றால், மணிநிறம் உவமை
போதா,
மின்னிறம் நாணி யெங்கும் வெளிப்படா ஒளிக்கும்
வேண்டிற்
தன்னிறம் தானேயொக்கும் மலர்நிறம் சமழ்க்குமன்றே.
(சமழ்க்கும் – பின்வாங்கும்)

இதுகாறும் வில்லேருழவன் இராமன் சொல்லேருழவனாய் மலர்ந்ததைக் கண்டோம். சீதை பற்றிய அடையாளங்களைச் சொல்லிக் கணையாழியை இராமன் அனுமனிடம் கொடுத்தான். சீதை பற்றிய இராமன் சொல்லோவியத்தை சூர்ப்பணகை இராவணனிடம் அதே சீதை பற்றி உரைத்த சொல்லோவியத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால் கவிதை இன்பம் பெருகும், ஐயமில்லை.

# கம்பராமாயணத்தில் இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றல்கள்

தமிழ் இலக்கியத்தில் திருவேங்கடம் பற்றிய பல தொன்மைக் குறிப்புக்கள் மலிந்து கிடக்கின்றன. மிகப் பழமையான தொல்காப்பியத்துக்குப் பாயிரம் உரைத்த பனம்பாரனுர் 'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகம்' என்று குறிப்பிடுகின்ருர். 'நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும் தமிழ் வரம் பறுத்த தண்புன னன்னுடு' என்று சிலம்பு ஒலிக்கும். இருபதாம் நூற்ருண்டுத் தமிழ்க் கவிஞரான பாரதியார் 'நீலத்திரைக் கடலோரத்திலே நின்று நித்தந் தவஞ்செய் குமரிஎல்லை, வடமாலவன் குன்றம் இவற்றிடையே புகழ் மண்டிக் கிடக்கும்' என்று பாடிக் களிப்பார். திருவேங்கடமுடையான் நின்ற திருக்கோலத்தை,

*வீங்கு நீரருவி வேங்கட மென்னும்*
*ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை*
*விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி*
*இரு மருங் கோங்கிய இடைநிலைத் தானத்து*
*மின்னுக் கோடி யுடுத்து விளங்கு விற்பூண்டு*
*நன்னிற மேக நின்றது போலப்*
*பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்*
*தகைபெறு தாமரைக் கையினேந்தி*

*நலங்கிளர் ஆர மார்பிற் பூண்டு*
*பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய*
*செங்கண் நெடியோன் வண்ணம்*

(சிலப்பதிகாரம் — காடுகாண் காதை)

*என்றன்றோ இளங்கோவடிகள் போற்றிப் பரவுகின்றார்.*

திருவேங்கடத்துக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு மேற்பட்ட தொன்மையுண்டு. ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட திருப்பதிக்குச் சிறப்பாகப் பெயர் அமைந்திருப்பது பொருத்தமே. 'பூவெனப் படுவது பொறி வாழ்பூவே' என்பது போல் திருப்பதி என்றாலே திருவேங்கடத்தையே சிறப்பாகக் குறிக்கும். *'சேறு ஆர் சுனைத் தாமரைச் செந்தீ மலரும் திருவேங்கடத்தானே'* என்றும் *'திணர் ஆர் மேகம் எனக்களிறு சேரும் திருவேங்கடத்தானே'* என்றும் நம்மாழ்வார் திருவேங்கடமுடையானைப் பாடுவார். 'பழமுறைகள் முறையிடப் பைந்தமிழ் பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டல்' என்று போற்றப்படும் திருவேங்கடமுடையான் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறையின் சார்பில் கல்வியிற் பெரிய கம்பன் பற்றிய கருத்தரங்கில் பங்கேற்கும் வாய்ப்பையளித்த தமிழ்த் துறையினர்க்கும் அதன் தலைவர் டாக்டர் சுப்பு ரெட்டியார் அவர்கட்கும் என் நன்றி உரியது.

இயற்கைக்கு மீறிய ஆற்றல்கள் அல்லது இயற்கையை விஞ்சி நிற்கும்—இயற்கைக்கு ஒவ்வா—இயன்முறைத் தொடர்புக்கு அப்பாற்பட்ட ஆற்றல்கள் காப்பியத்தில் இடம் பெறுகின்றன. ஹோமரின் 'இலிய'டில் மானிடர்களிடையே நடக்கும் பூசலில் எவர்க்கு ஆதரவு தருவது என்று தெய்வங்கள் வாதம் புரிகின்றன. அக்கிலிசின் அன்னை தெட்டிஷ் என்ற கடற்தேவதை தன் மகனுக்கு உதவி புரிவதில் ஆர்வம் காட்டி வந்து உதவுகிறாள். இராமாயணக் காப்பியத்திலும் வானவர்க்கு நேரடியான நன்மை உண்டு. இராமனால் இராவணன் கொல்லப் பட்டாலொழிய அவர்கள்

இன்னல்கள் நீங்கா. எனவே, அவ்வப்போது வந்து உதவு கிருர்கள். இராமாயணத்தில் வால்மீகிக்கும் கம்பனுக்கும் ஒரு சிறு வேற்றுமையுண்டு. கம்பன் இராமனைக் கடவுளின் நிலைக்கு உயர்த்திஞன். கம்பன் தன் வாக்காலேயும் பாத்திரங்கள் வாயிலாகவும் இக்கருத்தைத் தெரிவிக் கின்ருன். 'கைவிலேந்தி இலங்கையிற் பொருதாரன்றே மறைகளுக் கிறுதியாவார்,' என்று சுந்தர காண்டத்துக் காப்புச் செய்யுளில் திட்டவட்டமாகக் கம்பன் சொல் கின்ருன். இராமனைக் கடவுளின் நிலைக்கு உயர்த்தி அங்கதன் பேசுகின்ருன். இராவணனுக்குத் தன்னை அறிமுகம் செய்து கொள்ளுங் காலை,

> 'பூத நாயகன் நீர்சூழ்ந்த புவிக்கு நாயகன் அப்பூமேல்
> சீதை நாயகன் வேறுள்ள தெய்வ நாயகன் நீ செப்பும்
> வேத நாயகன் மேனின்ற விதிக்கு நாயகன்'
>
> உயுத்த காண்டம் — (அங்கதன் தூதுப் படலம்)

என்று இராமனை ஏத்துகின்ருன். வால்மீகி இராமா யணத்தின் கதைக் கட்டுக் கோப்பை மாற்ருது கம்பன் இராமாயணப் பாத்திரங்களைத் தனக்கே உரிய வகையில் மெருகு கொடுத்துத் தமிழிலக்கிய வளத்தைப் பயன்படுத்தி ஒப்பற்ற காவியம் படைத்தான். தென்னுட்டில் வால்மீகி இராமாயணச் சொற்பொழிவாளர்களும் கம்பன் காவியத்தை ஒப்பிட்டு எங்கு எது சிறக்கிறது என்பதைச் சொல்லத் தவறு வதில்லை. காப்பியங்களில் இயற்கைக்கு மீறிய சக்திகளையும் ஞாயிறு, திங்கள், விண், மண், காற்று, அனல், புனல் என் பவைகளையும் வானவர்களையும் தவிர்க்க முடியாது. இவை யில்லையேல் சுவையிருப்பதில்லை. கம்பன் காப்பியத்திலும் காப்பியத்துக்கே இன்றியமையாத இயற்கைக்கு விஞ்சிய ஆற்றல்களும் இயன்முறைக் கொவ்வா நிகழ்ச்சிகளும் இடம் பெறுகின்றன. பௌத்தமும் சமணமும் புறச்சமயங் களெனினும் அவைகூட இயற்கைக்கு மீறிய சக்தியின் இயக் கத்தைப் பயன்படுத்துவதைக் காணமுடியும்.

கௌதமர் நாற்பத்தேழு நாள்கள் போதிமரத்தின் கீழமர்ந்திருந்தார். அவருடைய ஞானோதயத்தை எதிர் பார்த்து வானவர் அவரைச் சூழ்ந்திருந்தனர். உலகச் சிற்றின்பத்தின் உருவாம் மாரன் வரவும் அவர் அங்கிருந்து ஓடி விட்டனர். உறவினன் தேவதத்தன் கலகம் செய்து தந்தையைச் சிம்மாசனத்தினின் றிறக்கி யசோதரையையும் கைப்பற்றினான் என்பதை உண்மைச் செய்தி போன்று சொல்லக் கேட்டும் கௌதமர் அசையவில்லை. நில அதிர்ச் சியும் சூறுவளிப் பேய்க்காற்றும் வெள்ளமும் அவரை உலுக்க வில்லை. பொறுமையிழந்த மாரன், 'நீ சான்றோன் என்பதை உறுதி செய்வார் எவர்? சொல்வாயாக', எனவும் கௌதமர் தரையைத் தம் கையால் தொட்டதுமே நிலமகள் இடியை யொத்த குரலில் 'நானே அதற்குச் சான்று', என முழங் கினாள். ஞானோதயம் பெற்ற பின்னரும் புத்தர் தமது அறவுரையைச் சொல்லத் தயங்கிய போது பிரமன் தோன்றி அவற்றை உலகுக்கு அளிக்குமாறு வேண்டினான்.[1] முன்பு நிலவிய சமயப் பழக்கங்கட்கு எதிராகத் தோன்றிய பௌத்தத்திலும் ஜைனத்திலுமே வானவர் இடம்பெற்றனர். எனவே காப்பியங்களில் இயற்கைக்கு விஞ்சிய ஆற்றல் களும் அமரர்களும் இடம் பெற்றதில் வியப்பொன்றுமில்லை.

'கம்பராமாயணம் — ஓர் ஆய்வு' என்ற தமது ஆங்கில நூலில் வ.வே.சு. அய்யர் 'இயன்முறைத் தொடர்புக்கு அப்பாற்பட்ட ஆற்றல்கள்' (Supernatural Elements) என்ற தலைப்பில் காப்பியச் செய்யுளில் அவை இடம் பெறுவது உலக முழுமைக்கும் பொதுவானது என்றுரைக்கிறார். இருந் தாலும் இயற்கைக்கு மீறிய சக்திகள் நம் நாட்டுக் காப்பியங் களில் இயங்குவது மேலை நாட்டுக் காப்பியங்களில் காணப் படுவதற்கு மாறானது. மரபுக்கொப்ப அவை அமைய வேண்டும்.[2] வானவர் ஒரு புறம்; தவ வலிமையால் வரங் களைப் பெற்று அமரர்களை அடிமைப்படுத்திக் கொடுமை செய்யும் அரக்கர்கள் மற்றொரு புறம். திருமால் இராமனாய் அவதாரம் செய்து தேவர்களுக்கு உதவ வந்த காலை தேவர்

கள் குரங்குகளாய் — பெருங்குரங்குகளாய்ப் பிறவி எடுத் தனர். அரக்கியர்க்குத் தேவமாதர் அடிமைகளாய் வேலை செய்து அக்கினி, வருணன், இந்திரன் போன்ற வானவர் இராவணன் இட்டபணி செய்தனர். அரக்கர்களுக்குச் சொல்லொணு வலிமையுண்டு. மனிதர்களினும் பெரிய உருவம் படைத்தவர்கள். மரங்களை வேரோடு பிடுங்க வல்லர்; மலைகளை அசைக்க வல்லர். இராமனுக்கு உதவிய வானரர்களும் பெரிய உருவினர். ஆனால், இராமனை மானி டனுகவே சித்திரிப்பர் வால்மீகியும் கம்பனும். இராமன் தோள் வலியன். அவன் தோள்வலியைக் காட்டுவது சீதையை மணக்குமுன் ஜனகன் அரண்மனையில் வில்லை வளைத்த நிகழ்ச்சி. ஆங்குக் குழுமியிருந்தவர்க்கெதிரே இராமன் வில்லை எடுத்தான். கூடியிருந்தவர் அவன் வில்லை 'எடுத்தது கண்டார்; இற்றது கேட்டார்.' கண்ணிமைக்கும் நேரத்தில் எடுத்தவில் இராமன் நாணேற்றும் பொழுது ஒடிந்தது. இராமன் ஆற்றிய போர்களில் அவனு டைய வில்லும் அம்புகளுமே பயன்படுத்தப் பட்டன. இராமலட்சுமணர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் ஒரு சார்பில்; இராவணனும் அவனைச் சேர்ந்தவர்களும் எதிர்த் தரப்பில். இரு தரப்பிலும் மந்திர சக்தியுடன் கூடிய கணை களை ஏவுவதில் வல்லவரிருந்தனர். இவை பற்றி மேலே காண்போம்.

கதைக் கட்டுக்கோப்பில் கம்பன் காப்பியத்துக்கும் வால்மீகி இராமாயணத்துக்கும் பெரியதொரு மாறுதலில்லை என்று முன்பே சொன்னேம். எனவே இயற்கைக்கு மீறிய சக்திகள் கதைக் கொப்பவே இயங்கின. கம்பராமாயணம் நாடகப்பாங்கில் ஆங்காங்கே காணப்பட்டாலும் காப்பியத் தின் சிறப்புக்கள் குன்றுதுள்ளது. சிலப்பதிகாரம் அளவிற் சிறிய தென்றுலும் காப்பியத்தின் களை அதில் நனி சொட்டு கிறது. இயற்கை விஞ்சிய ஆற்றல்களும் இயற்கை இறந்த நிகழ்ச்சிகளும் ஏற்ற இடத்தில் எழிலுற அமைந்து பொலிவு தருவது குறிப்பிடத்தக்கது, கண்ணகி ஊர்சூழ் வரியும்,

'கணவன்றன் பொன்றுஞ்சு மார்பும் பொருந்தத் தழீஇக் கொள்ள' வெட்டுண்ட கோவலன் பரிவுடன் 'நிறைமதி வாண் முகம் கன்றியதே' என்று பேசுவதும், "காய்கதிர்ச் செல்வனே, கள்வனே என் கணவன்?" என்று கதிரவனைக் கண்ணகி கேட்பதுவும், 'கள்வனே அல்லன் கருங்கயற் கண் மாதராய், ஒள்ளெரி உண்ணும் இவ்வூர்' என்று வான் குரல் ஒலிப்பதுவும், செங்கோல்வளைய உயிர் கொடுத்துப் பாண்டியன் அதை நிமிர்த்த பின்னும் சினந்தணியாத கண்ணகி இடது மார்பைத் திருகி எறிய பார்ப்பனக் கோலத்து அக்கினி தேவன் தோன்றுவதும், மதுரையை எரிப்பதும்,அவள் முன் மதுராபுரித் தெய்வம் தோன்றுவதும், உலக இலக்கியத்தில் எங்கும் காணு அருமையுடன் காப்பியத்தை மிளிரச் செய்கிறது. இயற்கை மீறிய சக்திகள் சிலப்பதிகாரத்தில் விறு விறுப்பாக இயங்குகின்றன. முக்கிய காரணம் சிலப்பதிகாரக் கதைக் கருவூலம் உரிய முதலிடத்தைக் கொண்டது. இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் கதைக்கு ஊட்டம் கொடுக்கக் கையாளப்பட்டன. சிலப்பதிகாரக் காப்பியக் கதைப் போக்கையும் இராமாயணக் காப்பியக் கதைப் போக்கையும் ஒப்பாய்வு செய்தல் பயன் தரும்.

**கம்பனும் மில்ட்டனும்**

மில்ட்டனையும் கம்பனையும் ஒப்பாய்வு செய்வர் சிலர். "தெளிவிலும் செறிவிலும் இராமகாதையும் துறக்கநீக்கமும் ஒன்றையொன்று விஞ்சுவன. ஆனல் கம்பன் காவியம் எளிமைக்கும் எடுத்துக்காட்டாகவுள்ளது. கற்றவர் படித்தும் கல்லாதவர் கேட்டும் மகிழ்ந்து விழுமியராவதற்கு ஏற்ற நூல் அது. எதிர்பாராச் சொற்றொடராலும் திடுக்கிடத்தக்க உவமைத் தொகுப்பாலும் வியப்பார்வத்தைத் தூண்டுவதும் உணர்ச்சிப் பிழிவால் உள்ளத்தைக் கிளர்ந்தெழச் செய்வதும், படிப்பவனோடு அளவளாவும் தன்மையனாய்ப் பாடுவதும், உள்மன ஓட்டங்களை நுழைபுலத்தோடு தேர்ந்து தெளிந்து உயிர்த்தளிர்ப்போடு பாத்திரங்களைப் படைப்பதும் கம்பனுக்குக் கைவந்த கலைகள். இந்தப் பண்புகளைத் துறக்க

நீக்கத்தில் காண்பது அரிது. மாந்தரின் அன்றுட அனுபவத்தோடு நேரான தொடர்பு கொண்டிராத பொருளேப் பாடுகிருன் மில்ட்டன். பாடுபட்டு முயன்று மனத்தைத் தூய தாக்கி ·மெய்ப்பொருளின் ஒளிக்காட்சியில் ஊற்றம் பெறும் உறுதி கண்டோரையே உளங்கொண்டு பாடுகிருன் அவன். எனவே துறக்க நீக்கத்தில் எளிமைப் பண்பு துலங்காதது இயல்பே. அதற்குப் புகழ் அதிக மென்ருலும், அதனைப்படிப்வர் சிலரே என்பதிலும் வியப்பில்லை. மில்ட்டனைப் படிப்பதைச் செய்து தீரவேண்டிய கடப்பாடாகக் கருதுவபரும் உளர்; பயனுண்டென்ருலும், சோர்வுதட்டும் என்பர். ஆயினும் சொல்லாற்றல், பொருட் செறிவு, கற்பனே வளம், கட்டுக்கோப்புச் செம்மை முதலியவற்ருல் மகோன்னதத்தின் மணிமுடியைத் தொடும் பெருமை கம்பன் காவியத்தைப் போல் மில்ட்டன் காவியத்துக்கும் உரியது என்பது ஒரு தலை'' மேற்கண்டவாறு எழுதுகிருர் எஸ்.இராமகிருஷ்ணன் 'கம்பனும் மில்ட்டனும்' என்ற நூலில். எவ்வாறு கம்பன் கவிதை ஓங்கி உலகளந்து நிற்கிறது என்பது பற்றி ஐயமில்லை. ஷேக்ஸ்பீயரின் நாடகங்கள் உயர்ந்து மக்கள் மனத்தை ஈர்த்து இரண்டறக் கலந்து உள்ளக் கிளர்ச்சியை உண்டாக்கிய அளவுக்கு மில்ட்டனின் படைப்பு—சொர்க்க நீக்கம் சாதித்தது என்று சொல்ல முடியாது. கம்பன் சிறப்பு ஷேக்ஸ்பீயருடையதை ஒத்தது. எனினும் இயற்கை மீறிய சக்திகளேக் கையாள்வதிலும் இராவணனுடைய குணச் சித்திரப்படைப்பிலும் சொர்க்க நீக்கத்துக்கும் கம்பராமாயணத்துக்கும் ஒற்றுமை காணலாம். மேலே நாட்டுக் காப்பியங்களுக்கும் நம் நாட்டுக் காப்பியங்களுக்கும் அடிப்படையான வேற்றுமையுண்டு. இந்தியக் காப்பியங்கள் கால ஒழுங்கைக் கடைப்பிடிக்கின்றன. அதற்கு மாருகக் கிரேக்கக் காப்பியங்களும் அவற்றைப் பின்பற்றிப் பிற மேலே நாட்டுக் காப்பியங்களும் நடுவில் எங்கோ தொடங்கிப் போகப்போக முன் நிகழ்ச்சிகளே நினைவுக்குக் கொண்டுவருகின்றன. மில்ட்டனுடைய சொர்க்க நீக்கமும் அத்தகையதே.[3] மேனுட்டு நெடுங்கதைகள் கூட நடுவில் தொடங்குகின்றன. மதாம்

பொவ்ரி (Madame Bovary) என்ற பிரெஞ்சு நாவல் ஓர் எடுத்துக்காட்டு.

"நாடகச் செய்யுள் மட்டுமின்றி எல்லாச் செய்யுளுமே மயக்கத்தை அடிப்படையாகக் கொண்டது. புலவனுலகத்தில் நாம் புகுந்துவிட்டோமேயானால் அங்கு நடக்கும் நிகழ்ச்சிகளும் அவ்விந்தை உலகத்துச் சட்டதிட்டங்களும் அங்கு நிலவும் சூழ்நிலைக்கேற்ப அமைந்தவை என்பதை நம் ஆய்வு அறிவு ஏற்றுக்கொள்ளவேண்டும். மில்ட்டனுடைய சொர்க்க நீக்கத்தில் புலவனுடைய சொர்க்கத்தில் சூரியனைச் சுற்றிப் பூமியினுடையவும் பிறகோள்களினுடையவும் இயக்கம் போன்று அதற்கே உரித்தான தேவதைகளும் அவற்றின் ஆட்சியும் அரசுகளும் ஆற்றல்களும் ஒரு திட்ட வட்டமான நியதிக்கு உட்பட்டவை"[4] என்ற மார்க் பாட்டர்சன் கருத்தையும் வ. வே. சு. அய்யர் தெரிவிக்கிறார்.

இயன் முறைத் தொடர்புக்கு அப்பாற்பட்ட ஆற்றல்கள் என்ற தலைப்பின் கீழ் தெய்வங்கள், இயல் நிலை கடந்தவர், கோள்கள், ஐம்பெரும் பூதங்கள், அவற்றோடு தொடர்பு படுத்திப் பேசப்படும் தெய்வங்கள், வேறொருவர் காணாமை லுலாவுதல், நினைத்த உருவெடுக்கும் திறன், இயற்கைக் கொவ்வா அரக்கர்-குரங்குகளின் வலிமைகள், இராமராவணர் ஏவிய மந்திர சக்தியுடன் கூடிய கணைகளின் சாதனைகள், பூவுலக நிகழ்ச்சிகளில் தேவர்களின் ஈடுபாடு—இவைகளும் இவை போன்றவையும் இடம் பெறும். இவை பற்றிய விரிவான ஆய்வோ-ஒப்பாய்வோ செய்யப்படவில்லை என்று தோன்றுகிறது. வ.வே.சு. அய்யரின் 'கம்பராமாயணம்—ஓர் ஆய்வு' என்ற ஆங்கில நூலின் ஓர் அதிகாரத்தில் இப் பொருளைப் பற்றிய சுருக்கமான ஆய்வு இடம் பெறுகிறது. கம்பன் இராமாயணக் காப்பியத்தில் இடம்பெறும் சிலவற்றைக் காணலாம்.

***காப்பியத்தில் ஊழ்***

ஹோமரின் காப்பியங்களில் தெய்வங்களும் மனிதர்களும் தோளோடு தோள் நின்று போராடியும் ஒருவரையொருவர் தாக்கியும் காயப்படுத்தியும் ஏமாற்றியும் தெய்வங்களின் தெய்வத்தன்மை குறையாதவாறும் அமைந்திருப்பதைக் காண்கின்றோம்.[5] காப்பியங்களிலும் நாடகங்களிலும் மனிதனுக்கும் மீறிய சக்திகள் சிலவேளைகளில் செயற்பட்டால்தான் அவை களிப்பூட்டும். அவை பல உருவங்களில் வெளிப்படும். இயற்கைக்கும் மீறிய சக்திகள் நினைக்க முடியாதவற்றை நிகழ்த்திக் காட்டுகின்றன. ஊழ் காப்பியங்களில் சிறந்த பங்கேற்று நிற்கும். கைகேயி இராமனைக் காட்டுக்குப் போகுமாறு பணித்தாள். இலக்குவன் வெகுண்டான். வெகுள்வதோ விதியின் பிழையென்றான், இராமன்.

*நதியின் பிழையன்று நறும் புனலின்மை; அற்றே*
*பதியின் பிழையன்று; பயந்து நமைப் புரந்தாள்*
*மதியின் பிழையன்று; மகன் பிழையன்று; மைந்த!*
*விதியின் பிழை; நீ இதற்கு என்னை வெகுண்டது?*

(அயோத்தியா காண்டம்—நகர் நீங்கு படலம்)

ஊழைத் தவிர்த்து ஷேக்ஸ்பீயரின் நாடகங்களில் சில இயற்கை மீறிய சக்திகள் இடம் பெறுகின்றன. சூனியக்காரிகள், பேய்கள், தோற்றங்கள் அவைகளிற் சில. ஏமாற்றுத் தோற்றங்களுக் கிரையானவர்களும் உண்டு. ஹாம்லெட் நாடகத்தில் தோன்றும் பேய் மூன்று பேர்களால் ஒரே சமயத்தில் சேர்ந்தும் தனித்தனியாகவும் பார்க்கப்படுவது உண்மையிலேயே இயற்கைக்கு மீறிய சக்திகள் இயங்குவதை உறுதி செய்கிறது.[6]

***இராமன் கைவண்ணமும் கால் வண்ணமும்***

தாடகை அறிமுகத்துடன் காப்பியம் முழுவதிலும் இயற்கையைப் புறங்காட்டும் சக்திகள் இயங்குவதைக் காணலாம். தேவர்களுக்கும் அசுரர்களுக்குமிடையே நிகழும் பலப்

பரீட்சையில் மனிதர்கள் தேவர்களுக்குச் சாதகமாக ஈடுபடுகிருர்கள். மந்திரங்களின் உதவியால் ஏவப்பட்ட இராமன் கணைகளே செக்கர்வானத்தில் சிவந்த இரத்தத்தைச் சிந்தித் தாடகையின் உயிரைக் குடித்தன. அகலிகை தன்னுடைய நடத்தை பற்றி 'தக்கது அன்று என்ன ஓராள் தாழ்ந்தனள்.' கோதமன்,

*புரந்தரன் போயபின்றை*
*மெல்லியலாளை நோக்கி விலைமகளனைய நீயுங்*
*கல்லியலாதி யென்ருன் கருங்கலாய் மருங்கு வீழ்வாள்.*

(பாலகாண்டம்—அகலிகைப்படலம்)

தையலுங் கிடந்தாள் கல்லாய்.

*இவ்வண்ணம் நிகழ்ந்தவண்ணம் இனியிந்த உலகுக்*
*கெல்லாம்*
*உய் வண்ணமின்றி மற்ருேர் துயர் வண்ணம்*
*உறுதுவண்டோ*
*மை வண்ணத் தரக்கி போரில் மழை வண்ணத்*
*தண்ணலே! உன்*
*கை வண்ணமங்குக் கண்டேன் கால் வண்ண*
*மிங்குக்கண்டேன்,*

(பாலகண்டம்—அகலிகைப்படலம்)

என்று இராமனைப் புகழ்ந்தான் விசுவாமித்திரன். அகலிகையும் கணவனையடைந்து புதுவாழ்வு தொடங்குகிருள். அகலிகை கல்லானதைக் கேள்வியுற்றும் கல் பெண்ணானதைக் கண்ணுல் கண்டும் தாடகை வதத்தை நேரில் பார்த்தும் இராமனுடைய கைவண்ணத்தையும் கால்வண்ணத்தையும் அவன் கண்டான். இவை நடைமுறையில் காணும் இயற்கையோடு இயைந்த நிகழ்ச்சிகளல்ல; ஆனல் காப்பியங்களில் இடம் பெறுகின்றன. வான்மீகத்தில் கோதமன் சாபத்தால் அகலிகை சாம்பலாய்க் கிடந்தாள். கம்பனில் கல்லாளுள். உருவழிந்த அகலிகை மீண்டும் உயிர் பெற்று உலவினுர் என்பதிற் கருத்து மாற்றமில்லை.

### இமையவர் பரதனை நாடாள வேண்டுமெனல்

காடு சென்ற இராமனை மீண்டும் நாட்டுக்குக் கொண்டு வந்து அரசை அவன் ஒப்புக்கொள்ள வேண்டும் என்ற பரதன் வேண்டுகோளை இராமன் மறுத்தான். பரதனும் நாடு செல்ல மாட்டேனென்று பிடிவாதம் செய்தான். தங்களுடைய இன்னல் தீரவேண்டுமெனில் இராமன் காட்டிலிருந்தால் தான் முடியும். எனவே வானவர் நாடாள வேண்டும் என்று பணித்தனர்

*'ஏத்த அரும்பெருங் குணத்து இராமன் இவ்வழிப்*
*போத்து அரும்தாதை சொல்புரக்கும் பூட்சியால்*
*ஆத்த ஆண்டு ஏழினொடு ஏழும் அந்நிலம்*
*காத்தல் உன்கடன்; இவை கடமை' என்றனர்.*

(அயோத்தியா காண்டம்—கிளைகண்டு நீங்குபடலம்)

விண்ணவர் வேண்டும்பொழுது மண்ணவரிடம் பேசின காலம் அது.

### எயிற்றரக்கி எழில் மங்கை உருவெடுத்தாள்

கம்பன் யாத்த இராமகாதையில் இராமன் திருவுருவத்தைத் தீட்டும் இரண்டு பாடல்கள் உள. ஒன்று கவியின் கூற்றாக வருவது. காட்டுக்குச் செல்லும் இராமனை வண்ணக் கலவையால் சித்திரிக்கும் கம்பன் கைவண்ணம் அப்பாடல்.

*வெய்யோன் ஒளி தன் மேனியின் விரிசோதியின் மறையப்*
*பொய்யோ எனும் இடையாளொடும் இளையானொடும்*
*போனான்*
*மையோ, மரகதமோ, மறிகடலோ, மழை முகிலோ!*
*ஐயோ! இவன் வடிவென்பதோர் அழியா*
*அழகுடையான்.*

(அயாத்தியா காண்டம்—கங்கைப் படலம்)

தமிழின் நெட்டெழுத்துக்களைப் பயன்படுத்தி ஓகாரத்தை ஒன்பது மணிகளென உலவவிட்ட கம்பன் பாடல் ஓர் ஒப்பற்ற சொல்லோவியம்.

இராமனுடைய எழிலுருவத்தை எடுத்தியம்பும் மற்ருெரு சொல்லோவியம் எதிர்பாராத இடத்திலிருந்து வருகிறது. இராமன் வடிவழகில் மயங்கிக் காதல் வேட்டையிற் தோல்வி யுற்று உடலுறுப்புக்களை இழந்து இழுக்குற்ற சூர்ப்பணகை தன்னையும் மறந்து இராவணனிடம் இராமனைப் படம் பிடித்துக் காட்டுகிருள்.

*செந்தாமரைக் கண்ணெடும் செங்கனி வாயிஞேடும்*
*சந்தார் தடந்தோளொடும் தாழ்தடக்கைகளோடும்*
*அந்தார் அகலத்தொடும் அஞ்சனக்குன்றம் என்ன*
*வந்தான் இவன் ஆகும் அவ்வல்வில் இராமன் என்ருள்.*

(ஆரணிய காண்டம்-மாரீசன் வதைப்படலம்)

காப்பியங்களில் தேவர், மக்கள் என்ற இருசாரார் தவிர அரக்கர்களும் உண்டு. தவவலிமையால் பெற்ற வரத்தினுல் எவ்வுருவும் எடுக்கவல்லர்; விண்ணிடை எழுந்து பறக்கவல் லர்; நீரில் மூழ்கி மறையவல்லர். மனிதர்களினும் உருவத்தில் பெரியர். அரக்கியரும் அவ்வாறே. இராவணனுடைய தங்கை சூர்ப்பணகை இராமனுடைய வடிவழகில் மயங்கி மயக்கும் மங்கைப்பருவ உருவெடுத்து அவன் முன் தோன்றுகிருள்.

வானிடை வானவர் இயற்கைக்கு மிஞ்சிய ஆற்றல் படைத்தவர் என்று கொண்டால் அவர்க் கெதிராக ஈடுபட்ட அரக்கர்களும் மிதமிஞ்சிய வலிமை படைத்து முன்னவரை ஆட்டிப் படைக்கும் வலிமை பெற்றவராய்ச் செயற்பட்டு முடிவில் தோல்வியுறுகிருர்கள். பின்னவருள் ஒருத்தியான சூர்ப்பணகை இராமன் முன் தோன்றும் காட்சியைக் கம்பன் ஓர் பாடலில் வடிக்கின்ருன்.

*பஞ்சிஒளிர் விஞ்சுகுளிர் பல்லவம் அனுங்கச்*
*செஞ்செவிய கஞ்சம் நிமிர் சீறடியளாகி*
*அஞ்சொல் இளமஞ்ஞை என அன்னம் என மின்னும்*
*வஞ்சியென நஞ்சம் என வஞ்சமகள் வந்தாள்.*

(ஆரணிய காண்டம் –சூர்ப்பணகைப் படலம்)

சூர்ப்பணகை என்ற பாத்திரம் பலரை ஈர்த்துள்ளது. அண்மைக் கால ஹிந்திக் கவிஞர் மைதிலி சரண் குப்த 'பஞ்சவடி' என்ற தம்முடைய கவிதையில் சூர்ப்பணகையின் வரவைச் சித்திரிக்கிறார். "இடைக்குக் கீழே தொங்கும் குழலினைக் கோதிக் கொண்டிருந்தது இடது கை. அலைகள் விளையாடுவது போலும் வண்டுகள் செந்தாமரையை மொய்த்ததுபோலும் வலதுகை பிடித்திருந்த நறுமணம் கமழும் மலர்ச்சரம் எழில் பூத்து சிலையில் தொங்கவிட்ட கற்பகக் கொடி அசைந்தாடுவதைப் போலிருந்தது."

காதல் வேட்டையில் தோல்வியுற்ற சூர்ப்பணகை அவல நிலையிலும் நகைச்சுவையுடன் பேசத் தெரிந்தவள். உறுப்புகளை இழந்த சூர்ப்பணகையிடம், கரதூடணர் அவளுக்கு உதவவில்லையா என இராவணன் கேட்டபொழுது,

*சொல் என்றென் வாயிற் கேட்டார் தொடர்ந்தெழு சேனையோடும்*
*கல் என்ற ஒலியிற் சென்றார் கரன் முதல் காளை வீரர்*
*எல் ஒன்று கமலச் செங்கண் இராமன் என்றிசைத்த ஏந்தல்*
*வில் ஒன்றில் கடிகை மூன்றில், ஏறினர் விண்ணில் என்றாள்.*

(ஆரணிய காண்டம் — மாரீசன் வதைப் படலம்)

***இராமன் பணியில் வருணன்***

இராமன் மானிடன். பரசுராமனை வென்று அவனுடைய வில்லை 'மான வெஞ்சிலை சேமி' என்று வருணனிடம் கொடுத்தான். இராமாயணக் காப்பியத்தில் தேவர்கள் வருவதும் போவதும் இன்று நாம் நண்பர்களைச் சந்திப்பது போல. காப்பிய வீரர்களுக்குத் தங்கள் திறமையும் வலிமையும் தெரியாது என்பதில்லை. இல்லையேல் வருணனிடம் கொடுத்த வில் கரனுடன் போர் தொடுத்த பொழுது எப்படி வரும்? சூர்ப்பணகையின் மானபங்கத்துக்குப் பழி வாங்கும் நோக்

கத்துடன் இராமனை எதிர்த்த கரன் அவன் வில்லை அறுத்தான். தேவர்கள் அஞ்சினர்.

*மன்னவர் மன்னவன் செம்மல், மரபினால்*
*பின்னுறத் தன்பெருங் கரம் நீட்டினன்.*

*கண்டு நின்று கருத்துணர்ந்தான் என*
*அண்டர் நாதன் தடக்கையில் அத்துணை*
*பண்டு போர் மழுவாளியைப் பண்பினால்*
*கொண்ட வில்லை வருணன் கொடுத்தனன்.*

(ஆரணிய காண்டம் — கரன் வதைப் படலம்)



இராமனுடைய இலங்கைச் செலவில் வானவர் அவ்வப்பொழுது ஆங்காங்கு வந்து கலந்து கொண்டனர்.

***விண்வழி விரையும் அரக்கர்***

கடவுளர்களைப் போன்று அரக்கர்களுள்ளும் பல தலைகள் கொண்டவர் உண்டு. இராவணனுக்குப் பத்துத் தலைகள். திரிசிரசுக்கு மூன்று தலைகள். கரனுக்கும் முற்பட்டு இராமனுடன் பொருத பொழுது இராமனால் அவன் கொல்லப்பட்டான். அவனை முத்தலைக் குரிசில் என்பார் கல்வியிற் பெரிய கம்பர். பல தலைகளுள்ளவர் இயற்கைக்கு மாறுபட்டவர். இருப்பினும் அவரில்லாது காப்பியம் இல்லை. பத்துத்தலை இராவணன் தன் உருவை மாற்றிச் சீதையைத் தூக்கிச் சென்றான்.

*ஆண்டு ஆயிடை, தீயவன் ஆயிழையைத்*
*தீண்டான், அயன் மேல் உரை சிந்தை செயா*
*தூண் தான் எனல் ஆம்உயர்தோள் வலியாள்*
*கீண்டான் நிலம், யோசனை கீழொடு மேல்,*

*கொண்டான் உயர்தேர் மிசை; கோல் வளையாள்*
*கண்டாள்; தனது ஆர் உயிர் கண்டிலளால்;*
*மண்தான் உறும் மின்னின் மயங்கிலளால்;*
*விண்தான் வழியா எழுவான் விரைவான்.*

(ஆரணிய காண்டம்—சடாயு உயிர் நீத்தபடலம்)

கம்பனுக்கும் வால்மீகிக்கும் உள்ள மாற்றம் ஒன்று. சீதையைத் தூக்கித் தன் தேரில் வைத்துப் பறந்து செல்கின்றான். இராவணன் வான்மீகத்தில். கம்பனில் பர்ண சாலையோடும் சீதையைத் தேரில் வைத்துப் பறந்து செல்கிறான். நிலத்தோடு அகழ்ந்து எடுப்பதென்பதும் இயற்கை மீறிய செய்கையாகும்.

*அனுமன் கடல் கடந்தான் காலினால்*

வாலை உயரத்தூக்கி வலிய தாள்களை மடக்கி மார்பையொடுக்கி தோளை நிமிர்த்திக் கழுத்தைச் சுருக்கி கைகளை நீட்டி மேலே எழும்பிச் சென்றான் அனுமன். குறுக்கே தாண்டுமிடம் சிறிதேயாயின் இத்தனை முயற்சி தேவைப்படுவதில்லை. தாண்டுமிடைவெளி பெரிதாயின் உடலுறுப்புக்கள் இவையனைத்துக்கும் உள்ளாகின்றன. கால்வாயைத் தாண்டியது போலக் கடலைத் தாண்டினான் அனுமன். மனித உருவினும் பெரியதோர் உருவம் படைத்த குரங்காயினும் கடலைத் தாண்ட முடியுமா? சீதைக்கு இவ்வையப்பாடு தோன்றியது. ''ஐய, அளப்பருங் கடலைக் கடந்து எவ்வாறு இலங்கை வந்தாய்?'' என்று கேட்ட சீதைக்கு 'கருங்கடல் கடந்தனன் காலினால்' என்றான் அனுமன்.

*இத்துணைச் சிறியதோர் எண்ணில் யாக்கையை*
*தத்தினை கடலது தவத்தினையதோ?*
*சித்தியின் இயன்றதோ? செப்புவாய்! என்றாள்*
*முத்தினு நிலவினு முறுவல் முற்றினாள்.*

(சுந்தர காண்டம் — உருக்காட்டு படலம்)

தலை விண்ணை முட்டவும் இரண்டு பாதங்களும் இலங்கை ஆழ்கடலுக்குக் கீழே செல்லவும் அனுமன் தன் உருக் காட்டினான். 'துஞ்சினர் அரக்கர்' என்றுவந்து, 'அஞ்சினன் இவ்வுரு அடங்குவாய்' என்றாள் சீதை. இராமனுடைய பாசறையிலும் அரக்கரையும் மிஞ்சக்கூடிய ஆற்றல் படைத்தவர்களில் அனுமனும் ஒருவன்.

*வருணன் வணங்கினன் இராமனை*

அரக்கர்களைப் போரில் வென்று இராவணனை வதம் செய்து சீதையை மீட்டுக் கொண்டு வரவேண்டும். குரக்குச் சேனை செல்லக் கடல் மீது அணைகட்டினால்தான் கடலைக் கடக்க முடியும். எல்லோரும் அனுமனைப் போன்று கடலைத் தாண்ட முடியாதே. அணைகட்ட வருணனை வழிவேண்டி இராமன்,

*தருண மங்கையை மீட்பதோர் நெறி தருகென்னும்*
*பொருணயந்து நன்னுனெறி யடுக்கிய புல்லில்*
*கருணையங்கடல் துயின்றனன் கருங்கடல் நோக்கி*
*வருணமந்திர மெண்ணினன் விதிமுறை வணங்கி*

(உயுத்த காண்டம்-வருணனை வழிவேண்டு படலம்)

வருணன் வாராமை கண்டு சீற்றங் கொண்ட இராமன் புனலெல்லாம் முடிவினீர்ப்பருகும் சூரியன் கதிரனைய சுடு சரம் துரந்தான்.

*மழைக்குலம் கதறின வருணன் வாயுலர்ந்து*
*அழைத்தனன் உலகமு மடைத்த வாறெலாம்*
*இழைத்தன நெடுந்திசை யாதும் யாரினிப்*
*பிழைப்பிலர் என்பதோர் பெரும் பயத்தினல்.*

(உயுத்த காண்டம்-வருணனை வழிவேண்டு படலம்)

சுடுகணை பொறுக்க முடியா வருணன் இராமன் முன் ஓடி வந்து,

*ஆழி நீ யனலு நீயே, அல்லவை யெல்லா நீயே,*
*ஊழி நீ யுலகு நீயே, அவற்றுறை உயிரு நீயே,*

* * *

*அன்னை நீ அத்தனீயே, யல்லவை எல்லா நீயே,*
*பின்னு நீ முன்னு நீயே, பேறு நீ யிகழ்வு நீயே,*
*என்னை நீ யிகழ்ந்த தென்ற தெங்ஙனே யீசனுய*
*உன்னை நீ யுணராய் நாயேனெங்ஙன முணர்வேனுன்னை.*

(உயுத்த காண்டம்-வருணனை வழிவேண்டு படலம்)

என்று போற்றவே இராமனும் சீற்றம் தணிந்தான். அணை கட்ட வழிதந்து, 'குன்று கொண்டடுக்கிச் சேது குயிற்றுதிர், என்று வருணனும் போந்தான். பஞ்ச பூதங்களிலொன்றான நீருக்குத் தலைவனான வருணன் இராமனைப் போற்றினதோடுமட்டுமின்றி 'ஈசனாய உன்னை நீ யுணராய்' என்று சொல்லிச் சென்றது மானிட இராமனிடம் தொடர்பு கொண்டு கதை நடக்கவும் உதவுகிறது.

*அரக்கர் மாயை*

இயற்கை செயற்படுவதற்கு மாறான பல நிகழ்ச்சிகள் இராமாயணக் கதையில் இடம் பெறுகின்றன. மாரீசன் மாய மான் உருவெடுத்தல், மாயா சனகன், மாயா சீதை ஆகியவர்களை அரக்கர்கள் படைத்து, சீதையையும் இராமனையும் நம்பிக்கை இழக்குமாறு செய்தல் போன்றவை பல உள. அவற்றை யெல்லாம் வகைப்படுத்தித் தொகுத்து வான்மீகியையும் கம்பனையும் ஒப்பாய்வு செய்தல் ஒரு நன் முயற்சி. இந்திரசித்து ஓர் ஒப்பற்ற வீரன் மட்டுமல்ல. மந்திர தந்திரங்களிலும் வல்லவன். தந்தையின் புகழ் குன்றக்கூடாது என்பதில் கண்ணுங் கருத்துமாயிருப்பவன், கவலைப்படுபவனும்கூட. தம்பியாகிய அட்சய குமரன் அனுமனால் வதைக்கப்பட்டபோது தம்பியின் சாவு கூட அவனை அவ்வளவு உறுத்தவில்லை, 'எம்பியோ தேய்ந்தான்; எந்தை புகழன்றோ தேய்ந்தது, என்று அல்லலுற்றான். இராமனைக் கடவுளின் நிலைக்கு உயர்த்திய கம்பன் இராவணன் என்ற பாத்திரத்தையும் திறம்படப் புனைந்தான். மில்ட்டன் 'சொர்க்க நீக்கத்'தில் சாத்தானைக் கையாண்டிருப்பது போன்று கம்பனுடைய காப்பியத்தில் அரக்கர்கோன் இராவணன் வீரபுருடனுக்குரிய சிறப்புடன் காணப்படுகிறான். இராமனுக்கு மாறாக நன்றாகவும் தீட்டப்பட்டிருக்கிறான். மில்ட்டனைப் போன்று தன்னையறியாமலேயே கம்பன் பேயின் கட்சியைச் சார்ந்தவன்' என்று பஷாம் என்ற வரலாற்றாசிரியர் எழுதுகிறார்.

*இராமராவணப் போரில் அவர் எய்த கணைகள்*

அரக்கர் படைக்கும் குரக்குப் படைக்கும் நிகழ்ந்த போரில் இரு சேனைகளும் கைகலந்து போரிட்டன. அனுமனும் இராவணனும் முட்டிச் சண்டையில் ஈடுபட்டனர். முதற் போரில் இராவணனுடன் அனுமன் தோளிலமர்ந்து இராமன் போர் செய்தான். இராவணனுடன் நிகழ்ந்த இறுதிப் போரில் இந்திரன் சாரதி மாதலியோடும் தன் தேரை இராமனுக்கனுப்பி வைத்தான்.இருவரும் ஒருவர் மீது ஒருவர் கணைகளைச் செலுத்திப் போரிட்டார்கள்.அம்புகள் மந்திர சக்தியால் இயங்கின. இக்காலத்துக் கண்டம் விட்டுக் கண்டம் பாயும் போர்க்கருவிகளையும் (Inter-Continental Bullistic Missiles) அணுகுண்டுகளையும் (atom bombs) போலப் போர் செய்வோர் நேரடியாகக் கை கலந்து சண்டை செய்யாமல் போர்க்கருவிகள் வழி எதிரியைத் தாக்கினர். இராம ராவணப் போரும் அத்தகையதே. அவ்விருவரும் ஒருவர் மேலொருவர் விட்ட கணைகளும் அவை விளைத்த கேடுகளும் அவற்றின் பெயர்களுமே சுவையூட்டுவன. இராமன் ஏவிய கணைகளாவன: சிவாத்திரம், அக்கினியாத்திரம், காந்தர்ப்பாத்திரம், ஞானத்திரம், கருடாத்திரம், நாராயணத்திரம், பிரமாத்திரம். இராவணன் ஏவிய தாமதாத்திரத்தின் விளைவுகள் எவை?

*இருளொரு திசை யொரு திசை வெயில் விரியும்*
*சுருளொரு திசை யொரு திசை மழை தொடரும்*
*உருளொரு திசை யொரு திசை யுரு முரலும்*
*மருளொரு திசை யொரு திசை சிலைவருடும்.*

(உயுத்த கண்டம்-இராவணன் வதைப் படலம்)

இராவணன் விடுத்த அசுராத்திரத்தை இராமனுடைய அக்கினியாத்திரம் அழித்தது. முன்னவன் மாயாத்திரத்தை பின்னவன் காந்தர்ப்பாத்திரம் ஒழித்தது. மலைகளையொத்த பாம்புகளும் பேய்களும் அசுரர்களும் விண்ணிறைந்து மாயஞ்செய்தனர். இஃது மாயாத்திரத்தின் விளைவு. இராமன்

ஞானாத்திரம் விடுத்து அவற்றை அகற்றினான். இராவணன் எறிந்த சூலம் இராமன் மேல் பட்டுதிர்ந்து விட்டது. வீடணன் முன் சொன்னது இராவணன் நினைவுக்கு வந்து விட்டது.

*சிவனோ வல்லன் நான் முகனல்லன் திருமாலாம்*
*அவனோ வல்லன் மெய்வரமெல்லா மடுகின்றான்*
*தவனோ வென்னிற் செய்து முடிக்குந் தரனல்லன்*
*இவனோ தானவ் வேத முதற் காரணனென்றான்.*

(உயுத்த காண்டம்—இராவணன் வதைப்படலம்)

இராவணனுடைய நாகாத்திரத்தை இராமனுடைய கருடாத்திரம் ஒழித்துவிட்டது. இராமனுடைய பிரமாத்திரம் இராவணனுடைய உயிரைக் குடித்து மீண்டும் இராமனுடைய அம்பறாத் தூணியை அடைந்தது.

*முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய பெருந்தவமும் முதல்வன் முன்னாள்*
*எக்கோடி யாராலும் வெலப்படாயெனக் கொடுத்த வரமும் ஏனைத்*
*திக்கோடும் உலகனைத்துஞ் செருக்கடந்த புயவலியுந் தின்று மார்பில்*
*புக்கோடி உயிர் பருகி புறம்போயிற்று இராகவன்றன் புனிதவாளி.*

(உயுத்த காண்டம் – இராவணன் வதைப்படலம்)

**கற்பெனும் வெந்தீ கனலைச்சுட்டது**

'பிழை என்னை மீட்பான் பொருட்டிலங்கை எய்தினேன்' என்று சொல்லி அரக்கன் மாநகரில் உறைந்த சீதையை ஏற்றுக் கொள்ள இராமன் மறுத்தான். இளையவன்றனை அழைத்து 'இடுதி தீ' என்று உரைக்கவும் இலக்குவன் தீ வளர்த்தான்.

*'மனத்தினால் வாக்கினால் மறுவுற்றேனெனின்*
*சினத்தினாற் சுடுதியால் தீச்செல்வா'*

என்றாள் சீதை.அக்கினி சீதையை ஏந்திவந்து இராமனிடம்,

*அங்கியான் என்னை இவ்வன்னை கற்பெனும்*
*பொங்கு வெந்தீச் சுடப் பொறுக்கிலாமையால்*

*இங்கணைத் தேனுறு மியற்கை நோக்கியும்*
*சங்கியா நிற்றியோ எவர்க்குஞ் சான்றுளாய்.*

(உயுத்த காண்டம்-மீட்சிப் படலம்)

என்று சொல்லவும் இராமனும் சீதையை ஏற்றுக் கொண்டான்.

**நான்முகன் வந்தான்**

உண்மையுணர்த்தும் காலம் வந்துவிட்டது. எனவே நான்முகனே இராமன் முன் தோன்றினன்.

*மன்னர் தொல் குலத்தவர் இனத்துணை யொரு மனிதன்*
*என்ன உன்னலை உன்னை நீ இராம! கேளிதனைச்*
*சொன்ன நான் மறைத் துணிவினிற் றுணிந்த மெய்த்துணிவு*
*நின்னலாதில்லை, நின்னில் வேறுளதிலை, நெடியோய்!*

(உயுத்த காண்டம்-மீட்சிப் படலம்)

என்று பலபடப் போற்றினன் படைப்புக்கடவுளும்.

**ஏறமர் கடவுளும் வந்தான்**

*'உன்னை நீ யொன்றும் உணர்ந்திலைபோலு மாலுரவோய்;*
*முன்னையாதியா மூர்த்தி நீ மூவகை யுலகின்*
*அன்னை சீதையாமாது நின் மார்பின் வந்தமைந்தாள்.*

(உயுத்த காண்டம்—மீட்சிப்படலம்)

என்றான் ஏறமர் கடவுளும்.

**மாண்ட தசரதனும் மாநிலம் வந்தான்**

மாண்ட தந்தை தசரதனும் பூதலத்திடைப் புகுந்தான். உவகையால், வணங்கிய மகனையும் மருகியையும் வாழ்த்தி இராமன் விரும்பியபடி கைகேகியையும் பரதனையும்

மன்னித்து உம்பருலகேகினன். அமரர் இராமன் விரும்பியபடி இறந்த வானரர்களை உயிர்பெற்றெழச் செய்தார். தேவர் மலர் மாரிபொழிய புட்பகவிமானத்தமர்ந்து மனைவியோடும் தம்பி யோடும் வீடணன் சுக்கிரீவன் ஆகியோர் சூழ இராமன் அயோத்தி சென்றான்.

கம்பராமாயணத்தில் இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றல் கள் பற்றிய விரிவான ஆராய்ச்சி பயன் தருவதாயும் சுவை மிக்கதாயும் இருக்கும். கம்பனைப் பல கோணங்களில் பார்க்க வேண்டிய துறைகளில் இதுவும் ஒன்றாகும்.

## குறிப்புகள்

1. A. L. Basham: *The Wonder That Was India:* Religion, Cults, Doctines and Metaphysics. pp.260-261. Fontana Books. 1971.
2. "In our *Ramayana* also the supernatural elements play a very important part in the action of the story. But it is as natural of a character different to that of the western epics." (V. V. S. Aiyar: *Kambaramayana-A Study.* The Supernatural Elements)
3. "Kamban is able to make the story rise steadily in interest from the beginning to end. Compare this with 'Paradise Lost', written by one of the greatest poets of any age or country, but who felt himself bound by the example of the Iliad and the rule of Aristotle. If we prefer the chronological treatment of the original epics for their steady increasing interes and their greater stateliness we are not blind to the grand poetical qualities of the epics as understood by Homer and Milton." (V. V. S. Aiyar: *In Media Res* from *Kambaramayana*-A Study)

4. "The world of *Paradise Lost* is an ideal conventional world. Not only dramatic but all poetry is founded upon illusion. When we are once inside the poet's heaven, our critical faculty may justly require that what takes place there is quite consistent with itself with the laws of the fantastic world. Much of the 'Paradise Lost' which we meet with resolves itself to the conditions that the poet demands, a determination to insist that his heaven peopled with deities, dominions, principalities, powers shall have the same material laws which govern our planetary system." (Mark Patterson quoted in *Kambaramayana-A Study*.)

5. "The profound human interest of the Homeric poems is enhanced by another feature in which they stand altogether alone-their mode of blending divine and human action. The Homeric gods meet mortals in hand to hand fight, they wound them or are wounded by them, they aid or thwart them, advise or deceive them in visible presence; and it is the unique distinction of Homer that all this is managed without ever making the deities less than divine or the mortals more than human." (R.C. Jebb: *An Introduction to Homer*).

6. "Besides Destiny the Shakespearean Drama admits direct supernatural agencies-witches, ghosts, apparitions as well as portents and violations of natural law. It appears to me idle to contend that these in Shakespeare are not really supernatural, but must be interpreted as delusions of their victims. But to determine Shakepeare's general practice, it is enough to point to the Ghost in Hamlet which as seen by three persons on separate occasions is indisputably objective;

and a single instance is sufficient to establish the assumption in the Shakespearean Drama of supernatural beings with a real existence," (Richard G. Moulton: *Shakespeare as a Dramatic Artist*-Super natural Agencies).

7. மைதிலி சரண் குப்த: பஞ்சவடி (ஹிந்தி)

8. It is noteworthy that in Kamban's hands the demon Ravana frequently takes on the proportions of a heroic figure and contrasts favourably with the rather weak and unimpressive Rama. Like Milton, Kamban was of the devil's party without knowing it. (A. L. Basham: *The Wonder that was India*-Language and Literature).

# மைம் முகிலே சந்தாக மாட்டாயோ

பிரிவாற்ருமையால் வருந்தி மெலிந்திருக்கும் தலைவி யைச் சென்றடையத் தலைவன் தன் தேரில் வெகு வேக மாகச் சென்று கொண்டிருக்கிருன். கார் காலத்துக்கு முன் அவளைச் சென்றடைய வேண்டுமேயென்ற கவலை வேறு. மழையின் அறிகுறி தென்பட்டுவிட்டாலும், ''ஆகா, கார் வந்தது; தலைவன் தேர் வரவில்லையே,'' என்று உடற் சோர்வு மட்டுமின்றி உள்ளச் சோர்வுமன்ருே அவளை வருத்தும்.

*ஆற்று வெள்ளம் நாளை வரத் தோற்றுதே குறி: மலை*
*யாள மின்னல் ஈழ மின்னல் சூழ மின்னுதே!*
*நேற்றும் இன்றும் கொம்பு சுற்றிக் காற்று அடிக்குதே! கேணி*
*நீர்ப்படு சொறித் தவளை கூப்பிடுகுதே!*
*சேற்று வண்டு சேற்றைக் குழைத்து ஏற்று அடைக்குதே! மழை*
*தேடி ஒரு கோடி வானம் பாடி ஆடுதே!*

தலைவியின் நிலைமையை நன்குணர்ந்திருந்த தலைவன் தேரை வேகமாகச் செலுத்தக் காரணமிதுவே. ''எத்துணை வேகத்தில் நாம் செல்கிருேம், என்று தன் தேரோட்டும் திறனை வியந்த தலைவன் ஆர்வம் நீரிற் குமிழியாயிற்று. மேலே வானத்தைப் பார்த்தான். இருட்டிக் கொண்டு வந்தது. கதிரவனை மேக படலம் மறைத்தது. பகைப்

புலனை அழிக்கக்கூடிய சேனை போல் திரண்டு முகிற் கூட்டம் ஓடலாயிற்று. பாவம் அவன் எத்திசையில் செல்கின்றனோ அவ்வழியைத் தான் கொண்டலும் கொண்டது. மேலே காரைப் பார்த்தான்; கீழே தன் தேரைப் பார்த்தான்; அசுர வேகத்துடன் செல்லும் தன் தேரைத் தான். மேக வேகத்துடன் தன் தேரின் நத்தை நடையை ஒப்பு நோக்கிய தலைவனுக்குத் தன் தேர் ஓடாத தேராகத் தோன்றியது. காருக்கு முன் வருவதாகத் தலைவிக்குத் தான் அளித்த உறுதி பாறையில் மோதிய அலைபோல் சிதறிப் போயிற்றே என்ற துயரம் மனத்தை அரித்தது. முகில் எழுப்பிய திகில் கண்ணிமைக்கும் நேரத்தில் அவனுக்கு அவன் மறைந்து ஓர் என்பு தோல் போர்த்த உடம்பே தென்பட்டது வெறுங் கூடு. ஆகவே தலைவிக்கு மேகத்தின் வழி தலைவன் செய்தி யனுப்புகிறான். "ஒளியிழந்த மதிபோன்ற முகமுடைய தலைவியைச் சந்தித்தால் ஓடாத தேரில் ஒரு கூடு வந்து கொண்டிருக்கிறதென்று சொல்லுங்கள்," என்று மேகங் களைப் பார்த்துத் தலைவன் உரைக்கிறான்.

*ஓடுகிற மேகங்காள்! ஓடாத தேரில் வெறுங்*
*கூடு வருகுதென்று கூறுங்கோள் — நாடறிய*
*நந்தித் திருவாளன் நன்னகரில் நன்னுதலைச்*
*சந்தித் திடுவீரேற் றன்.*

கற்பனை உலகில் அரியாசனத்தமர்ந்து கோலோச்சும் கவிஞன்,

**"காக்கை குருவி எங்கள் ஜாதி — நீள்**
**கடலும் மலையும் எங்கள் கூட்டம்,"**

எனக் காணும் பொருளனைத்தையும் தன்பால் அணைத் திழுத்துநட்புக் கொள்வான். குயிலும் மயிலும், முகிலும் தென் றலும், வண்டும் கிள்ளையும், அவனுடைய தூதர்கள், "மைம் முகிலே சந்தாக*மாட்டாயோ?" என்று தூதனுப்பி யவர்களில் காளிதாசன் முன்னணியில் நிற்பவன். காளிதாச னைப் பயிலாதவர் வடமொழி இலக்கியத்தைப் பயிலாதாரே.

---

*சந்து-தூது

'சாகுந்தலம்' உலக இலக்கிய மேடையில் கொலு வீற்றிருக்கும் ஒப்பிலாமணி. 'குமார சம்பவம்' அவனுடைய கற்பனைக் களஞ்சியத்தில் ஒளிகாலும் முத்து. 'மேக தூதன்' இயற்கையைக் காளிதாசன் ஓவியம் தீட்டுவதிலும் கற்பனைத் தேரில் உல்லாசமாக உலாவருவதில் வல்லவன் என்பதையும் காட்டும் பச்சை மரகதம். 'மேக தூத்' என்பதைத் தமிழில் 'மேகதூதன்' என்று சொன்னால் இழுக்கொன்றுமில்லை.

தலைவியைப் பிரிந்த யக்ஷன் ஒருவன் பிரிவாற்றுமையால் கடமையை மறந்திருந்த வேளையில் அளகேசன் சாபத்துக்காளானுன். மனிதரிடையில் சென்று ஓராண்டு வாழுமாறு குபேரன் அவனைச் சபித்தான். விந்தியமலைச் சாரலில் இராமகிரியில் குடிசை கட்டிக் கொண்டு வாழ்ந்த யக்ஷன் ஒரு நாள் ஒன்றையொன்று முட்டி விளையாடும் மதக்கரிகளைக் கண்டாள். அவன் அறியாமை என்னே! கார் காலம் வந்துவிட்டது. தலைவியுடன் கூடிவாழும் காலமன்றோ! தான் கண்டது வேழம் அல்ல மேகம் என்பதை உணர்ந்தான். பிரிவாற்றுமையைத் தலைவி எவ்வாறு தாங்கிக் கொள்வாள்? இருப்பினும் தான் உயிருடனிருப்பதைத் தலைவிக்குத் தெரிவித்து விட்டால் கூடும் நாளை எண்ணி உயிர் தரித்திருப்பாள். எனவே, கரியமேகத்தின் உதவியை நாடுகிருன். நறுமலர்கள் கொண்டு முகிலை வழிபட்டு அதன் புகழ்பாடுகிருன்.

*இளந்தென்றல் வீசும் இதயமறிந்து ஒருபால்;*
*எழில்மிகு சாதகப்புள் இன்னிசை எழுப்பும் ஒருபால்;*
*கண்டு நின்னைச் சூல் கொண்ட பறவைக் கணங்கள்*
*அணி வகுத்து முன் செல்லும் பணி செய்யுமாறே.*

கார்முகிலை 'உடன்பிறப்பே' என்றழைத்து, செல்லும் தூரம் நெடிதாகையால் அளகாபுரிக்குப் போகும் வழியை யக்ஷன் எடுத்துரைக்கிருன். கொண்டலின் இசையை யக்ஷன் இசைக்கின்ருன். வழியில் ஆம்ர கூடத்தின் உச்சி

யில் தங்கி, இளைப்பாறி, நர்மதையின் நீரைப் பருகி, விதீச நகரம் சேர்ந்து, அலைமோதும் வேத்திரவதியின் நீரைக் குடித்து அவளின் இதழமுதம் பருகுமாறும் யக்ஷன் சொல்கிறான். அவந்தி நாட்டின் உஜ்ஜயினி உயர் மாடங்களைக் காணத் தவறக் கூடாது என்றும் யக்ஷன் மேகத்துக்குச் சொல்லி வைக்கிறான்.

*மங்கையர்தம் மைவிழி ஒளிகாலும்*
*மாடத்துலாவுகின்ற போழ்தினில்;*
*நங்கை நின்மென் கொடியாள் இளநகை கோட்டி*
*காட்டு முகம் காணத் தவறேல்.*

மின்கொடியின் ஒளி கண்டு மாடத்துலாவுகின்ற மங்கையர் தம் விழி விடை பேசும். இக்காட்சி தவறவிடக் கூடிய தன்று. நிர்விந்தியை ஆற்றின் அழகை மேகதூதன் பருகாமல் போகக்கூடாது என்பது மேகதூதனுக்கு யக்ஷன் கூறும் நல்லுரை.

*நிர்விந்தியை நீர்ப்பறவை மேகலை பூண்டு,*
*திரையொலிக்க நடைபயின்று,*
*குழிநவில் கொப்பூழ்ச் சுழி காட்டி,*
*எழில் காட்டி இன்பரசம் காட்டி,*
*காதற்கனியாடும் கனிமொழியும் கண்டன்றோ!*

கந்தவதிக் கரையில் உள்ள சிவாலயத்தில் மாலைவரை காத்திருந்து பறையொலிக்குப் பதிலாக இடிமுழக்கம் செய்து சிவனை வணங்கச் சொல்லுகிறான் யக்ஷன் மேக தூதனுக்கு. மாலை வழிபாட்டுக்குப்பின் கும்மிருட்டில் காதலர் வீடு செல்லும் மாதர்க்கு வழிகாட்டியாக பாதையைப் பிரகாசிக்கச் செய்யவும் மின்னலுக்கு ஆலோசனை கூறுகிறான். ஒருவாறு கங்கைக் கரையை யடைந்து, தாகவிடாய் செய்து கங்கை உற்பத்தியாகுமிடத்திலுள்ள பாறைகள் கஸ்தூரி மான்கள் உராய்தலாலே வீசுகின்ற நறுமணத்தை நுகருமாறும் கொண்டலுக்கு யக்ஷன் சொல்கிறான். கைலாயகிரி சேர்ந்து

விட்டாலோ புதிதாகத் தந்தத்தை வெட்டியது போன்ற வெள்ளிப் பனிமலையைக் காணலாம். சிவபெருமான் தோளில் சாய்ந்து கௌரி அங்கிருப்பாளாயின் பயபக்தியுடன் அவள் ஏறிச் செல்லப் படிக்கட்டுகளாகுமாறும் யக்ஷன் மேகத்துக்கு உரைக்கிறான். கைலாசகிரியின் மீது அளகாபுரி உளது. "காதலன் மடியில் காதலி அமர்ந்திருப்பது போன்ற தோற்றம். அங்குள்ள மாடங்கள் மீது அமர்ந்திருக்கும் பொழுது நீ அவளுடைய கரிய கூந்தல் போல்வாய்," என்றும் யக்ஷன் மேகத்துக்குத் தெரிவிக்கிறான்.

காளிதாசனுடைய 'மேக தூதனி'ல் முதற் பகுதியில் யக்ஷன் அளகாபுரிக்குச் செல்லும் வழியைச் சொல்லி இரண்டாம் பகுதியில் தன் வீட்டைக் காண்பித்துச் சேதியைக் காதலிக்கு உரைக்கும் பாங்கையும் சொல்கிறான்.

தமிழிலுள்ள தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் தூதுப் பிரபந்தமும் ஒன்றாகும். தூது சொல்லும் பகுதிகளும் தனிப்பாடல்களும் உள. எனினும் மேகத்தைத் தூது விட்ட ஒரு நூல் தமிழில் உள்ளது. பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் இயற்றிய 'திருநறையூர் மேகவிடு தூது' என்பதுவே அந் நூல். காளிதாசனுடைய 'மேகதூதன்' உலக இலக்கிய அரங்கில் வெற்றிநடை போடுகிற போது மேகவிடு தூது இன்னொன்று பாடுவார் தன் திறனறியாதவராயிருக்க முடியாது. திருநறையூரில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் நம்பியிடம் காதல் கொண்ட தலைவி மேகத்தைத் தூது விடுகிறாள். ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய்தருளிய திருப்பதிகள் நூற்றெட்டு. அதில் ஒன்று பரமபதம்; இன்னொன்று திருப்பாற்கடல், பிற திருப்பதிகள் இப் புண்ணிய பாரதத்தில் உள. பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டு, சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பது, மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்று, நடு நாட்டுத் திருப்பதிகள் இரண்டு, தொண்டை நாட்டுத் திருப்

பதிகள் இருபத்திரண்டு, வடவேங்கடம், அகோபிலம் என்ற இரண்டு, வடநாட்டுத் திருப்பதிகள் ஒன்பது என்பவை எஞ்சிய நூற்ருறு. திருநறையூர் பொன்னிவளம் கொழிக்கும் கன்னிநாடான சோணுட்டுத் திருப்பதி.

திவ்வியகவி பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் மறந்தும் புறந் தொழா வைணவர். அழகிய மணவாளதாசர் என்ற மற்ருெரு திருநாமமும் உடையவர். பதினேழாம் நூற் ருண்டில் வாழ்ந்தவர். 'அஷ்டப் பிரபந்தம்' என்ற சிற்றிலக் கியத் தொகுதி இவரால் பாடப்பட்டது. திருவரங்கக் கலம் பகம், திருவரங்கத்துமாலை, திருவரங்கத்தந்தாதி, சீரங்க நாயகர் ஊசல், திருநாமம், திருவேங்கடமாலை, திருவேங்கடத் தந்தாதி, அழகரந்தாதி, நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி, என்ற எட்டும் கொண்டது 'அஷ்டப் பிரபந்தம்.' இவருடைய திருவரங்கக் கலம்பகத்தின் சிறப்பைப் பாடும் தனியன் ஒன்று.

*சொன்னேக்கும் பொருளேக்கும் தொடை நோக்கும்*
*நடைநோக்கும் துறையி னேக்கோ*
*டென்னேக்கும் காணவிலக் கியமாவ*
*தன்றி, இதில் ஈடுபட்டோர்*
*நன்னேக்கும் புத்தியும்பத் தியும் பெறுவர்;*
*முத்தியுண்டாம்; நானென் சொல்கேன்!*
*பன்னேக்க மணவாளர் பகர் அரங்கக் கலம்பகத்தைப்*
*பாரீர் பாரீர்!*

சொல்நோக்கும், பொருள்நோக்கும், தொடைநோக்கும், நடைநோக்கும், துறையின் நோக்கோடு எந்நோக்கும் காண இலக்கியம் ஆவது திருவரங்கக் கலம்பகத்துக்கு மட்டுமின்றி இவருடைய பிற நூல்களுக்கும் பொருந்தும். சிலேடைப் பொருளில் பாடுவதில் இவர் வல்லவர். திருவரங்கத்தந்தா தியில் பெரும்பகுதிப் பாடல்களின் நான்கு அடிகளிலுள்ள தொடக்கச் சொற்கள் ஒன்ருயமைந்து வெவ்வேறு பொருள் கொடுக்கின்றன. அவைகளில் ஒன்று :

*சிந்தா குலமுய்யக் குன்றெடுத் தாய் தென்னரங்க சுற்றஞ்*
*சிந்தா குலகம் படைத்தளித் தாய் நிலஞ் சென்றிரந்த*
*சிந்தா குலவுசெல் வந்தந்தை தாய்குரு தெய்வமு நீ*
*சிந்தா குலமடைந் தேனடி யேன் சென்மந் தீர்த்தருளே.*

இப்பாடலைக் கீழ்வருமாறு பிரித்து எழுதினால் பொருள் கொள்ள எளிதாயிருக்கும்.

*சிந்து ஆகுலம் உய்யக் குன்றெடுத்தாய்! தென்னரங்க! சுற்றம்*
*சிந்து ஆகு உலகம் படைத்து அளித்தாய்! நிலம் சென்றிரந்த*
*சிந்தா! குலவு செல்வம், தந்தை, தாய், குரு, தெய்வமும் நீ!*
*சிந்தா ஆகுலம் அடைந்தேன்; அடியேன் சென்மந் தீர்த்தருளே.*

[சிந்து ஆகுலம் - சிதறிய பசுக்கூட்டம்; சிந்துசுற்றம் ஆகு — கடலாற் சூழப்பட்ட; சிந்தன் — வாமன ரூபன், சிந்தா-விளிச் சொல்; சிந்தாஆகுலம்-மனக் கலக்கம்.]

"கண்ணனாக, சிதறிய பசுக்கூட்டத்தைக் காக்கக் குன்றை எடுத்தவனே! தென்னரங்கனே! கடலாற் சூழப் பட்ட உலகத்தைப் படைத்துக் காப்பவனே! சிந்தனாய் (குள்ளனாய்) மாவலியிடம் நிலம் இரந்தவனே! கொழிக்கும் செல்வம், தந்தை, தாய், குரு, தெய்வம், எல்லாம் நீயே. மனக்கலக்கம் அடைந்தேன். பிறவிப் பிணியொழிய அருள் வாயே," என்பது பாடலின் பொருள்.

பாடல்களில் வரிகளின் தொடக்கச் சொற்கள் ஒன்றாய் அமைவதை விரும்பிப் பாடிய புலவர்கள் பலர். எட்டைய புரம் கடிகைமுத்துப் புலவரின் பாடலொன்று. எட்டைய புரம் குறுநில மன்னனைப் புகழ்ந்து பாடிய கைக்கிளைப் பாடல்.

*கன்றுதொட்டுக் கனியுகுத்த கீர்த்தி வெங்கடேசு*
*ரெட்டா! கமலக்கண்ணு!*
*கன்று தொட்ட அத்தனையும் கைநெகிழ்ந்த*
*தறியாயோ! கலையும் சோர்ந்த*
*கன்று தொட்ட ரவிக்கையெல்லாம் காமனம்பு கிழித்தது*
*பார் கருத்துந்தானே*
*கன்று தொட்டுப் பட்ட சிட்டுப் போல் மெலிந்து*
*வாடுவதும் கண்டிலாயே!*

'திருவுடை மன்னனைக் காணிற் திருமாலைக் கண்டேனே' என்பதற்கேற்ப எட்டையபுரம் மன்னனைக் கண்ணனாகவே போற்றி விளி எழுகிறது பாடலில். ''கன்று உருவத்துடன் வந்த அசுரனைக் காலாற் பற்றி எறிந்து விளாங்கனியை உதிர்த்த வெங்கடேசு ரெட்டனே! கமலக் கண்ணனே! தொட்ட வளையல்கள் (கன்று) உன்னை நினைந்து மெலிந்ததால் கைகளினின்றும் சுழன்று விழுந்து விட்டதை நீ அறியாயோ! கலையும் சோர்ந்து அகன்று (விலகி) அணிந்துள்ள மார்பை மறைக்கும் சட்டையும் காமன்கணைகளின் வலிமையினால் கிழிந்து போயிற்றே! என் மனம் கூட கன்றிப் போன சிட்டுக் குருவியைப் போல மெலிந்து வாடி நிற்பதை நீ காண்பதில்லையே, ஏன்?'' இதுவே பாடலின் பொருள்.

நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான திருநறையூர் பற்றிப் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பாடுகிறார் :

*செய்ய சடையோன் திசை முகத்தோன் வானவர் கோன்*
*ஐயமறுத் தின்னம் அறியாரோ—துய்ய*
*மறுநறையூர் வண்டுழாய் மாயோன் செவ் வாயோன்*
*திருநறையூர் நின்றான் செயல்.*

இனிய மணத்துடன் தேனும் கூடிய துளவ மாலையை அணிந்த மாயோன் — செவ்வாயோன் — திருநறையூரில் கோயில் கொண்டிருக்கும் பெருமானுடைய செயலின் இரகசியத்தை செஞ்சடை சூடிய சிவனும் பிரமனும்

இந்திரனும் கூட அறியார் என்பது பாடலின் பொருள். ''இரும்பொழில் சூழ் நன்று ஆய புனல் நறையூர்'' என்று திருமங்கைமன்னன் அத்திருப்பதியை மங்களாசாஸனம் செய்கின்றார். ''நந்தா விளக்கின் சுடரே! நறையூர் நின்ற நம்பீ!'' என்றும், ''திருநறையூர்த் தேனே!'', என்றும், ''தென் நறையூர் மன்னும் மணி மாடக் கோயில் மணாளன்'', என்றும் அங்கு கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் பெருமாளை ஆழ்வார் போற்றிப் பரவுகின்றார்.

காளிதாசனுடைய 'மேக தூத'னுக்கும் பிள்ளைப் பெரு மாள் ஐயங்காரின் 'மேக விடு தூது' க்கும் ஒற்றுமை வேற்று மைகள் உண்டு. முன் சொல்லப்பட்ட நூலில் தலைவன் தலைவிக்குத் தூதனுப்புகிறான். பின் சொல்லப்பட்டதில் தலைவி தலைவனுக்குத் தூது விடுகிறாள். இரு நூல்களிலும் காதல் நோயால் பீடிக்கப்பட்டவர்கள் தூது செல்லும் மேகத்தின் சிறப்பைச் சொல்லி தங்கள் அவல நிலையைத் தூதனுக்கு விளக்குகிறார்கள். காளிதாசனுடைய 'மேக தூத'னில் கைலாசகிரியிலுள்ள அளாகாபுரிக்குச் செல்லும் வர்ணனை உள்ளத்தைக் கவர்கிறது. வானத்தில் காற்றுத் தேரில் ஊர்ந்து செல்லும் மேகத்தோடு நம்மையும் ஏற்றி விட்டு கைலாசகிரி வரை அழைத்துச் செல்கிறான் கவிஞன். பின் குபேரபட்டணத்தின் கொள்ளை அழகை நம் உள்ளத் தைக் கொள்ளை கொள்ளும் வகையில் எடுத்துச் சொல்கிறான். யக்ஷன் தேவருலகில் வாழ்ந்தாலும் சுய நலப்புலி. நறையூர் நம்பியிடம் தூதனுப்பும் தலைவியின் நிலைவேறு. தலைவி என்ற ஜீவாத்மா நறையூர் நம்பியாகிய பரமாத்மாவுடன் இணைய எடுத்துக் கொண்ட முயற்சி. காளிதாசனுடைய 'மேக தூதன்' இருபிரிவுகளிலடங்கும் — வழிவர்ணனையும் தூதுரைத்தலும். வழிவர்ணனை கொண்டலின் சிறப்பையும் காதலனின் அவல நிலையையும் செப்பி நிற்கிறது. தூதுரைத்தலில் அளகாபுரியின் அழகும் தலைவியின் நிலையும் அழகும் தலைவன் செய்தியைத் தலைவிக்குத் தெரிவித்தலும் அடங்கியுள்ளன.

திருநறையூர் நம்பியிடத்தில் காதல் கொண்ட தலைவி மேகத்தைத் தனக்காகப் பெருமானிடம் சென்று அவரை நினைந்துருகும் ஆற்றுண்மையை அவருக்குரைத்து, காதல் தணிய அவரிடமிருந்து திருத்துழாய் மாலை பெற்று வருமாறு பாடப்பட்ட நூலாகும். தலைவி மேகத்தை விளித்துப் பாடுவ தாயமைந்த இந்நூல் சொற்சுவை பொருட்சுவை நிரம்பியது. முதலாவதாக, தலைவி தான் தூதுவிடுக்க விருக்கும் மேகத்தின் புகழ்பாடுகிறாள். அடுத்தபடியாக தன் அவல நிலையைத் தூதனுக்குச் சொல்லி அவனுடைய இரக்கத்தைப் பெற விழைகிறாள். மூன்றாவதாக, தூது செல்லும் மற்றை யோர் பட்டியலைக் கொடுத்து எவ்வாறு அவரெல்லாம் தகுதி யில்லாதவர் என்பதை நிறுவுகிறாள். நான்காவதாக, தான் நண்ணித் தவிக்கும் தலைவன் — மால்தரும் திருமால் — அவன் ஊர்பாடிப் பேர்பாடி அவன் உறையும் தலவரலாறும் பாடுகிறாள். இறுதியில், தன் மையலை விரித்துரைத்து, தலைவனிடமிருந்து தார் வாங்கி வருமாறு வழி சொல்கிறாள் தலைவி. எவ்விதப் பலனையும் கருதாது உயிர் தழைக்க — உலகம் தழைக்க — தண்ணெற்ற நீரைப் பொழியும் மேகத்தை 'அரசே' என்று விளிக்கிறாள்.

*அங்கண்மா ஞாலத் தனைத்துயிர்க்கும்—தங்கா மும்*
*மாரி வழங்குதல் மாறாமே, கைம்மாறு*
*காரிய மென்று கருதாமே—பாரில்*
*துளிக்கின்ற தண்ணந் துளியமுதம் நல்கி*
*அளிக்கின்ற கொண்மூ அரசே!*
(கொண்மூ— மேகம்)

படைத்து அளித்துத் துடைக்கும் முத்தேவர் தொழிலை யும் செய்வதால் 'முத்தேவரும் நிகராமூர்த்தியே' என்று தலைவி மேகத்தைப் போற்றுகிறாள். நீள்விசும்பு தான் காரின் கருவறை — உறைவிடம். அங்குதான் மேகம் தவழ்ந்து விளையாடுகிறது ஆழ் கடல் நீர் குடித்து மலையை அரசு கட்டிலாக்கிச் சோலையிலே கண்ணுறங்குகிறது முகில்.

மைத்நகன்ற

*வானத்துளே பிறந்து வானத்துளே தவழ்ந்து*
*வானத்துளே தவழும் வானமே—வானத்து*
*வேலைவாய் நீரருந்தி வெற்பில் அரசிருந்து*
*சோலைவாய்க் கண்படுக்கும் தோன்றலே!*

(வானத்து வேலை—பெரிய சங்கினையுடைய கடல்; கண் படுக்கும்—உறங்கும்).

மாஞ்சோலை மஞ்சத்தில் மாமஞ்சு அமர்ந்திருப்பதை காளிதாசன் ஓவியம் வரைகிறான்:

''மாஞ்சோலைகளெல்லாம் பக்குவமாகப் பழுத்துப் பிரகாசிக்க தைலம் தீட்டிய கூந்தல் நிறமுள்ள தீ உச்சியில் உட்கார, தேவதம்பதிகள் வியந்து தரிசிக்க, நுனியில் கறுத்து சுற்றிலும் சிறிது வெளுத்திருக்கும் பூதேவியின் மென் முலையின் நிலையை ஆம்ரகூடன் அடைவான்.''

(மேகதூதன் 18 க. சந்தானம் தமிழாக்கம்)

*நல்லார் ஒருவருளரேல் அவர் பொருட்டு*
*எல்லார்க்கும் பெய்யும் மழை.*

ஆம், அவருள்ளும் சிறப்பாகப் பொற்புடை—கற்புடைப் பெண்டிர்—கஸ்தூரி மணம் கமழும் கருங் கூந்தலைக் கொண்டவர் நலம் பெறுவதும் உலகம் உய்ய மாரி நீர் வழங்குதலாலன்றோ!

நானக்

*கருங்கொண்டை மங்கையர் தம் கற்பு நிலை நிற்ப*
*தருங் கொண்டலே உனைக் கொண்டன்றோ*

(நானம்—கஸ்தூரி)

என்று தலைவி முகிலுக்கு ஏற்றம் கொடுக்கிறாள். நறையூர் நம்பியின் காதலை விழையும் தலைவி மேகத்தை விளிப்பதுவே

கவின்மிகு சிறப்புடன் விளங்குகிறது. 'மேதகையை,' 'சீருயிரும் மேகமே,' 'நீல மஞ்சே,' 'விண் மாரியே', 'தண்மை விளையும் பயோதரமே', 'கோல மழையே,' 'நீல நிற மங்குலுக்கு வேந்தே', 'எழிலிக்கரசே', 'மைப்புயலே', 'அந்தரத்து விண்ணே', என்றெல்லாம் கொஞ்சியழைத்து "உன்னிடமல்லாமல் வேறு யாரிடம் என் வேட்கையை விண்டுரைப்பேன்? சாதகப்புள்ளும் மேகமும் போல உன் வரவை வேட்டிருந்தேன். 'அஞ்சேல்' என உன்னையன்றி எனக்கார் ஆதரவு சொல்வார்?" என்று தன் நெஞ்சைத் திறந்து காட்டுகிருள் தலைவி. "தூது செல்ல உன்னையல்லால் தகுதியுடையவர் உண்டோ காண்!' என்று புயலைத் தன் கயல் விழியால் நோக்கிச் சொல்லி மற்றையோர்க்கு மறுவுண்டு என்பதால் அவரை நாடுகின்ருளில்லை. "கருப்பு வில்லைத் தாங்கிய மன்மதன் என் உயிர் கொள்ளக் கங்கணம் கட்டி நிற்கிருன். தென்றல் என்ற தேரில் ஊர்ந்து வருகிருன். எனவே என் தூதுவனுகும் தகுதி தென்றலுக்கில்லை. கிளியை அருகிருத்தி உரைக்கவும் வழியில்லை. ஏனெனில், கிளி மன்மதன் குதிரையாகும். வண்டுக்கு விண்டுரைக்கவும் வல்லவளல்ல நான். காமன் வில்லின் நாணன்ருே அச் சுரும்பு! கூவும் குயிலின் உதவியும் நாடவல்லேனல்லேன். குயில் உருவிலான் சின்னமன்ருே! சிபிச்சக்கரவர்த்தியின் உடலை அறுக்கச் செய்த புருவும் எனக்கு வேண்டாம். குளிரில் நடுங்கும் மடமயிலும் சொல்லிய சொல்லும் நாகணவாய்ப்புள்ளும் என் மனத்தை எடுத்தோதா. பாலையும் நீரையும் பிரித்துப் பருகும் அன்னம் எனக்கும் என் நாதருக்கும் இடையே உள்ள நட்பைப் பிரித்து விடுமாதலால் ஒட்டும் உள்ளமன்றி வெட்டும் உள்ளம் எனக்கு உதவாது. எனவே மழையாய்ப் பொழிந்து உலகுக்கு உதவுகின்ற நீ எனக்கு உன் பேச்சுதவியும் மெய்யுதவியும் செய்ய வேண்டுகிறேன். தாமோதரன் பால் சென்று என் விண்ணப்பஞ் செய்தருளல் வேண்டும். மின் கேள்வனுகிய நீ (மின்னலுக்குக் கணவன்) விண்ணோர் பெருமானை என் கேள்வனுக்கு அழகும் இளமையும் வீணே போகாமல்,

சிலைத்தால்

ஊனாய் உடலாய் உறுதுணையாய்த் தெய்வமாய்
ஆனா மருந்தாய் என் ஆருயிராய் ஆனாத
நெஞ்சமாய்க் கண்ணாய் நினைவாய் வினையேற்குத்
தஞ்சமாய் நின்ற தனிமுதலை

அடைந்து, தூது சொல்லி தெய்வத்துழாய் கொணர்ந்து ஆதரவு தரவேண்டும்,'' என்று தலைவி மேக தூதனிடம்முறை யிடுகிறாள். ''தூது செல்லல் இழிவன்று. பஞ்சவர்க்காய்த் தூது சென்றான் மாயோன். அனுமன் போனான் இராமனுக் காக. விட முண்ட கண்டன் பரவை நாச்சியாரிடம் தூது நடந்தான். இவரினும் உயர்ந்தோர் எவருளர்? எனவே எனக்காக நீ ஏகுவாய்,'' என்று தலைவி தூதுரைத்தலின் பெருமையையும் சாற்றுகிறாள். தூது செல்பவர்க்கு ஏற்றம் கொடுப்பது உலக வழக்கையொட்டியது. அழகரிடம் கிளி யைத் தூதனுப்பிய தலைவி கிளியினும் மற்றோரெல்லாம் தாழ்ந்தவர் என்று சொல்கிறாள்.

பேசென்றே

சுடுபட்ட வெள்ளை யெகினத்தைத் தூதுவிட்டாற்
சூடுபட்டார் துணிந்து சொல்வாரோ—கூடுகட்டி
அன்பாய் வளர்த்த தாயார்க் குதவாக் கோகிலந்தான்
என்பால் அருள்வைத் தியம்புமோ—தன்பேர்
அரியென்று சொன்னால் அளியென்று சொல்லும்
வரிவண்டு பேசி வருமோ—விரகஞ்செய்
வன்கால திக்கின் மலைவா யிருக்கின்ற
தென்காலும் என்காதல் செப்புமோ—பொன்காதல்
வண்டலையுந் தாரான்முன் மாதரையெல் லாந்தூற்றும்
கொண்டலையுந் தூதுவிடக் கூடுமோ—உண்ட
படியேழுங் காக்கும் பரங்கருணை யான்முன்
கொடியோரும் போவாரோ கூறாய்.

—அழகர் கிள்ளை விடுதூது கண்ணிகள் 199—204.

[எகினம்—அன்னம்; சூடுபட்டார் — உச்சிக் கொண்டையுடையார், அன்னம்; சூடுண்டவர்

என்பது மற்ருெரு பொருள். காலதிக்கு—தென் திசை; தென்கால் தென்றற் காற்று; மாதரை — பெண்களை; மாதரை—பெரிய பூமி; கொடியோர்— காக்கைகள், கொடுமையை யுடையவர்.)

''தேன்பிலிற்றும் துளவமாலையை யணிந்திருக்கும் நறையூர் நம்பியிடம் தூது செல்வாய்! வானில் திவலைத் துளி களைச் சுமந்து செல்லும் என் தெய்வமே!'' என்று மேகத்தை வேண்டுகிருள் தலைவி. ''நான் காதல் கொண்ட தலைவன் தன்னிகரில்லாத தனிமுதல்வன். மீனுகி, ஆமையாய், பன்றியாய், வாமனனுய், மானிடராய் அவதாரம் எடுத்த வனன்ருே! பைந்நாகப் பள்ளியில் அவன் துயிலாத் துயி லிருக்க வன்னத் தாமரையில் வீற்றிருக்கும் அன்னம்-திரு மகள்—திரைமடந்தை, ''நானிருக்க நித்திரைமடந்தையை அணைந்தனையே' என்று ஊடினுள். மானிடமங்கை வடிவாக மலைமகளும் கலைமகளும் ஏவற்ருெழில் கேட்ப நறையூரடைந் தாள். அச் செந்திருவை நாடி தெய்வ வடிவகற்றி, மானிட சரீரம் பூண்டு தன் செல்வி உகந்த வனம் ஈதென்று சுகந்த வனமடைந்தான் பெருமாளும்.

முழுதும்

*அறியாமை செய்தேன் அது பொறுத்தி என்ன*
*வெறியாழி அம்மான் இரங்கிச்—செறிதுழாய்க்*
*கோதை மணம் புணர்ந்த கொண்டலும் அப்புண்டரீக*
*மாதை மணம் புணர்ந்து வைகியபின்,*

பூதலத்தோர் பேறு பெறவே மானிட வடிவெடுத்தான்'' என்று தலைவி கதை சொல்கிருள் காருக்கு.

தமிழிலக்கியத்தின் தனிச்சிறப்பு அதன்கண் உள்ள இயற்கை வர்ணனை. சங்க இலக்கியத்தின் நன்கொடையை நலமே பருகி இயற்கை எழிலை ஓவியம் தீட்டாத புலவன் தன் புலமையை நிலை நாட்டாதவன். ஆழ்வார்களும் நாயன்மார்களும் தாங்கள் சென்ற திருத்தலங்களில் நிலவும் இயற்கைக் காட்சிகளை இறைவனைக் கண்டது போலவே

செஞ்சொற் தமிழில் வடித்தனர். காவிரி பாயும் சோழ நாடு பொன்னி நாடெனப் புகழ் பெற்றது. சோழனையே பொன்னியின் கணவனெனப் போற்றுவது மரபு. திருவரங்கம் காவிரி சூழப்பெற்ற திருத்தலம். காவிரிக் கரை யான் தானே திருமாலும், காவிரிக் கரையிலுள்ளது திருநறை யூரும். அக்காவிரியைப் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் 'திருநறையூர் நம்பி மேகவிடு தூது' என்ற பிரபந்தத்தில் ஓவியம் தீட்டியிருப்பது வாழையடி வாழையாய்த் தமிழிலக் கியத்தின் மரபில் வந்தவர் என்பதை ஐயமறக் காட்டுகிறது. இதோ அந்த எழிலோவியம் :

மேலைச்

*சிகர குடகிரியிற் சென்றிழிந்து கீழ்*
*மகரக் கடல்வயிறு மட்டும்—அகலிடத்திற்*
*பாரம் கிழித்துப் பரவி மதகு இடறி*
*ஆரம் சுருட்டி அகிலுருட்டி—நாரம்*
*நுரையெறிந்து வித்துருமக் கொத்து நுடங்கத்*
*திரையெறிந்து முத்தம் சிதறிக்—கரையிற்*
*கொழிக்கும் காவேரி குதித்தோடப் பாய்ந்து*
*சுழிக்கும் காவேரித் துறையான்.*

[பாரம்—கரை; மதகு—மடை; இடறி—மோதி ஆரம்—சந்தனம்; நாரம் நீர்; வித்துருமக் கொத்து—பவளக்கொத்து; நுடங்க—அசைய; முத்தம் சிதறி— முத்துக் களைச் சிந்தி; கொழிக்கும் கா—கொழித்தற்கிடமாகிய சோலை; வேரி தேன்; குதித்தோட பொங்கியெழ.]

மேகத்தைத் தூதுவிடும் தலைவி எழுபத்து நான்கு சதுர யுகம் நீலத்தடவரை போல் நின்ற பிரானை காவேரித் துறை யான் என்று வர்ணிக்கிறாள். மேற்கில் நீலமலைச் சிகரத் தினின்று 'இழும்' என இழிந்து கிழக்கில் கடல் வரை நீண்டு, கரையை உடைத்துக் கொண்டு விரிந்து பரந்து, சந்தன மரங்களை அடியோடு பெயர்த்துத் தள்ளி, அகிற்கட்டைகளை உருட்டிக் கொண்டு, நுரைத்துக்

கொண்டு, பவளக் கொத்துக்கள் நீர்த் திரைகளுடன் போராட முத்துக்களைச் சிதறி, கொழித்துக் குலுங்கும் சோலைகளின் மலர்களில் பெருகும் தேன் குதித்தோடப் பாய்ந்து சுழித்துச் செல்லும் காவேரித்துறையான். 'அச்சோ ஒருவர் அழகியவா' என்று ஆழ்வார் வியக்கின்றாரே. அவன் கோயில் கொண்டருளிய திருநறையூரில் பகலை இரவாக்கும் வண்டுகள் ரீங்காரம் செய்கின்ற சோலைகள் விசும்பில் ஓடும் வேகத்தை வழிமறிக்கும். தேங்கமலச் பூமிசை அன்னம் உறங்கும். வலம்புரிச் சங்கையும் சக்கரவாகப் பறவைகளையும் ஏந்தி நிற்கும் தடாகங்களும் மன்மதனும் மனமகிழும் வெண்ணிலா ஒளி பரப்ப, கரும்பு வயல்களும் அவ்வூரின் செழிப்பைச் செப்பி நிற்கும். தன்னையே போல, நம்பி அவ்வூருக்கு அன்னையே போல அருள் செய்வான். திருநறையூர் திருமங்கையாழ்வார் ஈடுபாடு கொண்டிருந்த திருப்பதியாகும். பல பாசுரங்களால் இத்திருப்பதியை அவர் மங்களாசாஸனம் செய்திருக்கிறார். அவைகளிற் சில :

"அகில் குறடும், சந்தனமும், அம்பொன்னும்
அணிமுத்தும்
மிகக் கொணர்ந்து, திரை உந்தும் வியன் பொன்னித்
திருநறையூர்."

"சீர்தழைத்த கதிர்ச்செந்நெல், செங்கமலத்து இடை
இடையில்
பார் தழைத்துக் கரும்பு ஓங்கிப் பயன் விளைக்கும்
திருநறையூர்."

"பொறி ஆர் மஞ்ஞை பூம்பொழில் தோறும் நடம் ஆட
நறுநாள் மலர்கொண்டு இசைபாடும் திருநறையூரே."

"நெகுவாய் நெய்தல் பூமது மாந்தி கமலத்தின்
நகுவாய் மலர்மேல் அன்னம் உறங்கும் நறையூரே."

சோழன் கோச்செங்கணான் நம்பியைத் தொழுது சேர பாண்டியர்களை வெல்லுதற்கு வெற்றிவாள் பெற்ற தலம் இது. திருமங்கையாழ்வார் பாசுரங்களில் இச்செய்தியைக்

காணலாம். மணம் நாறும் செண்பகத்தை மோந்து வகுள மலர்மேல் மணிவண்டு துயிலும் இத்திருநறையூரில், தெய்வ வாள் கொண்ட சோழன் சேர்ந்த திருநறையூர் சேருமாறு பர காலன் பக்தர்களை அழைக்கிறார்.

*"இன வண்டு ஆலும்*
*உழும் செலவில் மணி கொணர்ந்து கரை மேல் சிந்தி,*
*உலகு எல்லாம் சந்தனமும் அகிலும் கொள்ள,*
*செழும் பொன்னி வளம் கொடுக்கும் சோழன் சேர்ந்த*
*திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே."*

*"மேல் எழுந்து விலங்கல் பாய்ந்து,*
*பொன்சிதறி, மணிகொணர்ந்து கரைமேல் சிந்திப்*
*புலம் பரந்து நிலம் பரக்கும் பொன்னி நாடன்,*
*தென்தமிழன், வடபுலக்கோன், சோழன் சேர்ந்த*
*திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே."*

நம்பி நின்ற நறையூரில் சில்லென்று முல்லை பல் அரும்பும் ஒரு பக்கம்; கருங்குவளை கண்காட்டும் ஒரு பக்கம்; வயல் களில் முத்துக் கொழிக்கும்; மென்மலர் மேல் களித்து, வண்டு தேன் உண்ணும்; மனமகிழ்தென்றல் அலர் தூற்றும்; அது கேட்டு தண்முல்லை முறுவலிக்கும். புள் நிறைந்த பூங்காவில் பொன்னணி மடமாதர் கண்காட்டத் தாமரை முகம் காட்டும்.

இயற்கை எழில் முகம் மலர்ந்து மணம் வீசும் திருநறை யூரிக் காவிரித் துறையானை,

*மருநறையூர் வீதி மணிமாடக் கோயில்*
*திருநறையூர் வாழ் வாசுதேவனை*

நாமம் பலமொழிந்து திருவீதி உலாவரும்போது தான் மையல் கொண்ட கதையை முகிலுக்கு உரைக்கிறாள் தலைவி. இரணியன் உரங்கிழித்த பன்னகத்தான்; கடல் வண்ணத் தான்; சக்கரத்தான்; வஞ்சக் கஞ்சனைத் துஞ்சச் செய்தான்; பங்கயக்கை ஆரணன்; கேசவன், ஆழியான், அச்சுதன்;

இடையன், இருடிகேசன்; முகுந்தன், மாதவன், கோவிந்தன், சீதரன், மாயன், மதுசூதனன், திருமால், முராரி, அருளாளன், என்று வாயினிக்க அவன் நாமம் செப்பி, திருவாய்மொழியும் திருமொழியும், வேதன் வாய் மொழியும் முழங்க திருநறையூர் வீதியிலே அவன் உலா வந்தபோது,

''என் நெஞ்சும், என்கலையும், என் நாணும் சங்குமவன்
தன் நெஞ்சறியத் தனி தோற்றேன்'',

என்று தலைவி கொண்டலுக்கு உரைத்தாள். உள்ளம் அவன்பால் சென்றது; உடை நெகிழ்ந்தது; நாண் அழிந்தது; வளை கழன்றது. தலைவனுக்குத் தெரியும் முழுமையும் இழந்து நிற்கின்றாள் தலைவி என்று. ''என் மேல் போர் தொடுப்போர் எத்தனை பேர்! எழில் இக்குச் சிலை* மாரன், அழல் வீசும் தென்றல், வெய்ய கதிர் வீசும் மதி, குயில் என்ற இவர்களை நறையூர் நம்பி ஒறுக்கலாகாதா? தாயோ கடிகின்றாள்.

''பந்து கழல் மறந்து பாவை கிளி துறந்து
சந்து பனிநீர் தனத்தகற்றி—வெந்துயராய்ப்
போதக் கலனிழந்து பூவிழந்து நீரிழந்து
காதற் சிறையிருத்தல் கண்டாயே''

என்று தன் மனத்தைத் திறந்து காட்டுகிறாள் மறந்து, துறந்து, இழந்து, நிற்கும் தலைவி. தூதனுகிய மங்குலுக்குக் காதலரங்கு களியரங்காய் இல்லாது கடும் சிறையாயிற்றே! தலைவன் கூடுவானு என்று குறிபார்க்கக் கூடலிழைத்துக் கை சோர்ந்தாள் தலைவியும்.

''கொந்துற்ற
கொய்துழாய் மார்பகலம் கூடுங்கொலோ வெனவே
கைதுழாய் மண்கழித்துக் கை சோர்ந்தேன்.''

காளிதாசன் 'மேகதூத'னில் யக்ஷன் மேகத்துக்குக் கைலாயத்தில் உள்ள அளகாபுரிவரைக்கும் வழி சொல்லித்

* இக்குச்சிலை—கரும்புவில்

தன் காதலிக்குத் தூது சொல்லும் விதத்தையும் எடுத் தோதுகிறான்.

"அந்த அளகாபுரியில் குபேரன் மாளிகைக்கு வடக்கில் என் வீடு, தூரத்திலிருந்தே வானவில் போன்ற மனோகர மான வாசற்படியோடு விளங்கும். அதனருகில் என் காதலி யால் அபிமான புத்திரனாகப் பரிபாலிக்கப்பட்ட பாலமந்தார மரம் கைநீட்டிப் பறிக்கும்படி பூங்கொத்து நிரம்பி நிற்கும்."

"மெல்லியலாள்; மங்கைப் பருவத்தினள்; கூரிய பற் களுடையவள்; கோவைப் பழமொத்த அதரத்தாள்; குறுகிய இடையுடையவள்; பின் பாரத்தால் ஆடி அசைந்து நடப் பவள்; தனங்களின் கனத்தால் சிறிது முன் வளைந்து இருப் பவள்; நான்முகன் சிருஷ்டி செய்த கன்னிகைகளில் ஆதி போன்றாள்; அன்னாள் அங்கு இருப்பாள்."

"நீ சேரும் சமயம், முகிலே, அவள் நித்திரையில் சுக மாக ஆழ்ந்திருப்பின் பக்கத்தில் ஒரு யாமகாலம் பொறுமை யுடன் காத்திருக்கக் கடவாய்; வெகு கஷ்டப்பட்டுக் கனவில் கணவனைக் கண்டு கழுத்தில் இரு கைகளாலும் இறுகத் தழுவிய என் காதலியின் ஆலிங்கனம் நடுவில் நழுவிப் போதல் நலமன்று."

"மழைத்துளிகள் கூடிய குளிர்ந்த காற்றால் அவளை எழுப்பி, புதிதாக மலரும் மாலதி மொட்டுக்களோடு தானும் ஆறுதலடைந்து ஆச்சரியத்தால் கண்களை விரித்து விழிக்கும் அம்மானினியிடம் ஜன்னலில் வீற்றிருந்து, மின்னலை உள் ளடக்கி, மெதுவான இடியின் ஓசை மொழிகளால் பேச ஆரம்பிப்பாய்."

"சுமங்கலியே, உன் கணவனின் மித்திரனான மேகம் யான்; அவன் செய்தியை என் இதயத்தில் வைத்து உன் உன் அருகில் வந்திருக்கிறேன்."

"எவன் தோழிகளுக் கெதிரில் சொல்லக் கூடிய வெளிப் படையான பொருளை உன் முகத்தின் ஸ்பர்சத்திற்காசைப்

பட்டுக் காதில் இரகசியமாகச் சொல்லுவானே அவன் உன்னைக் காதால் கேட்பதற்கும் கண்ணால் காணுவதற்கும் இயலாது, வருத்தத்துடன் தொகுத்த வாக்கியங்களை என் மூலமாகக் கூறுகிறான்.''

''பிரியங்குக் கொடியில் உன் அங்கத்தையும், ஒடுங்கிய மான் விழியில் உன் பார்வையையும், சந்திரனில் உன் முகத்தின் காந்தியையும், மயில் தோகையில் உன் கூந்தலையும், நதிகளின் சிற்றலைகளில் உன் புருவத்தின் விசித்திரப் போக்கையும் பார்க்கின்றேன். ஆயினும் அந்தோ! கொடிய கோபமுடையவளே! இவை ஒன்றிலும் உனக்கு உவமை காணவில்லை.''

''தேவதாரு மொட்டுக்களின் தனி மொட்டுக்களைப் பிளந்து அவற்றிலிருந்து வழியும் பாலில் நறுமணம் கமழ்ந்து கொண்டு இமயமலையிலிருந்து தென் திசை நோக்கி வீசும் மாருதங்களை, என் கட்டழகியே, ஒருவேளை உன் அங்கங்களை ஸ்பர்சித்து வந்திருக்குமென்று எண்ணி நானும் ஆலிங்கனம் செய்கின்றேன்.''

''எனது க்ஷேமத்தை அறிந்து ஊர்வம்பை நம்பி என்னிடம் அவநம்பிக்கை கொள்ளாதே. பிரிவால் அன்பு குன்றி விடுமென்று அறியாதார் கூறுவர். ஆனால் இஷ்டமுள்ள பொருளிடம் அனுபவிக்காத ஆசைகள் ஒன்று சேர்ந்து பிரேமைக் குவியல்களாகின்றன.''

செய்தி முடிந்து மேகத்தைப் பார்த்து யக்ஷன் சொல்கிறான்.

''முதல் விரகத்தால் தாங்காத துக்கமுடைய உன் தோழிக்கு இவ்வாறு ஆறுதல் அளித்து முக்கண்ணன் வாகனத்தின் கொம்பால் கீறப்பட்ட சிகரத்தையுடைய மலையிலிருந்து துரிதமாகத் திரும்பிவந்து அறிகுறியுடன் அனுப்பப்பட்ட அவளது க்ஷேம வார்த்தைகளால் காலையில் மலரும் மல்லிகை போல் என்னுயிரையும் தாங்கியருளுவாய்.''

''என் பிரார்த்தனையை, நேசத்தாலோ இவன் கஷ்டப் படுகிறான் என்ற கருணையாலோ, அங்கீகரித்துப் பூர்த்தி செய்த பிறகு, மாரிகாலத்து மேன்மையைப் பெற்று, இஷ்ட முள்ள தேசங்களில் திரிவாய். உன் மின்னலை விட்டு எக் கணமும் கார்முகிலே! என்னைப்போல் பிரிந்து வருந்தா திருக்கக் கடவாய்.''*

அளகாபுரியில் வாடி வதங்கி நிற்கும் தலைவிக்குச் சேதி உரைக்கும் முறையை யக்ஷன் மேகத்துக்குப் பயிற்று வித்ததைக் கண்ட நாம் பொன்னி நாட்டில் திருநறையூர் நம்பியை எண்ணி மெலிந்து வாடும் தலைவி தன்னுடைய மேக தூதனுக்கு வழிவகைகள் சொல்லிக் கொடுப்பதையும் காணலாம். ''மாதுளபத்தாரான் அவன்; வேட்கையெல்லாம் தந்தான் அவன். வையமெல்லாம் பெற்றான் அவன்; எவரும் காணப் பெருதான் அவன். அற்றார்க்கு வாய்ந்தான் அவன்; செம்பவள வாயான் அவன். அவன் முளரித் திருக் கரம் உன்னைத் தடுக்கு மென்றெண்ணாதே. செங்கண்மால் கைச்சங்கின் வாய் முழக்கம் கேட்டு மயங்காதே. எம்பெரு மான் வில்லைக் கண்டு கூசாதே.

*மின்சோதி யெல்லாம் விழுங்குமென்று நாந்தகத்தின்*
*நன்சோதி கண்டுமிக நாணாதே — நின் சோதி*
*மையமுகில் நீல மணியமுகில் எம்மான்றன்*
*மெய்யழகு நன்றென்று வெள்காதே.*

பெருமான் மணிக்கோயில் வாசலெல்லாம் கடந்து திருமுன் போய்த் தூரத்தில்,

*நின்று வணங்கி நெடிதேத்தி வாய் புதைத்துச்*
*சென்று பெருமான் திருச் செவியில்,*

ஒரு கொம்பனையாள் உன் தார் வேண்டி மயங்கிக் கிடக்கிறாள் என்று சொல்வாயாக.

*க. சந்தானம் : மேகதூதன் (மொழிபெயர்ப்பு)

*மட்புலனும் உண்டுமிழ்ந்த மாயோன் உருவமலால்*
*கட்புலனும் வேற்றுருவம் காணற்க புட்புறத்து*

*மூர்த்தி புகழே முகப்பதல்லால் மற்றொருவர்*
*கீர்த்தி செவி மடுத்துக் கேளற்க—நீர்த்தரங்கப்*

*பூவெடுத்த வெண்கோட்டுப் புண்ணியனை யல்லாது என்*
*நாவெடுத்து வேறு நவிலற்க – கோவெடுத்த*

*கங்கை யுலவுங் கழலினற் கல்லாதென்*
*செங்கை தலைமிசைபோய்ச் சேரற்க—பங்கயத்தான்*

*தாக்கும் திருத்துழாய் தாமமணம் அல்லாது என்*
*மூக்கும் பிறிதுமண மோவற்க—மாக்கடல் போல்*

*அஞ்சன வண்ணன் அடிக்கமலம் அல்லாது என்*
*நெஞ்சமும் ஒன்றை நினையற்க—செஞ்சுணங்கோடு*

*இங்கெழுந்த கொங்கை யெழுபிறப்பும் எம்பெருமான்*
*கொங்கு அணைந்த தோளல்லால் கூடற்க—மங்கை நல்லீர்*

*என்று வருந்தி யிருந்தாள் அவளுக்குன்*
*மன்றல் கமழ்தார் வழங்கென்று—நின்றிரந்து*

*பண்டுளவத் தாமரையாள் பற்றுந் திருமார்பின்*
*வண்டுளவத் தார் வாங்கி வா",*

[தரங்கம் - அலை; சுணங்கு - தேமல்; கொங்கு மன்றல் - நறுமணம்.

என்று மயங்கிக் கிடந்த மாது நெடுமால் துளவத்தார் இரங்கிப் பெற்று தன்காதல் சுரம் தணிய உதவுமாறு மேகத்தை வேண்டுகிருள்.

மாயோன் உருவம் மட்டும்கண்டு வேற்றுருவம் காணுது, மூர்த்தி புகழ் மட்டும் கேட்டு வேறு புகழ் கேளாது, புண்ணியன் பெயர் மட்டும் நவின்று மற்றொருவன் பெயர் நவிலாது, கண்ணன் கழல் மட்டும் தொழுது பிறிதொருவன்

கழல் தொழாது, திருத்துழாய் மணம் மட்டும் மோந்து வேறு மணம் மோவாது, அஞ்சனவண்ணன் அடிக்கமலம் மட்டும் நினைந்து பிறிதொரு தேவின் தாள் நினையாது, நறையூர் நம்பியின் தோளை அணைய வாடி வருந்தி மெலிந்து நலிந்து இரங்குகின்றாள்—ஏங்குகின்றாள் ஒரு மங்கை,'' என்று நம்பியிடம் விண்ணப்பம் செய்யுமாறு முகிலை வேண்டுகின்றாள் தலைவி.

காளிதாசனுடைய 'மேகதூதன்' உலக அறிஞர்கள் சுவைக்கும் இலக்கியப் படைப்பு. பிள்ளைப் பெருமாள் ஐயங்காரின் 'திருநறையூர் நம்பி மேக விடுதூது' என்ற நூலையும் உலக இலக்கிய அரங்கில் கொலுவீற்றிருக்க வைத்தால், தமிழுக்கும் உலக இலக்கியத்துக்கும் ஆற்றிய தொண்டாக அது அமையும்.

# திரிகூடராசப்பக் கவிராயர் நூல்களும் அவரது இலக்கியக் கொள்கையும்

## I ஆசிரியர்

***திரிகூடராசப்பக் கவிராயர்***

திரிகூடராசப்பக் கவிராயர் இற்றைக்கு இருநூற்றைம்பது ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்தவர். இதை உறுதிப் படுத்தும் வகையில் அகச்சான்று புறச்சான்றுகள் உள. திருக்குற்ருலக் குறவஞ்சியில் குறத்தி குறி விசேடம் சொல்லுங்காலே,

*"நன்னகர்க் குற்ருலந் தன்னில் எங்கும்*
*நாட்டுமெண் ணூற்றெண்பத் தேழாண்டு தன்னில்*
*பன்னக மாமுனி போற்றத்—தமிழ்ப்*
*பாண்டிய ரூர்முதற் சிற்ருேடு மேய்ந்த*
*தென்னூருஞ் சித்ரச பையை யெங்கள்*
*சின்னணஞ் சாத்தேவன் செப்போடு மேய்ந்த*
*முன்ஞளி லேகுறி சொல்லிப் பெற்ற*
*மோகன மாலைபார் மோகன வல்லி,"*

என்று அவரை ஆதரித்த சொக்கன்பட்டிக் குறுநில மன்னர் சித்திர சபைக்குச் செப்பேடு மேய்ந்தது கொல்லம் ஆண்டு 887 என்ற செய்தி கிடைக்கிறது. திருக்குற்ருலக்

குறவஞ்சியைக் குறும்பலாவீசர் சந்நிதியி லரங்கேற்று வித்துத் திருக்குற்ருலநாதர் கோயில் வித்துவானெனப் பட்டப் பெயர் கொடுத்துக் குறவஞ்சிமேடென இப்பொழுது வழங்கும் நன்செய் நிலத்தைப் பரிசாகக் கொடுத்துப் பாண்டிய நாட்டை ஆண்டுவந்த முத்து விஜய ரெங்க சொக்கலிங்க நாயக்கர் ஒரு தாமிரப் பட்டயமும் வழங்கினுன்.

திருகூடராசப்பர் திருக்குற்ருலத்துக்க ரு கி லு ள் ள மேலகரத்தில் பிறந்தவர். சைவவேளாளர் குலத்துத் தோன்றிய புலவர் பெருமான் இயற்றிய நூல்கள் பதினன்கு. அவையாவன : (1) திருக்குற்ருலக் குறவஞ்சி, (2) திருக் குற்ருலத் தலபுராணம், (3) திருக்குற்ருல யமக வந்தாதி, (4) திருக்குற்ருல நாதர் உலா, (5) திருக்குற்ருலச்சிலேடை வெண்பா, (6) திருக்குற்ருலப் பரம்பொருள் மாலை, (7) திருக்குற்ருலக் கோவை, (8) திருக்குற்ருலமாலை, (9) திருக்குற்ருல ஊடல், (10) திருக்குற்ருலக் குழல்வாய் மொழி கலிப்பா மாலை, (11) திருக்குற்ருலக் கோமளமாலை, (12) திருக்குற்ருலக் குழல்வாய் மொழி வெண்பாவந்தாதி, (13) திருக்குற்ருலக் குழல்வாய் மொழிப் பிள்ளைத்தமிழ், (14) திருக்குற்ருல நன்னகர் வெண்பா.

*திருக்குற்ருலம்*

திருக்குற்ருலம் பாண்டி நாட்டிலுள்ள பதினன்கு பாடல் பெற்ற சிவத்தலங்களுள் ஒன்ருகும். திருஞானசம்பந்தர் அருளிச்செய்த திருக்குற்ருலப் பதிகமும் திருக்குறும்பலாப் பதிகமும் மூர்த்தி தலச் சிறப்புக்களையும் அப்பதியின் இயற்கை எழிலையும் பற்றியவை,

*உற்ருராருளரோ—உயிர்கொண்டு போம் பொழுது*
*குற்ருலத்துறை கூத்தனல்லா னமக்*
*குற்ருராருளரோ,"*

என்று திருநாவுக்கரசரும்,

''உற்றாரை யான்வேண்டே னூர்வேண்டேன் பேர்
வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவு மினியமையுங்
குற்றாலத் தமர்ந்துறையும் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே,''

என்று மாணிக்கவாசகரும் திருக்குற்றால நாதரைப் போற்றிப் பரவினர்.

''சுற்றுதலூர் தோறுஞ் சுற்றவேண் டாம்புலவீர்
குற்றால மென்றொரு காற் கூறினல் – வற்றா
வடவருவி யானே மறுபிறவிச் சேற்றில்
நடவருவி யானே நமை,''

(திருக்குற்றாலக் குறவஞ்சி வாழ்த்து)

என்று திரிகூட ராசப்பக் கவிராயர் குற்றாலத் திருப்பதியின் மாண்பை எடுத்தோதுகிறார்.

பிறிதோரிடத்தில்,

''குற்றால மென்றொருக் கானினைப் பவர்க்குப் பாவமொரு
கோடி தீரும்
குற்றால மென்றொருக்கா லுரைப் பவர்க்குப்
புண்ணியங்கள் கோடி சேரும்
குற்றாலந் தனிலிருந்து செயுமொரு தவமனந்த
கோடியாகும்
குற்றாலங் கண்டு தொழக் கூடினர்க்கே பரமபதங்
கூடுமாதோ,''

குற்றாலம் என்ற பெயர் 1400 ஆண்டுத் தொன்மையுடையது. குத்தாலம் 'குற்றாலம்' என மருவி வழங்கலாயிற்று.

தொன்மையாந் தீவினைத் தொடர்ச்சி குவ்வதாந்
தன்மையாப் போழ்ந்தெரி தழனுத் தாலமா

*நன்மையா ரியம்தமிழ் நாமம் பெற்றது*
*சென்மநோ யறுப்பது திருக்குற் ருலமே,''*

என்று குற்ருலம் என்ற பெயர் ஆரியம்—தமிழ் சேர்ந்த கலவை என்று திரிகூட ராசப்பக் கவிராயர் சொல்கிருர்.

மதுரைத் தமிழ்ச்சங்கத்து நூற்பரிசோதகர் மு.ரா. அருணசலக் கவிராயர் இப்பாடலுக்கு எழுதிய அரும் பதவுரையாவது:- தொன்மையாம்-பழமையாகிய; தீவினைத் தொடர்ச்சி - பாவசம்பந்தம்; கு ஆம் தன்மையா - கு என்னும் மொழியாகும் இயல்பாக; போழ்ந்து - (அந்தக் குவ்வென்னுந் தீவினை தொடர்ச்சியைப்) பிளந்து; எரி – எரி கின்ற; தழல் நா - அக்கினியினது நாக்கு; தாலமா - தால மாக; ஆரியம், தமிழ் - சமஸ்கிருதந் தமிழாகிய (கு, தாலம்) என்னுமொழிகளால்; சென்ம நோயறுப்பது - பிறவிப் பிணி தீர்ப்பதாகிய; நாமம் - பெயரை; பெற்றது - இந்தத் தலம் அடைந்தது. இயல்பினுமென்னுஞ் சூத்திர விதியால், கு, தாலம் - குத்தாலமென்ருய்க் குற்ருலமெனத் திரிந்தது. (திருக்குற்ருலத் தலபுராணம் - திருக்குற்ருலநாதசாமிக் கோயில் பதிப்பு. அரும்பதவுரை. பக்கம். 335)

இன்னுமோரிடத்தில்,

*குற்ருலங் கோவி தாரஞ்*
*''சமருக மென்னு நாமந் தருவரை யாத்திநீழ*
*லமர்தலாற் றிருக்குற்ருல மானது மூலட்டானம்''*

(பராசக்திபீடச் சருக்கம், 10, திருக்குற்ருலபுராணம்)

என்ற விளக்கம் கிடைக்கிறது. குற்ருலம், கோவிதாரம், சமருகம் என்ற சொற்கள் மலையாத்தி மரத்தைக் குறிக்கும். அதன் கீழ் இறைவனிருத்தலால் திருக்குற்ருலமாயிற்று. திரிகூட ராசப்பக் கவிராயர் இருமுறைகள் 'குற்ருலம்' என்ப தற்கு வடமொழி ஊற்றைக் காண்கிருர். திருநெல்வேலி வரலாற்றை எழுதிய ராபர்ட் கால்டுவெல் குற்று, ஆலம்

என்ற இரண்டு சொற்களாலானது 'குற்ருலம்' என்று கருத்துத் தெரிவித்துள்ளார்.

திருக்குற்ருலத்தைக் கருப்பொருளாகக் கொண்டு அங்கு கோயில் கொண்டெழுந் தருளியிருக்கும் திருக்குற்ருலநாதரையும் குழல்வாய்மொழியம்மையையும் பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டத் திரிகூடராசப்பக் கவிராயர் பாடுகின்ருர். தில்லையிலும், சேதுவிலும் காசியிலும் வாசி பெறுந் திருக்குற்ருலம் தான் புலவர் பெருமானுக்கு உடல், பொருள், ஆவியெல்லாம். இறைவன் கைபுனைந் தியற்ருக் கவின் பெறும் வனப்பு. திரிகூடராசப்பக் கவிராயரின் நூல்களனைத்தும் இறைவனை இயற்கையின் எழிலிற் கண்டு திருக்குற்ருலத்தை மையமாகக் கொண்டமைகின்றன.

### திருநெல்வேலிச் சீமைப் புலவர்கள்

திருநெல்வேலிச் சீமை தமிழ் கொழிக்கும் பகுதி. பன்னிரண்டு ஆழ்வார்களில் நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள் அச்சீமையைச் சேர்ந்தவர்கள். தோள்வீறு கொண்ட அரசன் நாவீறுடையவனுயிருக்க முடியும் என்பதற்கு வெற்றி வேற்கை அதிவீரராம பாண்டியன் எடுத்துக்காட்டு. குட்டித் திருவாசகம் எனப் போற்றப்படும் திருக்கருவை யந்தாதிகள், நைடதம், கூர்மபுராணம், காசிகாண்டம் அவருடைய இறையன்புக்கும் புலமைக்கும் சான்று பகரும். மெய்கண்டாரின் சிவஞான போதத்துக்கு மாபாடியம் வரைந்த சிவஞான முனிவர் அம்பாசமுத்திரத்துக் கருகிலுள்ள விக்கிரமசிங்கபுரத்தில் தோன்றியவர். தென்மொழி வடமொழிப் புலவர். முருகனுடைய அருள்பெற்ற மற்ருெரு இருமொழிப் புலவர் குமரகுருபரர். அவருடைய நூல்களைப் பயின்றுதான் புலமையின் முதற்படியையே சேரமுடியும். தண்ணூர் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டில் தோன்றிய திரிகூடராசப்பக் கவிராயர் சிறந்த புலவராய் விளங்கியதில் வியப்பொன்றுமில்லை.

*குற்ருலர் கொத்தடியார்*

திருக்குற்ருலநாதர் கோயிலில் வழிவழியாகப் பணி செய்து வருவோருள் தாம் ஒருவர் என்பதைத் தம் நூல்களில் சொல்கின்ருர். திருக் குற்ருலச் சிலேடை வெண்பா அவை யடக்கத்தில் 'வள்ளைக் குழைபாகர் குற்ருலர் கொத்தடியேன்' என்றும் திருக்குற்ருலமாலை நூருவது பாடலில் 'முற்றுமினிக் கொத்தடியேனுக்குன் பொற்பதந்தா' என்றும் திரிகூடராசப்பர் கூறுவது இதை உறுதி செய்கிறது. திருக் கோயிற் பணிவிடைக்காரர் பற்றிய பட்டியலும் கொடுக்கிருர்.

*காவார்ந்த திரிகூடத் தாணுவுக்கும் வேணுமொழிக்கவுரி யார்க்குந்*
*தேவாரப் பணிபுரிவார் உழவாரப் பணிபுரிவார் சேவை செய்வார்*
*பூவாரத் தொடை தொடுப்பார் புகழ்வாசத் தொடை தொடுப்பார் பூசை செய்வார்*
*ஆவார்கள் முதலாய வடியார் கட்கடியார் கட்கடிமை செய்வாம்.*

(திருக்குற்ருலத் தலபுராணம் - கடவுள் வணக்கம், 19)

## II நூல்கள்

### (1) *திருக்குற்ருலக் குறவஞ்சி*

*குறவஞ்சி அல்லது குறத்திப்பாட்டு*

குறவஞ்சி நூல்களில் திருக்குற்ருலக்குறவஞ்சியும் பள்ளுப்பாடல்களில் முக்கூடற்பள்ளும் மடல்களில் வருண குலாதித்தன் மடலும் ஒளிசிந்தி நிற்கின்றன. இவ்வகை நூல்களில் இவை தலையாய சிறப்புப் பெற்று அறிஞர் உள்ளத்தைக் கவர்ந்துள்ளன. அகப் பொருட்சுவை ததும்பி நாடகத் தமிழில் குறவஞ்சி அமைகிறது.

''குறவஞ்சி என்பது குறத்திப்பாட்டு எனக் கூறப்படும். அது வருமாறு: தலைவன் பவனி வருதல், அப்பவனியைக்

கண்ட பெண்கள் அத்தலைவனைக் காமுறுதல், மோகினிப் பெண் (தலைவி) வருதல், அவள் பவனிவந்த தலைவனைக் கண்டு மயங்கல், மயங்கியபின் சந்திரன் தென்றல் முதலிய வரை நிந்தித்தல், அது கண்டு பாங்கி மோகினியை ஐயுற்ற தென்னென வினவுதல், தலைவி பாங்கியோடு உற்றதுரைத் தல், பாங்கி தலைவனைப் பழித்துக் கூறல், தலைவி தலைவனைப் புகழ்ந்து கூறல், தலைவி பாங்கியைத் தலைவனிடம் தூது போகச் சொல்லி வேண்டுதல், தலைவி பாங்கிக்குத் தலைவன டையாளங் கூறல், குறத்தி வருதல், தலைவி குறத்தியை மலைவளம் முதலியவை வினவுதல், குறத்தி தலைவிக்குத் தனது மலைவளம், நாட்டுவளம் முதலியவையும் பிறதேசத் திற்குறி சொல்லி விருதுகள் பெற்று வந்தமையுங் கூறல், தலைவி குறத்தியிடம் குறிகேட்டல், குறத்தி தெய்வந் தொழு தல், தலைவி நினைத்த காரியத்தைக் குறத்தி குறிமுகத்துக் கூறல், தலைவி குறத்திக்குப் பரிசிலுதவி விடுத்தல், குறவன் வருதல், பறவைகள் வருதல், கண்ணி குத்தல், பறவை களைப் பிடித்தல், குறவன் குறத்தியை விருப்ப முற்றுத் தேடல், பாங்கனோடு குறவன் குறத்தியடையாளங் கூறல், குறவன் குறத்தியைக் காண்டல், குறவன் குறத்தியினிடத் துப் புதிய ஆபரணங்களைக் கண்டு ஐயுற்று வினவுதல், அங் ஙனம் வினவும் ஒவ்வொன்றுக்கும் குறத்தி விடை கூறல், ஆகிய இவ்வகை யுறுப்புக்களமைய அகவல், வெண்பா, கொச்சகம், கலித்துறை, கழிநெடில் விருத்தம் இவைகளிடை யிடையே சிந்து முதலியவற்றை நாடகத்.தமிழாற்பாடுவது.'' (மு.ரா. அருணாசலக் கவிராயர் திருக்குற்றாலக் குறவஞ்சி முதற்பதிப்பின் முன்னுரை.)

*திருக்குற்றாலக் குறவஞ்சிச் சுருக்கம்*

திருக்குற்றாலக் குறவஞ்சியின் சுருக்கம் பின் வருமாறு: திருக்குற்றாலத்தில் திரிகூட நாதர் உலா வருகிறார். ஒரு மானைப் பிடித்து வந்த பெருமானைத் தொடர்ந்து வரும் ஒரு கோடிமான்கள் போல்வந்த மடவார் அவரைக் கண்டு காமுறு கின்றனர். அவர்களுள் ஒருத்தி உருத்திர கணிகையான

வசந்தவல்லி; மாரனைக் கண்ணாலே மருட்டிப் பேடையன்னம் போல் உருவசியும் நாணவே வருகிறாள். பந்து பயின்று வரும் வழியில் விடையிலேறி வந்த சித்தர் திரிகூட நாதரைக் கண்டு மையல் கொள்கிறாள். மயங்கிய வசந்த வல்லியைத் தோழிகள் உபசரிக்கின்றனர். காதற் கண்ணியில் அகப்பட்டுத் தவிக்கும் வசந்தவல்லி வெண்ணிலாவைக் கடிகிறாள்; மன்மதனைத் தூற்றுகிறாள். ஈசர் திருக்குற்றால நாதரிடம் மனத்தைப் பறிகொடுத்த சேதியை வசந்தவல்லி தோழிக் குரைக்கவே, நரைத்தமாடேறு வாரைக் கண்டு நங்கை காதல் கொண்டு தவிப்பதைத் தோழி பழிக்கிறாள். திரிகூட நாதர் புகழ்பாடி வசந்தவல்லி பாங்கியைத் தூதனுப்புகிறாள்; கூடலிழைக்கிறாள். அப்பொழுது சமய சஞ்சீவியென வளைக்கரமசைய மாத்திரைக் கோலேந்தி மணிக்கூடை தாங்கித் திரிகூடமலைக் குறவஞ்சி வருகிறாள். ''உன் சொந்தமலை எந்தமலை?'' என்று வசந்த வல்லி வினவ வசந்த காலத்தில் சோலையில் வால கோகிலம் போல் வந்த குறத்தி திரிகூடமலை வளத்தை இயம்புகிறாள். தென்னாரிய நாட்டு வளத்தையும் குற்றாலத் தலவளத்தையும் சொல்லோவியங்களில் குறத்தி வடிக்கிறாள். வசந்த வல்லி மேலும் வினவ, குறத்தி திரிகூடநாதர் கிளைச் சிறப்பை நவில்கிறாள்; குறிவிசேடமும் சொல்கிறாள். 'இலவுக்கும் சிவந்தவாயால் எனக்கொரு குறி சொல்வாயே', என்று வசந்த வல்லி கேட்கக் குறத்தி குறி சொல்கிறாள். 'வசந்திக்கு வந்த நோய் 'காய்ச்சலல்ல, காமக் காய்ச்சல்' என்று சொல்லித் திரிகூட நாதரிடம் அவள் மனத்தைப் பறி கொடுத்தாள் என்றுரைக்கவும் மாணிக்க வசந்தவல்லி நாணிக் கவிழ்கிறாள். வசந்த வல்லி குறி சொன்ன குறத்திக்குச் சருவாபரணம் பூட்டிப் பெருமையளிக்கிறாள்.

அடுத்தபடியாகக் களம் மாறுகிறது. குற்றாலக்குளுவ சிங்கன் சிங்கியாகிய குறத்தியைத் தேடியலைகிறான். கொக்கிறகு சூடிக் கொண்டும், குருவி வேட்டையாடிக் கொண்டும் கச்சையிறுக்கிக் கட்டிக் கொண்டும், துள்ளுமீசை முறுக்கிக்

கொண்டும் மிக்கான புலிகரடி கிடுகிடென நடுங்கத் திரிகூடச் சிங்கன் வருகின்ருன். புலியை மிரட்டும் சிங்கனுக்குத் தோழனுகிய எலியைத் துரத்தும் வீரன் ஈப்புலி நூவனும் அவனுடன் வருகின்றன. சாரை சாரையாய்ச் சாயும் பறவைகளைக் குளங்களிலும் வயல்களிலும் சிங்கன் காண்கின்ருன். கண்ணிவைத்துப் பிடிக்க எண்ணும் சிங்கன் எங்கெங்கெல்லாம் என்ன என்ன பறவைகள் சாய்கின்றன என்பதை விவரிக்கிருன். என்ருலும் சிங்கியை நினைத்துத் தவித்துப் புலம்பவும் செய்கிருன். பறவை வேட்டையில் சிங்கனுடைய தளர்ச்சியைக் காணும் நூவன் சிங்கியைத் தேடுமாறு அவனுக்கு அறிவுரை பகர்கிருன். சிங்கனும் நூவனும் சிங்கியைத் தேடும் முயற்சியில் ஈடுபடுகின்றனர். 'என் சிங்கி கறுப்பிலழகியடா', என்று சிங்கன் நூவனுக்கு அடையாளம் சொல்கிருன். எங்குந் தேடிச் சிங்கியைக் காணுத சிங்கன் குற்ருலத் தலத்தில் வந்து தேடி மருவுகிருன். ''எங்கே தான் போனுளையே?' என்று சிங்கன் புலம்புகிறபோது காணமற்போன பொருளைக் கண்டதுபோல் திருக்குற்ருலத் தெருவில் காண்கிருன். காதலென்னும் கடல் பெருகும் போது கரை குறுக்கிட்டாற் போல் வீதி குறுக்கிடவே நாணம் பூண்ட சிங்கியும் சிங்கனும் தம்முணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்கின்றனர். சிங்கனும் சிங்கியும் தூதுவந்த நளன்போலும் கன்னிமாடத்துத் தமயந்தி போலும் ஆகின்றனர். வாழ்த்துடன் திருக்குற்ருலக் குறவஞ்சி முற்றுப் பெறுகிறது.

திருக்குற்ருலக் குறவஞ்சி மூன்று பகுதிகளிலடங்கும்- (1) தற்சிறப்புப் பாயிரம், (2) நூல், (3) வாழ்த்து.

***தற்சிறப்புப் பாயிரம்***

தற்சிறப்புப் பாயிரத்தில் ஆசிரியர் விநாயகர், முருகக் கடவுள், குழல்வாய்மொழியம்மை, சைவசமயக் குரவர் நால்வர், அகத்தியர், கலைமகள், ஆகியோரின் புகழ்பாடுகின்ருர். நூற்பயன் கூறி அவையடக்கத்தில் மாலையில்

பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறுவது போல் குற்றுலத் தீசர் பேருடன் இணையப் பெற்றதால் பெரியவர்கள் தம் சொல்லைத் தள்ளார் என்று கவிஞர் பணிவுடன் சொல்கிருர். தற்சிறப்புப் பாயிரத்திலேயே ஆசிரியர் கவித்திறன் வெளி யாகின்றது.

அணிகளும் உருவகமும்

இந்நூலில் எதைத் தொடுவது எதை விடுவது என்பது பெருஞ்சிக்கலாகும். எடுத்த எடுப்பில் விநாயகர் துதியிலேயே ஆசிரியர் தம் கைவரிசையைக் காட்டுகிருர். 'ஐந்து கை வலான் காவலானே' என்று சொல்லும் பொழுது காத்தற் குரிய உறுப்பு கையென்பதற்கேற்ப 'காவலானே' என்று சொல்கின்ருர். அத்துடன் 'கைவலான் காவலான்' என்ற அடுக்குமொழியணிகளும் அழகுறக் கையாளப் பெறுகின்றன. பன்னிரண்டு தொடங்கி ஒன்று வரை எண்ணணியும் பொருள் நயமும் பொலியக் குற்ருலக் குறவஞ்சித் தமிழ் தந்த முருகக் கடவுளை அடுத்தபடி பாடுகிருர்.

பன்னிருகை வேல் வாங்கப் பதினொருவர் படைதாங்கப்
பத்துத் திக்கும்
நன்னவ வீரரும் புகழ் மலைகளெட்டும் கடலேழு நாடி
யாடிப்
பொன்னின் முடியாறேந்தி அஞ்சு தலையெனக் கொழித்துப்
புயநான் மூன்ருய்த்
தன்னிரு தாள் தருமொருவன் குற்ருலக் குறவஞ்சித் தமிழ்
தந்தானே.

[பன்னிரண்டுகை; பதினொரு ஆயுதங்கள்; பத்துத் திக்கு; ஒன்பது வீரர், உமா தேவியார் சிலம்பினின்று தோன்றியவர்; எட்டுமலைகள்; ஏழு கடல்கள்; ஆறுமுகங்கள்; அஞ்சுதலை - பயப்படுதலை அஞ்சு என்ற எண் தொனிக்கிறது; நான் மூன்று புயம், பன்னிரண்டு தோள்கள், இருதாள்கள், ஒரு வன், முருகவேள் ஒருவன்.]

கலைமகள் துதியில், ஆம்பலும் சிவந்த அடியிணையுடையாள், கரிய குழலுடையாள், படிகம் போல் வெள்ளைப் படிவத்தாள், ஞானக் கொடி, என்று கலைமகளைப் போற்றுகின்றார்.

*அடியிணை மலருஞ் செவ்வாய் ஆம்பலுஞ் சிவப்பினுளை*
*நெடிய பூங்குழலும் மைக்கணிலமும் கறுப்பினுளைப்*
*படிவமும் புகழுஞ் செங்கைப் படிகம் போல் வெளுப்பா ஞானக்*
*கொடிதனைத் திருக்குற்றாலக் குறவஞ்சிக் கியம்புவோமே.*

சிவப்பு, கறுப்பு, வெளுப்பு என்ற நிறங்களுள்ள உறுப்புக்களைக் கூறிக் குறவஞ்சியென்பதற்கேற்ப 'ஞானக்கொடி' என்று ஆசிரியர் உருவகம் செய்கின்றார்.

குமரகுருபரர் கலைமகளை 'ஞானப் பிராட்டி' யென்று 'முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமி'ழில் போற்றுவது ஒப்பு நோக்கற் பாலது.

திரிகூட நாதரைச் 'சிவக் கொழுந்து' என்றும், குழல் வாய் மொழியம்மையைக் 'குவலயம் பூத்தருள் கொடி' என்றும் ஏத்துவது ஆசிரியரின் இறையன்பைக் காட்டுகிறது.

*திரிகூட நாதர் பவனி—ஒலிக்கதம்பம்*

நூலை இரு கூறுகளாகப் பிரிக்கலாம். இறைவன் பவனி முதல் காதல் கொண்ட வசந்தவல்லிக்குக் குறத்தி குறி கூறுவது வரை முதற்கூறு. குறவனாகிய சிங்கன் குறத்தியாகிய சிங்கியைத் தேடி வருவது முதல் குறவனும் குறத்தியும் சந்தித்து அளவளாவுவது வரை இரண்டாம் கூறு.

இறைவன் உலா வருதலைக் கட்டியக்காரன் எச்சரிக்கை கூறுகிறான். இன்றும் சிவன் கோயில்களில், உலாக்களில் இடம்பெயரும் பொழுது எச்சரிக்கை கூறப்படுவதைக் கேட்கலாம்.

திரிகூடநாதர் விடையின் மேலேறிப் பவனி வந்தார். 'மேக்கெழுந்த மதி சூடிக் கிழக்கெழுந்த ஞாயிறு போல் மேவினுர்' என்று கவிஞர் பெருமான் திங்களுக்கும் ஞாயிற்றுக்கும் திசைகளைச் சேர்த்துரைத்த கவிநயம் அருமை உலகெலாந் தழைக்கக் குழல்வாய்மொழித் தையலாள் இடமிருக்கத் திருக்குற்ருலநாதர் பவனி வந்தார். உலா வரும் போது எழுந்த ஒலிதான் எத்தனை வகை! இடி முழக்கமென யானைமேல் பேரி முழங்குகிறது; துடி முழக்கம் வேறு; அடியார் முழக்கும் திருப்பல்லாண்டிசை; தமிழ்த் திருமுறைகள் பாடும் ஒலி ஒரு புறம்; மறைகளொலி மற்ருெரு புறம்; தம்புருவும் வீணையும் மிழற்றுகின்றன. கொத்துமலர்க் குழல் தெய்வமங்கையர் குரவை நடிக்கின்ற முழக்கம் கடல் முழக்கம் போலுள்ளது. மத்தளம் புயல் போல் முழங்குகின்ற ஒலியும் சேர்ந்து கொள்கிறது.

*சேலேறுங் கலைகவிழிக் கணைதீட்டிப் புருவ நெடுஞ்*
*சிலைகள் கோட்டி*
*மாலேறப் பொருது மென்று மணிச் சிலம்பு முரசறைய*
*வருகின்ருரே.*

**மதியிழந்த மங்கையர்**

பவனிவந்த இறைவனைக் கண்டு மதியிழந்த மங்கையர் நிலையைப் புலவர் சித்திரிக்கின்ருர்.

*ஒருகைவளை பூண்டபெண்கள் ஒருகைவளை பூணமறந்*
*தோடுவார் நகைப்பவரை நாடுவார் கவிழ்வார்.*
*கருது மனம் புறம் போக ஒரு கண்ணுக்கு மையெடுத்த*
*கையுமா யொருகணிட்ட மையுமாய் வருவார்.*
*நிருபனிவன் நன்னகரத் தெருவிலே நெடுநேரம்*
*நில்லானே மதனையின்னம் வெல்லானே வென்பார்.*

**வசந்தவல்லி வருகை—அழகு சிந்தும் சொற்ருெடர்கள்**

வசந்தவல்லியும் தெய்வ ரம்பை போலவே வந்தாள்.

*பெண்ணுக்குப் பெண் மயங்கவே வசந்தவல்லி*
*பேடையன்னம் போலவே வந்தாள்.*

*கையாரச் சூடகமிட்டு மின்னுரை வெல்லக்*
*கண்ணிலொரு நாடகமிட்டு*
*ஒய்யாரமாக நடந்து வசந்தவல்லி*
*யோவியம் போலவே வந்தாள்.*

வசந்தவல்லியைக் கேசாதிபாதமாக வர்ணிக்கும் ஆசிரியரின் முரண் தொடைப் பெருக்கமும் சொற்றொடர்களிலுள்ள நயங்களும் பிறவர்ணனைகளும் சொற்றொடராட்சிகளும் அவருடைய சிந்தனைச் செழிப்புக்கு எடுத்துக் காட்டு. 'நான் சொற்றொடர்களின் காதலன்'* என்பார் ஜான் கீட்ஸ் என்ற ஆங்கிலப்புலவர். திரிகூடராசப்பரின் சொற்றொடர்களிற் சில காணலாம். இருண்ட மேகம் போன்ற கொண்டையாள், விழிக்கெண்டையாள், பூமுருக்கினரும்பு இதழினுள், பிறை போலிலங்கு நுதலினுள், அரம்பை தேச வில் புருவத்தாள், அறிவை மயக்கு மங்கைப் பருவத்தாள், கரும்பு போலினித்து மருந்து போல் வடித்த சொல்லினுள், முத்துநிரை பதித்த பல்லினுள், பல்லினழகை எட்டிப் பார்க்கு மூக்கிலொரு முத்தினுள், அழகு குடி கொளு முகத்தினுள், செல்லக் கடகமிட்ட செங்கையாள், இருகொங்கையாள், உடையினுள், நடையினுள் என்றெல்லாம் தித்திக்கும் தமிழில் ஆசிரியர் சொல்லோவியம் தீட்டுகிறுர்.

வசந்தவல்லியைச்

*''சகம்*
*விலையிட்டெழுதியின்ப நிலையிட்டெழுதுந் தொய்யி*
*லெழுத்தினுள்,*

என்று குறிப்பிடுகிறுர். 'உலகை விலை பேசுவார்' என்று இன்றையக் கவிஞர் ஒருவர் பாடுவது ஒப்பு நோக்கத் தக்கது.

*''வெடித்த கடலமுதையெடுத்து வடிவு செய்த*
*மேனியாள் ஒரு*
*வீமப் பாகம் பெற்ற காமப்பாலுக் கொத்த*
*சீனியாள்,''*

வசந்தவல்லி.

---

* I look upon fine phrases like a lover.
—John Keats

''திருப்பிறந்த நாட்பிறந்த தெள்ள முதத்தாலே
உருப்பிறந்த மங்கை யொருத்தி''

என்று தேவை யுலாவில் பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் சொல்வார்.

'வீமப்பாகம் பெற்ற காமப்பால்' என்பதற்கேற்பச் 'சீனியாள்' என்று சொல்வது பொருத்தமாயுள்ளது.

*அணிகள் ஆடப் பந்தாடும் வசந்தவல்லி*

பந்து பயில்கின்ற வசந்ததல்லியைப் பற்றி உரைக்கும் பொழுது ஆசிரியர் அவளுடைய அணிகளைப் பற்றியும் சொல் கிருர். செங்கையில் வண்டும் (வளையலும்), சிலம்பும், தண்டையும், சூடகமும், முன்கை வால் வளையும், தோள் வளையும், பாடகமும் ஆட மலர்ப் பைங்கொடி நங்கை வசந்த சவுந்தரி பந்து பயின்ருள். பிறிதோரிடத்திலும் கையணி களாகிய மோதிரம், கடகம், முன்கை முதாரி ஆகியவை பற்றிச் சொல்கிருர்.

மன
முந்திய தோவிழி முந்தியதோ கர முந்திய
தோவெனவே, பந்து கொண்டாடினளே:

விந்தையாகப் பந்தடித்த வசந்தவல்லி, 'தொங்கத் தொங்கத் தொம்' மெனவும், 'நகுர்தத் திகுர்தத் தகுர்தத் தொம்' மெனவும் பந்தடித்தாள் என்ற ஒலிக் குறிப்புக்களை யும் ஆசிரியர் நமக்கு வழங்குகிருர்.

*காதல் நோய்க் கிரையான வசந்தவல்லி*

பவனிவந்த திரிகூடநாதரைக் கண்ட வசந்தவல்லி மயல் கொண்டாள். அவள் உடம்பு பசலை பூத்ததை 'என்னங்கந் தங்கமாக உருக்கிப் போட்டார்' என்று வசந்த வல்லி சொல்வது கவினுற அமைகின்றது. 'நடை கண்டா லன்னந் தோற்கும், வசந்தவல்லி விரகத்தாலே உடல்

சோர்ந்து தரை சேர்ந்தாள். தோழிகள் அவளை மாடத்திற் கொண்டு சேர்த்தனர்.

முருகு சந்தனக் குழம்பு பூசுவார் விரகத்தீயை
மூட்டி மூட்டி விசிறி வீசுவார்.
கருகுதே யுடலுருகுதே யென்பார் விரித்தபூவுங்
கரியுதே முத்தம் பொரியுதே யென்பார்.

இக்கற்பனையும் பொருளழகும் எந்தக் கவிஞனுக்கும் பெருமை தேடித் தரத்தக்கது. எண்ணிப் பார்த்து மகிழக் கூடியது.

செந்தழலின் சாற்றைப் பிழிந்து செழுசேஞ்தச்
சந்தனமென்றூரோ தடவினர்'

என்ற நந்திக் கலம்பகத்து வரிகளுடன் ஒப்பிட்டு மதிக்கத் தத்கது.

காதல் நோய்வாய்ப்பட்ட வசந்தவல்லி சந்திரனை நிந்திக்கிறாள்.

தண்ணமுதுடன் பிறந்தாய் வெண்ணிலாவே யந்தத்
தண்ணளியை யேன்மறந்தாய் வெண்ணிலாவே.
பெண்ணுடன் பிறந்ததுண்டோ வெண்ணிலாவே
யென்றன்
பெண்மை கண்டுங் காயலாமோ வெண்ணிலாவே.

நிலாவைக் கடிந்தவள் மன்மதனைப் பழிக்கிறாள்.

கைக் கரும்பென்ன கணையென்ன நீயென்ன மன்மதா —
இந்தச்
செக்கரும்பாவி நிலாவுமே போதாதோ மன்மதா.
திக்கெல்லாந் தென்றற் புலிவந்து பாயுதே மன்மதா —
குயிற்
சின்னம் பிடித்தபின் அன்னம் பிடியாதே மன்மதா.

தான் ஒருத்தி மட்டும் திரிகூடநாதர் மீது நாட்டங் கொள்ளவில்லையென்று தோழிகளிடம் வசந்தவல்லி உரைக்கிருள்.

*நன்னகிரி ஸீசருக்கு நான்ருனே*
*ஆசை கொண்டேன் மானே* பல
*கன்னியரு மாசை கோண்டார்* பன்னியரு
*மாசை கொண்டார்* மானே.

*தென்னிலங்கை வாழுமொரு கன்னிகை மண்*
*டோதரியாள் மானே* அவர்
*பொன்னடியிற் சேர்ந்தணைய என்ன தவஞ்*
*செய்தாளோ* மானே.

மண்டோதரி இராவணன் மனைவி; பஞ்ச கன்னியருள் ஒருத்தி. இராமாயணத்தில் அப்பழுக்கற்ற பாத்திரம். வால்மீகியும் கம்பனும் ஒரு சேர அவள் புகழ் பாடுகின்றனர். சைவத்தில் ஊறிய ஆசிரியர் மண்டோதரியைப் பாடுவது வியப்பன்று. இராமாயணம், திருவுத்தரகோசமங்கைப் புராணம் என்ற நூல்களில் மண்டோதரி பற்றிய குறிப்புக்கள் உள. திரிகூடராசப்பரும் பாடுகிருர். வேறு எவரும் மண்டோதரியைப் பாடியதாகத் தெரியவில்லை.

சிந்தை நொந்த வசந்தவல்லி தன் நோய் தீர்க்க வல்ல திரிகூடநாதர் பராமுகமா யிருக்கின்ருரே யென்று உடன்பாடு எதிர்மறைச் சொற்கள் அமைத்துப் பாடுவது இன்பம் பயப்பதாகும். 'புரத்து நெருப்பை மூவர்க்கு அவித்தவர்... என்னொருத்தி காம நெருப்பை அவிக்கிலார்' என்றும், 'அஞ்சு தலைக்குளாறு தலை வைத்தார் எனது மனத்தில் அஞ்சுதலைக்கு ஒரு ஆறுதலை வைப்பார்' எனவும், 'நஞ்சு பருகியமுதம் கொடுத்தவர் எனது வாள்விழி – நஞ்சு பருகி அமுதம் கொடுக்கிலார்' என்பவைகளிலுள்ள நயங்கள் பாராட்டத்தக்கன. அஞ்சு ஆறு, நஞ்சு அமுதம் என்னும் முரணலங்காரங்கள் காண்க.

வசந்தவல்லி தூதனுப்பவும் தயங்குகின்றாளில்லை. தன் நிலைமையைக் குற்றால நாதருக்கு உரைக்கச் சொல்வது நாடகப்பாங்கில் அமைந்துள்ளது.

*நேற்றைக் கெல்லாம் குளிர்ந்து காட்டி யின்று*
*கொதிக்கும்*
*நிந்திரா பாவிக் கென்ன போட்டி நடுவே யிந்தக்*
*காற்றுக்கு வந்ததொரு கோட்டி விரக நோய்க்கு*
*மாற்று மருந்து முக்கண் மருந்தென்று பரஞ்சாட்டி.*

காட்டி, போட்டி, கோட்டி, சாட்டி என்று நாடகப் பாங்கில் சொற்களை யமைத்திருப்பது கேட்பவர்க்கு விருந்தாகும்.

*திருக்குற்றாலநாதர் கோயிற் பூசை முறை*

திரிகூட நாதர் தனியரல்லவே. குழல்வாய்மொழி யம்மை உள்ளாள். எனவே சமயம் பார்த்துத் தூது ரைக்கும்படி வசந்தவல்லி தோழிக்குச் சொல்கிறாள். இப் பகுதி திருக்குற்றாலநாதர் கோயிலில் நடக்கும் பூசைகள், அபிஷேகங்கள், திருவிழாக்கள் பற்றிய செய்திக் கதம்ப மாகும். திரிகூட நாதருக்கு ஒன்பது காலப் பூசையுண்டு. ஏழு காலங்களில் அபிஷேகங்கள் உண்டு. ஓராண்டில் மூன்று திருவிழாக்கள் நடக்கும். தவிரவும் வசந்தவிழாவும், மாதந் தோறும் நடக்கும் விழாவும் குறிப்பிட்ட நன்னாள்களில் ஆண்டுதோறும் நடக்கும் விழாக்களும் உண்டு. திருக் குற்றாலக் கோயில் அமைப்பும் நடக்கும் பூசைகளும் மகுடாக மத்தில் விதித்தபடி உள. ஆசிரியர் காலத்துப் பூசை செய்த அருச்சகர் சிவராமநம்பி. வழிபாட்டின் போது கோயிலில் திருமறைகள் பாடப்படும்; மறைகள் ஓதப்படும். இறைவனைக் காலை, உச்சி, மாலை என்ற மூன்று தடவை களும் திருமேனி தீண்டும் உரிமைகளை ஆதி சைவர்கள் பெற் றிருந்தார்கள். இன்றும் அவர்களுக்குத்தான் அவ்வுரிமை.

*மலைக் குறவஞ்சி வந்தனளே*

திரிகூட நாதரை அடைய முடியுமோவென வசந்தவல்லி கூடலுமிழைத்துப் பார்த்தாள். அப்பொழுது சமய சஞ்சீவி

யெனக் குறி சொல்லும் குறத்தி வந்தாள். சிலை நுதலிற் கஸ்தூரித் திலதமிட்டு, கூந்தலில் வெட்சிப்பூ சூடி, கண்ணில் மையெழுதி, மாத்திரைக் கோல் தாங்கி, குன்றிமணி வடம் பூண்டு குறத்தி வந்தாள். குறத்தி வருகையைக் கொஞ்சு மொழியில் ஆசிரியர் பாடுகின்றார்.

*வஞ்சியெழில பரஞ்சி வரிவிழி நஞ்சி முழுவிற நெஞ்சி பலவினி*
*லஞ்சு சடைமுடி விஞ்சை யமலனை நெஞ்சில்*
*நினைவொடு மிஞ்சு குறிசொல—*
*வஞ்சி வந்தனளே மலைக் குறவஞ்சி வந்தனளே!*

சூர்ப்பணகை வருகையைச் சித்திரிக்கும் கம்பராமாயணப் பாடலை நினைவூட்டுகிறது.

**திருக்குற்றால மலைவளம்**

வசந்தவல்லியிடம் குறத்தி மலைவளம், நாட்டுவளம் கூறுவதும் குற்றாலத் தல மகிமை உரைப்பதும், குறி சொல்வதும், *திருக்குற்றாலக்குறவஞ்சியில்* சிறந்த பகுதி மட்டுமின்றி இலக்கிய வளம் நிறைந்த தமிழிலக்கியத்தின் சிறந்த பகுதிகளிலும் உரிய இடம் பெறும் பகுதியாகும்.

*வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்*
*மந்தி சிந்து கனிகளுக்கு வான் கவிகள் கெஞ்சும்*
*கானவர்கள் விழியெறிந்து வானவரை யழைப்பார்*
*கமன சித்தர் வந்து வந்து காயசித்தி விளைப்பார்*
*தேனருவித் திரையெழும்பி வானின் வழியொழுகும்*
*செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்*
*கூனலிளம் பிறை முடித்த வேணியலங்காரர்*
*குற்றாலத் திரிகூட மலையெங்கள் மலையே.*

*முழங்கு திரைப் புனலருவி கழங்கென முத்தாடும்*
*முற்றமெங்கும் பரந்து பெண்கள் சிற்றிலைக்*
*கொண்டோடும்*

கிழங்கு கிள்ளித் தேனெடுத்து வளம்பாடி நடப்போம்
கிம்புரியின் கொம்பொடித்து வெம்பு தினையிடிப்போம்
செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப் பந்தடிக்கும்
தேனலர் சண்பக வாசம் வானுலகில் வெடிக்கும்
வழங்கு கொடை மகராசர் குறும்பலவீசர்
வளம் பெருகுந் திரிகூட மலையெங்கள் மலையே.

ஆடுமர வீனு மணி கோடி வெயிலெறிக்கும்
அம்புலியைக் கவளமென்று தும்பிவழி மறிக்கும்
வேடுவர்கள் தினை விரைக்கச் சாடு புனந்தோறும்
விந்தையகில் குங்குமமுஞ் சந்தனமும் நாறும்
காடுதொறு மோடி வரையாடு குதிபாயும்
காக மணுகா மலையில் மேக நிரை சாயும்
நீடு பலவீசர் கயிலாசகிரி வாசர்
நிலைதங்குந் திரிகூட மலையெங்கள் மலையே.

* * *

செல்வினங்கள் முழவுகொட்ட மயிலினங்களாடும்
திரிகூட மலையெங்கள் செல்வ மலையம்மே.

நாட்டுவளம்

மலைவளம் சொன்ன குறத்தி நாட்டுவளமும் குற்றாலத் தல வளமும் சொல்கிறாள். திருக்குற்றாலர் நாடு தென்னாரிய நாடு எனக் குறிக்கப்படுகிறது.

சூழமேதி யிறங்குந் துறையிற்
சொரியும் பாலைப் பருகிய வாளை
கூழை வாசம் பலாவினிற் பாயக்
கொழும் பலாக்கனி வாழையிற் சாய
வாழை சாய்ந்தொரு தாழையிற்றாக்க
வருவிருந்துக் குபசரிப் பார் போற்
றாழை சோறிட வாழை குருத்திடச்
சந்த்ர சூடர் தென்னாரிய நாடே,

*நீங்கக் காண்பது சேர்ந்தவர் பாவம்*
*நெருங்கக் காண்பது கன்னலிற் செந்நெல்*
*தூங்கக் காண்பது மாம்பழக் கொத்து*
*சுழலக் காண்பது பூந்தயிர் மத்து.*

*வீங்கக் காண்பது மங்கையர் கொங்கை*
*வெடிக்கக் காண்பது கொல்லையின் முல்லை*
*யேங்கக் காண்பது மங்கல பேரிகை*
*யீசராரிய நாடெங்கள் நாடே.*

குற்றுலத் தலமகிமை சொல்ல முனைந்த குறத்தி சித்ரா நதி மூலம், தேனருவித்துறை, சிவ மது கங்கையாறு, செண்பகாடவித் துறை, பொங்குமாகடல், சித்ரசபை ஆகியவற்றின் சிறப்பைக் கூறுகிறுள். குற்றுலநாதர் கிளை விசேடமும் சொல்கிறுள்.

*வரலாற்றுச் செய்தி*

குறிசொல்லித் தான் பெற்ற விருதுகள் பற்றியும் குறத்தி விரிக்கிறுள். இப்பகுதியில் வரலாற்றுக்குப் பயன்படும் தகவல் கிடைக்கிறது. கவிஞர் பெருமானை யாதரித்த சொக்கன்பட்டிக் குறுநில மன்னன் சின்னணஞ்சாத்தேவன் சித்ர சபைக்குத் செப்போடு மேய்ந்தது கொல்லமாண்டு 887. அதே நானூற்றிருபத்து நாலில் செண்பக மாறன் காலத்தில் தென்காசிக் கோயில் எழுந்தது என்ற செய்தியும் கிடைக்கிறது.

*அன்பாய் வடகுண பாலிற் கொல்லத்*
*தாண்டொரு நானூற்றிருபத்து நாலில்*
*தென்காசி யாலய மோங்கக் குறி*
*செண்பக மாறற்குச் சொன்னபேர் நாங்கள்,*

என்று பெருமை பேசுகிறுள் குறத்தி.

*குறத்தியின் செந்தமிழும் சேரிமொழியும்*

குறிசொல்லவிருக்கும் குறத்தி 'அச்சார'மாகக் கஞ்சி கேட்கிறுள். கூழ் கொடுத்தாலும் பெரிய குடுக்கையளவு

மண்டுவாளாம். இலையும் (வெள்ளிலையும்) பிளவும் (வெட்டுப் பாக்கும்) கொடுக்குமாறு வேண்டுகிறாள். சிறிதளவு என்பது துக்கிணியென்றும் புகையிலை யென்பது சீனச் சரக்கென்றும் சொல்லப்படுகின்றன. தற்செயலாய்க் கன்னி சொன்ன பேச்சு, மேற் புறத்தில் ஆந்தை ஒலி, தும்மலும் காகமும் இடம் சொல்லுதல் என்ற அனைத்தும் வசந்த வல்லிக்கு வரவிருக்கும் ஆக்கத்துக்கு ஆதாரம் என்றும் சொல்கிறாள். பலபலவெனப் பல்லியும் சொல்லிவிட்டது. வருகுது, சொல்லுது, பகருது, வெல்லுது என்ற சொற்களைக் குறத்தி பேசுகிறாள். வசந்தவல்லி செந்தமிழிற் பேசினாலும் குறத்தி செந்தமிழிலும் பேசவல்லவள், சேரிமொழியும் பேசுபவள் என்பதைக் காட்டுகிறாள்.

### குறிமேடை

'வல்லியே உனக்கு நல்ல மாப்பிள்ளை வருவான்,' என்று முதலிலேயே குறத்தி சொல்லிக் குறிமேடை அமைக்கவும் சொல்கிறாள். தரையை மெழுகிக் கோலமிட்டு பிள்ளையார் பிடித்து வைக்கவேண்டும். குறிகேட்பவள் குடந்தாங்க வேண்டும். வாழை, மா, பலா என்ற முக்கனிகளும் படைக்க வேண்டும். தேங்காய் உடைத்து வைத்து வெற்றிலை—பாக்கும் வைக்க வேண்டும். அப்பம், அவல், பொரி, பலவகைத் தின்பண்டங்கள்,சர்க்கரை, எட்பொரி ஆகியவையும் படைக்கலாம். அறுகம்புல்லும் தண்ணீரும் வைக்க வேண்டும். நிறை நாழி நெல் அளந்து வைத்துக் குறிகேட்பவள் குலதெய்வத்தை மனத்தில் நேர்ந்து கொள்ள வேண்டும். குறிகேட்பவர்கள் இப்பழக்கத்தை இப்பொழுதும் கைப்பிடிக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

### அறம் வளர்க்கும் கை

குறும்பலவர் திருவுளத்தாற் குறி சொல்லத் தொடங்கிய குறத்தி வசந்தவல்லியைக் கையைக் காட்டும்படி சொல்லி அதன் சிறப்பை எடுத்துரைப்பது பாடிப்பாடி மகிழ வேண்டியவை.

முத்திரைமோ திரமிட்ட கையைக் காட்டா யம்மே
முன்கை முதாரியிட்ட கையைக் காட்டாய்
அத்தகட கம்புனைந்த கையைக் காட்டாய்
அலங்கார நெளியிட்ட கையைக் காட்டாய்
சித்திரச் சூடகமிட்ட கையைக் காட்டாய் பசுஞ்
செங்கமலச் சங்க ரேகைக் கையைக் காட்டாய்
சத்தி பீடத்திறைவர் நன்னகர்க் குளேவந்த
சஞ்சீவியே யுனது கையைக் காட்டாய்.

எத்தகைய கை வசந்தவல்லியுடையது? குறத்தி பாடுகிருள்.

மாருமவிருநிலத்தி லறம் வளர்க்கும் கையே
மனையறத்தா லறம் பெருக்கித் திறம் வளர்க்கும் கையே.
வீருக நவநிதியும் விளையுமிந்தக் கையே
மேன்மேலும் பாலமுதம் அளையுமிந்தக் கையே.
ஆருத சனங்கள் பசியாற்றுமிந்தக் கையே
அணங்கனையார் வணங்கி நித்தம் போற்று மிந்தக் கையே.
பேருக நன்னகரம் காக்குமிந்தக் கையே
பிறவாத நெறியார்க்கே யேற்குமிந்தக் கையே.

தேசிகவிநாயம் பிள்ளையின் 'கைத்திறன்' என்ற பாட்டு இக்குறவஞ்சிப் பாடலைப் பின்பற்றி எழுந்தது என்று சொல்லலாம்.

இனிய செந்நெற் புலம் உழுதற் கேர் பிடிக்கும் கையே
இன்னிசைகள் எழுப்ப வீணை ஏந்து மெழிற் கையே
கனியுதிர்ப்பக் கல்லெறியும் கவண் பிடிக்கும் கையே
கண்களிப்பப் படமெழுதிக் காட்டும் என்றன் கையே.
(மலரும் மாலையும் தேசிகவிநாயகம்பிள்ளை பாடல்கள்)

*குறத்தி குறி சொன்னாள்*

குற்றாலத்திலும் அதைச் சுற்றியும் உள்ள தெய்வங்களை வணங்கிக் குறிகளை வகைப்படுத்திச் சொல்லி 'இவள் குறி எது?' என வகுத்தருள வேண்டுகிறாள் குறத்தி. பொன், பொருள், செல்வம் களவு போயிற்றோ? அல்லது திருஷ்டி தோஷமோ? யாராவது செய்வினை செய்தார்களா? எவரா வது மயக்கம் செய்தார்களா? எவர் மீதும் காதல் கொண் டாளோ? திருமணம் வரப்போகிறதா? இவைகளில் ஒன்றில் அடங்க வேண்டுமே என்று குறத்தி தன் அறிவுத் திறனைக் காட்டுகிறாள். குறத்தி தரும் தெய்வங்களின் பட்டியல் சமய ஆராய்ச்சியாளர்க்குப் பயன்படும்.

*சொல்லக் கேளாய் குறி சொல்லக் கேளாய்*
*தோகையர்க் கரசே குறி சொல்லக் கேளாய்*
*முல்லைப் பூங்குழலாளே நன்னகரில் வாழ் முத்து*
*மோகனப் பசுங்கிளியே சொல்லக் கேளாய்,*

என்று வசந்தவல்லியை விளித்துத் திரிகூடநாதர் உலாவரும் பொழுது அவரிடம் அவள் நெஞ்சைப் பறி கொடுத்தாள் என்று குறத்தி சொல்கிறாள். அவள் மேற் பொய்க் கோபங்காட்டிக் குறியைச் சாதிக்குமாறு வசந்த வல்லி கேட்கிறாள்.

*வண்மையோ வாய்மதமோ வித்தை மதமோ என் முன்*
*மதியாமற் பெண் சேர வல்லவனென்றாய்*
*கண்மயக்கால் மயக்காதே யுண்மை சொல்லடி பெருங்*
*கானமலைக் குறவஞ்சி கள்ளி மயிலி.*

'திரிகூடநாதர்' என்பதற்குச் சிலேடைப் பொருளில் குறத்தி விளக்கம் சொல்கிறாள்.

*பெண்ணரசே பெண்ணென்றால் திரியுமொக்கும் ஒரு*
*பெண்ணுடனே சேர வென்றாற் கூடவு மொக்கும்*

*திண்ணமாக வல்லவனு நாதனுமொக்கும் பேரைத்*
*திரிகூட நாதனென்று சொல்லலாமம்மே*

*[திரி—மூன்று, கூடம்—சிகரங்களுக்கு, நாதன்—தலைவன்;*
*திரி—பெண், கூட—சேர, நாதன்—வல்லவன்.]*

நாணிக் கவிழ்ந்த வசந்தவல்லி குறத்திக்கு அணிகள் பூட்டி மகிழ்கிருள்.

**சிங்கன் என்ற செய்திக களஞ்சியம்**

திருக்குற்ருலக் குறவஞ்சியின் முற்பகுதி பிற்பகுதியைப் போலிரண்டுமடங்கு.முற்பகுதியின் தலை சிறந்த பாத்திரங்கள் வசந்தவல்லியும் குறத்தியும். பிற்பகுதியின் தலைசிறந்த பாத்திரங்கள் குறவனும் குறத்தியும். ஆசிரியர் முற்பகுதியை நாடகப் பாங்கில் நிறுத்துகிருர். குறத்தி எங்கு போனுள் என்று சொல்லாமல் குறவன் வருகை ஆசிரியர் கூற்ருக வருகிறது.

குறத்தியைப் பற்றியும் அவ்வாறே. குறத்தி தன் பெருமை பேசினுலும் குறவனைப் போல் தன்னை அறிமுகம் செய்து கொள்ளவில்லை. 'கண்ணி குத்திவேட்டையாடி, நாய் போற் தடங்கண்டு, பூனைபோற் பதுங்கி, நரிபோற் பம்மிப், பேய் போல் அடிக்கும் திரிகூடச் சிங்கனெனும் குளுவன் நான்' என்று குறவன் சொல்கிருன். திரிகூடநாதர் புகழ்பாடித் தன்னைப் பறவைகள் படுக்குங் குளுவன்-குறவன்-திரிகூட நாமச்சிங்கன் என்று சொல்லிக் கொள்கிருன்.

துணைவி குறத்தியின் தொழில் குறிசொல்வதென்ருல், குறவன் தொழில் பறவைகள் பிடிப்பது. மதப்புலிச் சிங்கனுக் குத் தோழன் ஈர்ப்புலி நூவன். கண்ணி வைத்துப் பறவை களைப் பிடிப்பது சிங்கன் தொழிலென்ருலும் சிங்கியின் பிரிவு அவனைப் பெரிதும் வருத்துகிறது. தொழிலும் காதலி பிரிவும் தொங்கு பாலமாய் அமைந்து அவனை ஆட்டி வைக்கின்றன. திருக்குற்ருலம் பற்றிய தகவல்களை மனைவியும் கணவனு

மான சிங்கியும் அளிக்கின்றனர். குறத்தி மலைவளம், நாட்டு வளம், தலவளம் சொல்கின்றாள். குறவன் கண்ணியில் சிக்கும் பறவைகளின் பட்டியல் கொடுத்து அவை படும்கள மாகிய வயல்கள் பற்றியும் அங்கு நிலவும் செழிப்பையும் சொல்கிறான். வயல்களின் உடைமைக்காரரைச் சொல்லி அவர் செய்த கோயிற்றிருப் பணிகளையும் விவரிக்கிறான். திருக்குற்றாலநாதர் கோயிலைப் பற்றி எழுதுவதற்கு வேண்டிய தகவல் குறவஞ்சி நூலில் கிடைக்கிறது. தன்னை யாதரித்த குறுநில மன்னன் பற்றியும் குறவன் வாயிலாக ஆசிரியர் சொல்கிறார்.

*பறவைகளும் அவைபடும் களங்களும்*

*சிங்கன் பறவைகள் வருகையைக் கூறுகிறான்.*

*காடை வருகுது கம்புள் வருகுது*
*காக்கை வருகுது, கொண்டைக் குலாத்தியும்*
*மாடப் புறாவும் மயிலும் வருகுது,*
*மற்றொரு சாரியாய்க் கொக்குத் திரளெல்லாம்.*

பறவைகள் சாய்கின்ற குளங்களைப் பற்றியெல்லாம் குறவன் சொல்கின்றான்.

*பாரைக் குளம் தெற்குமேல் வழுதிக்குளம்*
*பாட்டப் பெருங்குளம் செங்குறிச்சிக் குளம்*
*ஊருணிப் பற்றுந் திருப்பணி நீள*
*முயர்ந்த புளியங்குளம் துவரைக் குளம்*
*மாரனேரிக் குளம் மத்தளம் பாறை*
*வழிமறித்தான் குளம்.*

*கோயிற் கட்டளைகள்*

திருக்குற்றாலக் கோயிற் கட்டளைகளுக்காக வயல்கள் விடப்பட்டுள்ளன, அங்கெல்லாம் பறவைகள் சாய்கின்றன

என்பதைச் சொல்லும் போது கட்டளைகள் ஏற்படுத்தி யவர்கள் பெயர்களைச் சிங்கன் சொல்கிறான்.

*ஆறை யழகப்ப பூபாலன் கட்டளை*
*யன்பன் திருமலைக் கொழுந்து தன் கட்டளை*
*நாறும்பூக் குற்றாலச் சங்கு தன் கட்டளை*
*நங்களொல்லாரரி நரபாலன் கட்டளை*
*வீறுசேர் பால்வண்ணச் சங்குதன் கட்டளை.*

பறவைகள் எவ்வாறு கண்ணியிற் படுகின்றன என் பதை விவரிக்கு முகத்தான் அக்காலச் சமூக நிலையையும் ஆசிரியர் சிங்கன் வாயிலாகச் சொல்கிறார்.

*பூசியுடுத்து முடித்து வளையிட்டுப்*
*பொட்டிட்டு மையிட்டுப் பொன்னிட்டுப் பூவிட்டுக்*
*காசு பறித்திடும் வேசைய ராசாரக்*
*கண்ணிக் குள்ளேபடுங் காமுகர் போலவும்*
*தேசத்துக் கொக்கெலாங் கண்ணிக் குள்ளே வந்து*
*சிக்குது பார்கறி தக்குது பார்.*

**சிங்கன் துயரம்**

பறவைகள் படுக்குஞ் சிங்கன் சிங்கியின் பிரிவாற்றாமை யால் வேலையில் சுணங்கவே நூவன் சிங்கியைத் தேடும்படி சொல்கிறான். ஈர்ப்புலி நூவன் கூடப் பழமொழிகளை உதிர்க் கிறான். மாமியார் மகள் மேற் கண்ணும், 'பருத்தி மேற் கையு மான பான்மைபோல் வேட்டை போனாய்' என்றும் 'தாயைக் கற்பித்த மகள் போல் என்னைச் சிரித்தனை' என்றும் 'செடிக் கொரு வளையம் போட்டுத் தேடுவாயே' என்றும் நூவன் சொல்கிறான். நூவனையும் போய்ச் சிங்கியைத் தேடுமாறு சிங்கன் சொல்கிறான்.

வேறு யாரையும் மணந்து கொண்டு சிங்கி எங்காயினுந் தங்கிவிட்டாளோ என்ற ஐயப்பாடு கூடச் சிங்கனுக்கு

*'ஆளாயழகனுமா யாரை யெங்கே கண்டாளோ*
*தோளாசைக்காரி சிங்கி சும்மா கிடக்கமாட்டாள்,'*

என்று சிங்கன் சொல்வது ஆசிரியர் காலத்தில் ஒரு சாரா ரிடை யொருக்கால் நிலவிய பழக்கத்தைக் காட்டுகிறது எனக் கொள்ளலாம்.

*பிரிந்தவர் கூடினர்*

*திக்கிலடங்காது குறி இக்கிலடங்காது மொழி*
*மைக்குளடங்காது விழிகைக் குள்ளடங்காத கள்ளி'*

என்றெல்லாம் சிங்கன் தவிக்கும் போது திருக்குற்ருலத் தெருவிலே சிங்கியைக் கண்டான்.

*''பாதம் நோமே நொந்தால் பேதமாமே*
*பாத நோக நிற்பதேது பாவமினிக்*
*கூதலோ கொடிது காதலோ கடினம்,''*

என்று கெஞ்சுகிருன்.

பின்னர்ச் சிங்கனுக்கும் சிங்கிக்கும் நடக்கும் பேச்சு படிப்பதற்கு மகிழ்ச்சி யூட்டுவது மன்றிப் பெண்களின் அணிகள் பற்றியும் அவற்றின் தோற்றம் பற்றியும் தகவலைக் கொடுக்கிறது.

*இத்தனை நாளாக என்னுடன் சொல்லாமல்*
*எங்கே நடந்தாய் நீ சிங்கி;*
*கொத்தார் குழலார்க்கு வித்தாரமாகக்*
*குறிசொல்லப் போனேனடா சிங்கா.*

*அணிகளும் உபமானங்களும்*

விஞக்களும் விடைகளும் அவைகளிலடங்கிய உபமானங்களும் இயற்கைப் பொருள்களைக் கண்டு மனிதன் ஆபரணங்களை உருவாக்குகிருன் என்று இயம்பி நிற்கின்றன.

*வள்ளிக் கொடியிலே துத்திப்பூப் பூப்பானேன் சிங்கி காதில்*
*வங்காளத் தாரிட்ட சிங்காரக் கொப்படா சிங்கா.*

விரியன் பாம்புபோல் வளைந்து கிடப்பது சிலம்பு. முறுக்கிட்ட தண்டை திருகு முறுகாயிருக்கும். நாங்கூழுப் போல நெளிந்திருக்கும் பாடகம். தவளை போன்றிருக்கும் அணிமணிக் கெச்சம். குண்டலப் பூச்சிபோல் சுருண்டு கிடப்பது பீலி. சாரைப்பாம்பு போலிருக்கும் அரைஞாண். சிங்காரக் கொப்பு துத்திப்பூ போலிருக்கும். தண்டொட்டி கள்ளிப் பூவை யொத்திருக்கும். புன்னை போலிருக்கும் முத்து மூக்குத்தி. குப்பியும் தொங்கலும் தூக்கணம் போலிருக்கும்.

சிங்கனும் சிங்கியும் ஆடியும் பாடியும் ஊர் சுற்றி வந்து கொண்டிருக்கும் செய்திக் கதம்பம்; கலைக் களஞ்சியம் என்று கூடச் சொல்லலாம்.

*பாடிக்கொள்வா ரெவராடிக் கொள்வாரெவர் சிங்கி நீதான்*
*பாடிக் கொண்டாற் போதுமாடிக் கொள்வேனடா சிங்கா.*

**வாழ்த்து**

திருக்குற்றாலக்குறவஞ்சியின் கடைசிப்பகுதி வாழ்த்தாகும். கண்ணிகள் எளிய தமிழில் பக்திச் சுவை மிகுந்து செவிக்கின்பம் தருகின்றன.

*கொற்றமதிச் சடையானைக் குறும்பலாவுடையானை*
*வெற்றி மழுப் படையானை விடையானைவாழ்த்துகிறேன்.*

*தாதையிலாத் திருமகனைத் தடமலைக்கு மருமகனை*
*வேதசிங்க வீதியனை வேதியனை வாழ்த்துகிறேன்.*

*சித்ரநதி யிடத்தானைத் தேனருவித் தடத்தானைச்*
*சித்ரசபை நடந்தானைத் திடத்தானை வாழ்த்துகிறேன்;*

*அரிகூட வயனுகி யரனுகி யகலாத*
*திரிகூடப் பரம்பரனைத் திகம்பரனை வாழ்த்துகிறேன்.*

*சிற்ருற்றங் கரையானைத் திரிகூட வரையானைக்*
*குற்ருலத் துறைவானைக் குருபரனை வாழ்த்துகிறேன்.*

*ஆதிமறை சொன்னவனை அனைத்துயிர்க்கு முன்னவனை*
*மாது குழல்வாய் மொழி சேர் மன்னவனை வாழ்த்து*
*கிறேன்.*

## (2) திருக்குற்ருலத் தலபுராணம்

### தலபுராணங்கள்

புராணம் என்ருலே தலபுராணங்கள் நினைவுக்கு வருகின்றன. புராணம் எள்பதற்குப் பழமை என்பது பொருள். வடமொழிப் புராணங்கள் சில தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. 'புராணம்' என்ருல் வெறுங்கதை பேசுவது என்று பேச்சு வழக்கில் குறிக்கப்படுகிறது. 'விடுவிடு புராணம் விளம்பினன் வீணுய்' என்று சுந்தரம் பிள்ளையின் 'மனோன்மணியத்தில்' ஒரு பாத்திரம் பேசக் கேட்கிறோம். தமிழ் நாட்டிலுள்ள கோயில்களை வைத்துப் புராணங்கள் பாடப்பட்டன. அவை தலபுராணங்கள் எனச் சொல்லப்பட்டன. தலபுராணங்களுள் சிறப்பாகப் போற்றப்படுவது கோயிற் புராணம்.

''இந்தத் தலபுராணங்கள் சீரும் சிறப்புமாக எழுந்தது 14 ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த உமாபதி சிவனுற் கோயிற் புராணம் பாடிய போதே எனலாம். அளவில் சிறியதாக இருந்தாலும் தல புராணங்களுக்கே வித்திட்ட இந்த நூல் பாட்டின் நயத்திலும் கொள்கைகளின் உயர்விலும் விரைந்து செல்லும் கதையின் போக்கிலும் மிகச் சிறந்து விளங்குகிறது.'' (தொ.பொ. மீனுட்சி சுந்தரன் : புராணங்கள்— கலைக்களஞ்சியம் தொகுதி—7)

கோயிற் புராணம் ஆடுங் கூத்தனைப் பற்றிய ஆராய்ச்சிக்குப் பெரிதும் உதவுகிறது. தலபுராணங்களில் நாட்டு வளமும் நகரவளமும் சிறப்பித்துப் பாடப்படுகின்றன.

கோயில்களைப் பற்றிய வரலாற்றைத் தொகுப்பதிலும் தெய்வத்திரு மேனிகளைப் பற்றிய விவரங்களைப் பெறு வதற்கும் தலபுராணங்கள் பெரிதும் பயன்படும்.

சேதுப்புராணம், காஞ்சிப் புராணம், தணிகைப் புரா ணம், திருக்குற்றாலத் தலபுராணம் என்பனவும் பிறவும் அறிஞர் விரும்பிப் படிப்பவை. பத்தொன்பதாம் நூற்றாண் டில் வாழ்ந்த மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை புரா ணங்கள் பாடுவதில் வல்லவர். இருபதாம் நூற்றாண்டில் புரா ணங்களின் செல்வாக்குக் குறைந்து விட்டாலும் கவிநயம், இயற்கை வர்ணனை, சொல்லாட்சி, சிந்தனைச் செழிப்பு, என்பன போன்றவைகளில் தலபுராணங்கள் தனியிடம் வகிக்கின்றன. காய்தல் உவத்தல் இன்றித் தமிழ்த் தலபுராணங்கள் பற்றிய ஆராய்ச்சி இன்றியமையாதது.

*திருக்குற்றாலத் தலபுராணப் பொருளடக்கம்*

திருக்குற்றாலத் தலபுராணம் திட்டமிட்டு எழுதப்பட்ட நூலாகத் தோன்றுகிறது. தானவைபவ காண்டம் சிவ ரகசிய காண்டம் என்ற இரு காண்டங்களைக் கொண்டது. முந்தியதில் பதினெட்டுச் சருக்கங்களும் பிந்தியதில் பதி னான்கு சருக்கங்களும் அடங்கியுள்ளன. சருக்கத்தின் விவரங் களை இரு பாடல்களில் திரிகூடராசப்பக் கவிராயர் கூறுகிறார்.

*சித்துநதி நாடுநகர் புராணமூலஞ் சிகரிதல மருவிமது*
*கங்கை மூர்த்தி*
*சத்திகுறும் பலவுமந்தா நிலத்தின் பான்மை தக்கன்மக*
*மகமழிதல் வானோர் பாவம்*
*புத்தேளிர் பவந்தீர்தல் சம்பு வேடன் புரியும் வலங்*
*கடகளிறு புரியும் பூசை*
*வைத்தபெருஞ் சங்கரசங் கிதைசேர்தான வைபவகாண்*
*டஞ்சருக்கம் பதினெட்டாக.*

(முதனூல் வழி; 9)

*தேவிதிரு வவதாரம் பரமன் வேட்டல் செங்கண்மால்*
*சிவனுதல் பூசைப் பான்மை*
*பாவிவன சரன்பேறு வானோர் கும்பன் பணிவிடைவா*
*சுகித வஞ்சிற் பரமனுட*
*ருவில் பொருட் கண்டகசேதனன் கவுற்சன் சமைய மிகழ்*
*புட்பகந்தன் றருமசாமி*
*மேவுகழி நூற்பயனற் சனற்கு மாரம் விளங்குசிவ*
*ரகசியத்தின் விரிவீரேழா.*

(முதனூல் வழி, 10)

சிவநெறியே வடிவமாகவும் இருகாண்டங்களும் கருணைப் பார்வையாகவும் சருக்கங்கள் உறுப்புக்களாகவும் பெருமானுடைய கீர்த்தனங்கள் அணிகலன்களாகவும் சிவபுராண செல்வ கல்வி உருமகிமை தெரிவிப்பதாக ஆசிரியர் சொல்கின்றார். வடமொழியைத் தென்மொழியா வகுத்து நீ உணர்த்துக எனச் சிவமறையோர் பணிக்க நூல் செய்தார் என்றும் காரணம் கூறுகின்றார்.

தாம் செய்த நூலில் இடைச்செருகல்களுக்கு வழியில்லாதபடி ஒவ்வொரு சருக்கத்தின் முடிவிலும் அடுத்த சருக்கம் பற்றிச் சொல்கிறார். 'முதனூல் வழி' முடிவில்

*மன்றில்,*

*ஆரியன் ஆடுசேர்த் தென்னுரிய நாடு சொல்வாம்*
*வாரிநீரருவித் தெய்வ வரநதி முதலா மன்னோ,*

என்று திருநதிச்சருக்கமும் திருநாட்டுச்சருக்கமும் தொடர்கின்றன என்பதை ஆசிரியர் குறிப்பிடுகிறார். சேக்கிழார் பெரிய புராணத்தைப் பின்பற்றித் திரிகூடராசப்பர் இம்முறையைக் கடைப்பிடித்திருக்கிறார் போலும்.

*கடவுள் வாழ்த்து*

திருக்குற்றாலத்தல புராணம் முதலாவது திருநதிச் சருக்கத்திலிருந்து தொடங்கினும் காப்பு, கடவுள் வணக்கம், முதனூல் வழி, அவையடக்கம் என்பவை தோற்றுவாய் போலமைகின்றன. திருக்குற்றால நாதருக்குக் கூத்தனென்றொரு பெயரும் உண்டு. சித்திர சபையில் நடமாடும்

கூத்தனைக் கவிஞர் பெருமான் பாடுகின்ற ஒரு பாடலை நோக்கலாம்.

*வானாகி வளியாகிக் கனலாகிப் புனலாகி வளர்பாராகி*
*ஊனாகி உயிராகி யொன்றாகிப் பலவாகி உலகம் யாவும்*
*தானாகிப் புறமாகிப் யகமாகி அறம் வளர்த்தாள் தாள மேந்தக்*
*கோனாகி நடம்புரியுஞ் சித்திரப் பொற்பொதுவுடையான் கோலம் போற்றி.*

(கடவுள் வணக்கம், 3)

சிவன் கோயில்களில் நந்திதேவரைக் கண்டு பின்பு தான் இறைவனைக் காணமுடியும். நந்திதேவருக்குச் சிவ சின்னங்களுண்டு. சிவபெருமான் போலவே தோற்றமளிப் பார். ஆனால் கூப்பிய கரங்களுடன் இறைவனைப் பணித லாலே சிவபெருமானின் தலைசிறந்த அடியார் எனத்தெரிந்து கொள்ளலாம். திரிகூடராசப்பர் நந்திதேவர் தோற்றத்தை நம்கண் முன் கொண்டுவந்து நிறுத்துகிறார்.

*நேத்திரங்க ளொரு மூன்றும் புயநான்கும் விழிமணியும் நிரை நூன் மார்பும்*
*சாத்துபுலித் தோலுடையும் வெண்ணீறும் விரிசடையும் சடைமேற் பாம்பும்*
*காத்திரள் கைம்மான் மழுவும் கண்ணுதலா மெனத் தோற்றி களங்கார் மாற்றி*
*வேத்திரத் திண்படை தரித்த விடை முகத் தெம் பெருமானை வேண்டல் செய்வாம்.*

(கடவுள் வணக்கம், 11)

திரிகூட நாதர் தம் நூல்களுள் கடவுள் வாழ்த்துப் பாடல்களில் அகத்தியரைப் பெரும்பாலும் பாடுகின்றார் திருக்குற்றாலத்துடன் அகத்தியர் இணைந்த கதை சொல்லப் படுவதால் தமிழ் முனியைக் கவிஞர் பெருமான் ஏத்துகிறார்.

*கிளையேந்து மணிநிலவு விரிகூடத் திரிகூடக்கிரிக்கே யாவும்*
*விளையேந்து புனற்கரகந் தண்டேந்திப் படைத்தபிரான் விடுத்து நேமி*

*வளையேந்துங் கரத்து மழுமானேந்திப் பசுந்துளவ*
*மவுலிக் காடு*
*முளையேந்து மதியேந்தத் துதியேந்துந் தமிழ் முனிதாள்*
*முடிமேற் கொள்வாம்.*

(கடவுள் வணக்கம், 17)

காரணமும் காரியமும் கற்பனையும் கடந்து தனிப்பூரண மாய் நின்ற சிவபெருமான் ஆரணமும் ஆகமும் அருங்கலை யும் அருளிச் செய்து நான்முகனுக்கும் நாரணனுக்கும் நவிலு வன நவின்றருளினன். பின்பு நந்தி தேவனுக்குபதேசம் செய்யவும் அவன் சனற்குமாரர்க்கும் அவர் வியாசமுனிக்கும் மெய்ப்பொருளை உணர்த்தினர். சூதனுக்கு வியாசமுனி உணர்த்திய சிவபுராணங்கள் பத்தினுள் கந்த புராணமும் ஒன்ருகும். கந்தபுராணத்திலுள்ள ஆறு சங் கிதைகளுள் சங்கர சங்கிதையில் திருக்குற்ருலத் தலச்சிறப் புள்ளது. உமாதேவியாரை மணம் முடிக்கும் பொருட்டு சிவபெருமான் அகத்தியருக்கு அதன் மான்மியத்தை அருளிச் செய்தார். சூதமுனி நைமிசாரணிய முனிவர் களுக்கு அதை எடுத்துச் சொல்வாராயினர். திருநதிச் சிறப்பை முதலாவதாகச் சூதமுனிவர் சொல்லலானர்.

பொதிகையில் தோன்றிக் கொற்கையில் கடலைச் சேரும் பொருனையாறு மிகச் சிறியதுதான் என்ருலும், தமிழுடன் பிறந்ததன்ருே! தென்றலும் தமிழும் பொதிகையில் தவழும். தாமிரவருணியும் அத்தகைச் சிறப்புடைத்து. தாமிரவருணி யில் கலக்கும் சிற்ருறு ஒன்றுண்டு. சித்ரா நதியென்று பெயர். திரிகூடமலையில் தோன்றித் திருக்குற்ருலத்தில் இழுமென இழிதரும் சிற்ருறு புலவர் கண்ணில் பேரியாறு தான். வெள்ளியை உருக்கிவிட்டாற் போன்ற நீர்த்திரள். வெண்படிக உடை;வெள்ளை மேனி; குமுதமலர்,சிவந்தவாய்; குவளைகள் அதனுடைய கறுப்புக் கண்கள்; கலைமான்களும் யானைக் கன்றுகளும் உலாவுமிடம்; நெற்பயிர்கள் செழித்து வளருமிடம்; பூக்கள் மலர்ந்து சொரியும் நீர் நிலைகள்; கலை மகள் உறையுமிடம்.

*வெண்கமல மேவி உயர் வெண்படிக மணிந்து வெள்ளை மேனி வாய்ந்து*
*தண்குமுத வாய்ச் சிவப்புந் தடங்குவளைக் கண்கறுப்புந் தழைப்பத் தோன்றி*
*வண்கலை போதகம் பயின்று மாருத சொல்வளர்த்து மலரேடு ஏந்திப்*
*பண்குலவத் தாலமிசை நடித்து நாமகள் பரவும் பரம நீர்த்தம்.*

(திருநதிச் சருக்கம் 12)

இன்னொரு வகையிலும் இப்பாடலுக்குப் பொருள் கூற லாம். வெண்டாமரையிலமர்ந்து வெண்படிக உடையணிந்து வெள்ளை மேனி கொண்டு குமுதவாயுடனும் குவளைக் கண் ணுடனும் பலகலை பயின்று ஞானவரம்பாய்க் கல்வியை வளர்த்து ஏடுதாங்கி நாமகள் உறையும் பரமநீர் நிலையாகும்.

[கமலம் நீர் (தாமரைப்பூ) படிகம்—பளிங்கு வாய் இடம் (வாய்) கண் - இடம் (விழி); கலை — மான் (கல்வி நூல்); போதகம்—யானைக்கன்று, (ஞானவரம்பு); சொல்—நெற்பயிர்கள் (வார்த்தை கள்); மலரேடு—பூவிதழ் (விரிந்த ஓலையேடு); பணி- நீர்நிலை (இசைப்பாட்டு); தாலம்—பூமி (நாக்கு); நாமகள்—கலைமகள்.]

*திரிகூடமலை*

திரிகூடமலை பொன்மலைக்கும் பழையமலை; சிவபெருமான் உறைவதால் கயிலைக்குத் துணைமலை; தமிழ் நாறும் பொதி யிலுக்கு வடமலை.

*பொன்மலைக்குமோர் முதுமலை புதுமையாற் புதுமலை கயிலாய*
*நன்மலைக்கொரு துணைமலை யுவரிசூழ் ஞாலமேல் வளர்ந்தோங்கும்*
*பன்மலைக்கு மோர் தலைமலை திசைதொறும் பசுந்தமிழ் மண நாறும்*
*தென்மலைக் கொரு வடமலை சிவபிரான் திருமலைத் திரிகூடம்.*

(திரிகூடமலைச் சருக்கம் 33)

கார்மேகத்தைக் கரியவேழ மென்றெண்ணி யானைகள் பாயும். குரங்குகள் தாவிச் செல்வது போன்று காட்டாறுகள் பாய்ந்தோடும். வானத்திலொளிக்கின்ற விண்மீன்கள் போல் மழையும் மதியும் வேழமும் ஏனமும் சொரிகின்றன திரிகூட மலையில் முத்துக்களை.

*மழைதரு முத்தும் வான மதிதரு முத்தும் நீண்ட*
*புழைதரு பணைக்கை நீலப் பொருப்பின் மா மருப்பின் முத்தும்*
*கழைதரு முத்தும் ஏனக் களிறு கோ டுகுத்த முத்தும்*
*விழைதர வொளிருஞ் சாரல் மீனெளிர் வான மேய்க்கும்.*
(திரிகூடமலைச் சருக்கம், 10)

நெருங்கிய சோலையுளதால் எப்பொழுதும் திரிகூடமலை இருண்டிருக்கும். காலை மாலை எதுவென்று தெரியாது.எனவே அத்தொழிலைச் செய்கின்றன கமல மலரும் காவி மலரும்.

*சோலை காட்டுந் துதையிருளா லிரு*
*வேலை காட்ட விலாமையின் மெய்த்தவர்*
*காலை காட்டுவ வாவிக் கமலங்கள்*
*மாலை காட்டுவ மலர் தரு காவியே.*
(திரிகூடமலைச் சருக்கம், 11)

"ஆலமுண்டவன் இங்குளான். எங்கு தேடுகின்றீர்கள் நீங்கள் அவனை?" என்று மாலயன் இருவரையும் கேட்பது போன்றிருக்கிறது குயில் கூவுவது.

*கோல மாங்குயில் காவினிற் கூவுதல்*
*ஆல முண்டவனிங் குளனுதலாற்*
*தாலம் வானம் தடவப் பெறீரென*
*மாலயன் தனைக் கூவுதன் மானுமே.*
(திரிகூடமலைச் சருக்கம், 14)

அருவியாகிய பூமாலையைக் கையிலேந்தி அங்கையில் அனலேந்தும் பெருமானை மணம்புரிய வந்த தேவியை யொத்திருக்கிறது திரிகூடமலைக் காட்சி.

*பொன்னின்மா மணியருவிப் பூமாலை கரத்தேந்தி*
*வன்னிசேர் கரத்தார்க்கு மணம் பூட்ட வருமிமையைக்*

*கன்னிபோல்வது கருணைக் காசினியா மடமகட்குச்*
*சென்னி போல்வது திருமவுலி போல்வதால்.*

(திரிகூடமலைச் சருக்கம், 37)

சிவபெருமான் பஞ்சாக்கர வடிவமே திரிகூடமலை. ஒன்றென்று சொல்லக் கூடாத உயிரும் இறைவனைப் பிரியா அருளும் பிறவியிலெக்காலமும் புகாச் சிவமும் பொருந்திய சுத்த சொரூபமே திரிகூடமலை.

*ஒன்றெனப் பொருந்தா வேறு பிரிந்திடா வுற்பவத்தின்*
*என்று முட் புகுதா நீங்கா இறையருள் ஆன்மா மூன்றும்*
*தோன்று தொட்டமைந்த சுத்த சொரூபமே வடிவென்றோர்ந்து*
*மன்றலந் திரிகூடத்தி லுறையுமா மறைகள் மூன்றும்.*

(திரிகூடமலைச் சருக்கம், 58)

ஒன்றெனப் பொருந்தா ஆன்மா, வேறுபிரிந்திடா அருள், உற்பவத்தினென்று முட்புகுதா இறை, என்று பிரித்துப் பொருள் கொள்ள வேண்டும்.

திரிகூடமலையின் அதிசயத்தை என்னென்றுரைப்பது? சித்தர், விஞ்சையர், தேவர் என்பவரெல்லாம் பத்தராய்த், தருவாய், விலங்காய்ப், பறவையாயுறைவர். மேன்மேலும் சீவன் முத்தராகி முதல்வராய் விளங்குவர் சிவபெருமான் உறையும் திரிகூடமலையில்.

*திருக்குற்றாலத்தலம்*

திருக்குற்றாலம், திரிகூடமலை என்னும் பெயர்கள் முதலில் மலைக்குண்டாகிப் பின்னர் தலத்துக்காகி மேலும் இறைவனைக் குறிக்கலாயிற்றென்றால் அவற்றின் பெருமையை என்னென்றுரைப்பது!

*'இந்து வானிடை யிழிந்து கீழ் வழிந்தென வெழில் வரைத் திரிகூடம்*
*வந்து பாய் தரு திரையருவித் துறை'*

(திருக்குற்றாலத் தலமகிமைச் சருக்கம், 15)

உடையது திருக்குற்றுலம். சிவமது கங்கை, செண்பகத் தடாகம், சித்தர் வானோர் மனமுவந்து நீராடும் வடவருவி, பொங்குமா கடலருவி இவையனைத்தையும் கொண்டதன்றே திருக்குற்றுலம். சிவமுரசம் கேட்டுப் பிறந்தவர் முத்தி பெறுவர்; சிறந்தவர் முத்தி பெறுவர் காட்சியாலே; இறந் தவர் முத்தி பெறுவர் ஐந்தெழுத்துச் செவியிலோதப்படுவ தால்; குற்றுலம் என்று அறிந்து நினைத்தாலே முத்தி பெற லாம். இத்தலத்திற்றுனே இறைவன் உமை தாளம் கொட்ட ஆடும் சித்திரசபை உளது.

*வேதாளம் பாடவொரு வெளியிலாடிய பெருமான் வேதம் பாடப்*
*பாதாள வாய்தலுறை பணியரசுங் குறுமுனியும் பணி செய் தோய்ந்த*
*மாதாளம் உமைபயிற்ற அரிபிரமர் முடி தாழ்ப்ப வானோர் பேரி*
*ஆதாளியுற நடிக்குஞ் சிற்பொதுவும் சிற்பரையு மதன் பாலன்றே.*

(திருக்குற்றுலத் தலமகிமைச் சருக்கம், 24)

***வடவருவி***

வறுமைக்குள்ளான பிராமணனொருவன் கந்தையே உடையாக அலைந்து கொண்டிருந்த போது குளிர் பொறுக்க முடியாமல் சிவலிங்கத்தின் மேல் சாத்தியிருந்த சேலையைக் கவர்ந்து போர்த்திக் கொண்டான். சிவத்துரோகம் நெருப் பாய்க் கனன்று அவன் உடம்பைக் கரியாக்கியது. இப் பாவத்தைப் போக்குவதெவ்வாறு என்று கவலையுற்ற அம் மறையோன் சிவபெருமானருளால் தென்திசை போந்து சித்ரா நதியில் மூழ்கியவுடன் கரிய நிறம் போய்க் கதிரவன் போல் ஒளி பெற்றுன்.

*முத்தனையார் வரம் பழித்தோர் முதுகுரவர்க் கிடர் புரிந்தோர் முக்கணனை*
*நத்தனை நான் முகத்தோனை யிகழ்ந்தோர் பல்லுயிர் செகுத்தோர் நன்றி கொன்றோர்*

*கத்தனை விட்டமர்க் களத்திலோடினோர் கபடஞ்*
*செய்தோர்*
*எத்துணைப் பாதகரேனும் வடவருவி படிந்தவர்*
*வீடெய்துவாரே.*

(வடவருவிச் சருக்கம், 47)

என்று திருக்குற்றாலத் தலபுராணம் பாடுகிறது. வடவருவியின் சிறப்பு சொல்லற் பாற்றே! இப்பாடல் 'ஓது வித்தவர் கூலிகொடாதவர்' என்று தொடங்கும் திருப்புகழை நினைவூட்டுகிறது.

### சிவமது கங்கை

கங்கை பகீரதன் முயற்சியால் பாரில் வந்து அவனுடைய முன்னோர் சாகரர் சாம்பரிற் பாய்ந்தாள். விண்ணினின் றிறங்கிய கங்கையைச் சடையில் தாங்கி ஒரு பனித்துளியென சிவபெருமான் வைத்துக் கொண்டார். பகீரதனுக் கிரங்கி அவள் வடிவையொடுக்கி அவன் பின்னே நடக்கச் செய்தார். எனினும், கங்கை தன்னுடைய வடிவத்தைப் பெற்றிலள். சிவபெருமானை யடைந்து அவள் வணங்கவும் திரிகூட மலையிலுள்ள சிவலிங்கத்தைத் தேனாலே பூசித்து வணங்கினால் மீண்டும் தமது சடாமகுடத்திலிடம் பெறலாமென்று அவர் அருளினார். அவ்வாறே கங்கையும் பூசித்தாள். அந்நீர்த்துறை திரிகூட மலையில் சிவமது கங்கையெனப் பெயர் பெற்றது.

### மூர்த்தியின் சிறப்பு

திருக்குற்றாலத்தில் கோயில் கொண்டிருக்கும் இறைவன் ஒளியாக, வெளியாக, உருவாக, அருவாக ஒன்றினாலுந் தெளியாத பெருமான்; தெளிந்தவர்க்குத் தெளிவுள்ளவன்; அடியார்க்கு எளியான்.

*முப்பாலாய் முப்பொருளாய்ச் சிற்பொருளாய்த் திரிகூட*
*முதல்வனை*
*ஒப்பாரு மில்லானுக் கொப்பா மற்றொரு பொருளை யுரைக்*
*கற்பாற்றே*

*அப்பாலன் அவ்வடிவன் அக்குணத்த னென்றவனை*
*யறிதற் கின்னம்*
*எப்பாலு மிருவருக்கும் பேறிலை நான் மறைக்கு மெழுத்*
*தில்லை மாதோ.*

(மூர்த்தி விசேடச் சருக்கம், 13)

திருக்குற்றாலச் சிவலிங்கத்தின் மீது ஒரு சிறு நெல்லளவு சாந்தம் பூசினாலும் பசும்பால் கையளவு ஊற்றிப் பணிந்தாலும் ஒரு மலர் தூவி வணங்கினாலும் அடியார் சிவலோக மடைவர்.

*நீவு சாந்தமோர் நெல்லள வாகினும்*
*ஆவின் பாலொரு கையள வாகினும்*
*பூவொன் றாகினு நன்னகர்ப் பொன்னகர்த்*
*தேவின் பாலணிவார் சிவலோகரே.*

(மூர்த்தி விசேடச் சருக்கம், 32)

*பராசக்தி பீடம்*

முதல் இடை கடையும் அளவையுமிலாத பிரமத்தினின்றும் பிரணவம் தோன்றவும் பிரணவத்திலிருந்து ஒலி தோன்றவும் ஒலியினின்று சக்தி தோன்றிக் கடவுள் குணம் குறி கடந்து நின்றான். விந்து சத்தியிலே பிறந்து நின்மலப் பராசக்தி இறைவனுடன் கலந்திருந்தனள்.

சிவகோணம் நான்கு. சிற்சத்தி கோணம் ஐந்து. இவ்விரண்டும் சேர்ந்த ஒன்பது கோணத்துள் நாற்பத்து முக்கோண சக்கர வட்டந் தோன்றும். அதன் மேலும் மேலும் எட்டிதழ் பதினாறிதழ் இருபத்து நான்கிதழ் கொண்ட சதுர வடிவமான பீடம் உள்ளது. அதுவே பராசக்தி பீடமென்று சொல்லப்படுகிறது.

*சிவபெருங் கோண நான்கு சிற்புரை கோண மைந்தா*
*நவபெருங் கோணத்துள்ளே நண்ணு மீரிரு பார்*
*முக்கோண்*
*இவர் தருவட்ட மேன்மே லெட்டிதழ் ரெண்கோணம்*
*உவரி மூவட்ட மூன்று சதுரமு முளதோர் பீடம்*

(பராசத்தி பீடச் சருக்கம், 3)

அதுவே கருணை வடிவமான பராசத்தி பீடம். யோக பீடமென்றும் தரணி பீடமென்றும் சொல்லுவர். அப்பீடத்துள்

இறைவனும் பிராட்டியும் இருப்பர். அவளிடமிருந்து ஆதி சத்தி, இச்சா சத்தி, ஞானசத்தி, கிரியா சத்தி, என நால்வர் தோன்றுவர். இவ்வைந்து சக்திகளைக் கொண்டு இறைவன் தொழில்களைச் செய்விப்பார். பராசத்தி முதலிய ஐந்து சத்திகளும் முறையே ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று முகங்கள் கொண்டவர். ஒவ்வொருவருக்கும் கண்கள் மூன்று, கைகள் நான்கு. ஒரு கை 'அஞ்சேல்' என்று காக்கும் கை. இரண்டாவது கையில் தாமரை. மூன்ருவது நான்காவது கைகள் ஆயுதத்தையும் செபமாலையையும் தாங்கியுள்ளன. மனிதனுடைய ஓராண்டு தேவர்களுக்கு ஒரு நாள். தெய்வ ஆண்டுகள் ஆயிரத்துக்குப் பின் பராசக்தி நான்முகனைப் பெற்ருள். இராண்டாயிரம் ஆண்டுகள் சழித்து உமையையும் திருமாலையும் பெற்ருள். இன்னும் ஆயிரம் ஆண்டுகள் கழிந்ததும் வாணியையும் அரனையும் பெற்ருள். நான்முகனுக்கு வாணியை மனைவியாக்கி திருமாலுக்கு இலக்குமியை மனைவியாக்கி எம்பெருமான் உமையை மணந்தான். நிமலனும் பிரமசாரி ஞான குமாரியாகிய உமைபால் உலகந் தோன்ற வரையாத்தி நீழலின் கண் அமர்ந்தான். அதுவே திருக்குற்ருலம்.

திருக்குற்ருலத்திலுள்ள பராசத்தி பீடத்தை வழிபடுபவர் பெறும் பேறு சொல்லொணுதது.

*துய்யமலர்க் கரங் குவிப்பார் கையினுற் செய்த வினை*
*தொலையும் நாவாற்*
*செய்ய புகழ் வாழ்த்தினர்க்கு வாக்கினுற் புரிபாவஞ்*
*சிதையும் கண்ணுல்*
*உய்ய வெதிர் காண்பார்க்கு விழியினுலிழைத்த வினை*
*யொழியும் ஞானத்*
*தையல் பரைபீடம் வலம் புரிந்தாரைப் பிரிந்தோடுஞ்*
*சகல பாவம்.*

(பராசத்தி பீடச் சருக்கம், 20)

*குறும்பலா*

ஈங்கிது வென்னக் காட்டும் இயல்பினுக் கெட்டாதாகி நினைத்தற்கரிய பெருஞ் சோதியின் அருளால் இறைவனது ஐந்து முகங்களினின்றும் இருபத்தெட்டு ஆகமங்களும் நான்கு முகங்களினின்றும் நான்கு வேதங்களும் தோன்றின.

வேதங்கள் அழியாதிருப்பான் வேண்டித் திருக்குற்ருலத் தலம் சேர்ந்து பலாமரமாகி இறைவனை நோக்கித் தவம் செய்தன.

*கங்கை வார் சடையோகீ நமோநம கஞ்சன் மாலறி*
*யாதாய் நமோநம*
*மங்கையாமனை பாகா நமோநம மந்த்ர ஞான சொரூபா*
*நமோநம*
*சங்கவைிதி விலாசா நமோநம சப்புநாத விநோதா*
*நமோநம*
*செங்கை மான் மழுவாளா நமோநம செண்பகாடவி*
*நாதா நமோநம.*

(குறும்பலாச் சருக்கம், 13)

என்று வேதங்கள் போற்றி இறைவனிடத்தில் தங்கள் நிழலிலே இறைவன் உமாதேவியாருடன் எழுந்தருள வேண்டுமென விண்ணப்பித்தன. அவ்வாறு எழுந்தருளினுல் பிரளய காலத்தில் தாங்கள் அழியாது தப்ப முடியுமென வேதங்கள் நம்பின. இறைவன் அவற்றின் விருப்பத்திற் கிணங்கினுன்.

*ஆகையாற் சதுர்வேதந் தருவாக மூலமதன் மூலமாகப்*
*பாகையானவை இரண்டுங் கவராகச் சுருதியெலாம்*
*பணைகளாகச்*
*சாகையானவை பசிய சாகையா வுபநிடதந் தவிராச்*
*சூல் கொண்டு*
*டோகையார் தரும முதற் பெரும் பலவுங் குறும்பலவே*
*யுதவு மாதோ.*

(குறும்பலாச் சருக்கம், 19)

***மந்த மாருதம்***

*திருக்குற்ருலத்துச் செண்பகாரணியம் செல்வம் வீடு* பேறளிப்பது. இறைவனுறையுங் கோயில் சந்தனக் காடுகளை வேலியாகக் கொண்ட சண்பகாரணியத்திலுளது. தென்றற் குழவி அங்கு பிறந்து தவழ்ந்து வருகிறது.

*பிரசா மாமலர்ச் செண்பகப் பொதும்பரிற் பிறந்து*
*திரவு பூஞ்சினைத் தொட்டி லாட்டயர்ந்து தேனருவிப்*
*பரம வாரியிற் படிந்து நீள் பணிலமாக் கோயிற்*
*குரவன் முன்றில் வாய்த் தவழ்வதோர் தென்றலங்*
*குழவி.*

(மந்தமாருதச் சருக்கம், 3)

பொன்னி நாட்டு மறையவன் செய்த பாவமொழிந்து சிவபதம் அடையச் செய்தது திருக்குற்றுலத் தென்றல். அத்திரி யென்னும் மறையவன் மகன் ஆத்திரேயன். பெற்றோர் பிள்ளைக்கு எல்லாக் கலைகளும் படிப்பித்தார்கள். பிள்ளை மனமோ வழியலா வழிமேற் சென்றது.

*பூவிய லன்னம் போல்வார் புலவியே நிலமதாகத்*
*தாவிய பொருள்கள் யாவுந் துறுமுளை வித்ததாகக்*
*காவியங் கண்ணூர் மோகக் கலப்பையே கருவியாக*
*மேவிய சுரத போக விரக வேளாண்மை செய்தான்.*

(மந்தமாருதச் சருக்கம், 26)

அவன் சேர்ந்த மாதர் பலர். மதுவும் மாமிசமும் உண்டான். பொருளெல்லாம் போன பின்பும் கீழ்மக்களுறவு கொண்டும் கட் குடித்தும் காமவெறி தீர்ந்தானில்லை. உடம்பெல்லாம் புண்ணாகி அழுகி நடந்தான். காடு மலை கடந்து கடைசியாகத் திருக்குற்றுலத்துக் கருகிலுள்ள ஓரிடத்தில் பசியால் வருந்திக் கற்களின் மேல் விழுந்து உயிர்பிரியுந் தருவாயில் திரிகூடமலைச் செண்பகாடவியிலிருந்து தென்றற் காற்று அவன் உடலை வருடிற்று. உயிர் நீத்த பிராமணனை இழுத்துச் செல்ல யம தூதர் வந்தனர். சிவ கணங்கள் அவர்களைத் தடுத்து நிறுத்தித் தெய்வப் பெண்கள் சாமரம் வீச மலர் மாரி பொழிந்து தேவ கானத்துடன் கயிலைக்கு அழைத்துச் சென்று சிவபெருமானைக் கண்ணாரக் கண்டு களிக்கச் செய்தனர். செண்பகாடவித் தென்றற் காற்றுப் பட்டதனால் அவன் பாவங்களெல்லாந் தொலைந்தன வென்றும் சிவபெரு

மான் அருளிச் செய்தார். தூதரிடமிருந்து சேதி தெரிந்த யமன் அவன் பாவக்கணக்குப் பட்டியலைக் கண்டு பதை பதைத்து ஆத்திரேயன் சிவபதவி பெறுவது முறையாமோ, என்று சிவபெருமானிடம் முறையிட அவரும் காலனிடம் திருக்குற்றலத்துத் தென்றல் ஆத்திரேயன் பாதகங்களை ஒழித்தன வென்றும் திருக்குற்ருலத்தைச் சுற்றியுள்ள ஆன் மாக்களை அவன் அணுகுவதை விட்டுவிட வேண்டுமென்றும் கட்டளையிட்டார்.

*நாடும் நகரமும்*

தென்ருரிய நாடு திருமகள் விளையாடும் திருநாடு என்று ஆசிரியர் வர்ணிக்கின்ருர்.

*செய்காட்டுந் தாமரையா தேன்காட்டுங் கழுநீரா*
*மொய்காட்டு நறுந்தளவா முருகாட்டு மாந்தளிரா*
*கைகாட்டி முகங்காட்டிக் கண்காட்டி நகை காட்டி*
*மெய்காட்டித் திருமடந்தை விளையாடுந் திருநாடு.*

(திருநாட்டுச் சருக்கம், 51)

*திருநகரத்து* மாடங்களில் மகளிர் பந்தாடுகின்றனர். அவர்களை மயிலென நினைத்துக் குயில்கள் புறங்காட்டியோடு கின்றன. அவர்கள் மழலை வாயிசையைக் கேட்டு மயில்கள் குயிலோவென நினைத்துப் பின்காட்டி யோடுகின்றன. மகளி ரோ காதணிகளாலும் கூந்தலாலும் வெயிலோடு மேகஞ் சேர்ந்ததெனக் குயிலையும் மயிலையும் அழைக்கின்றனர். அருமையான கற்பனை.

*பயிலுமேனிலைகள் தோறும் பந்தடித்தாடு வாரை*
*மயிலெனக் குயில் பின்காட்ட மழலை வாயிசையாலஞ்சிக்*
*குயிலென மயில் பின் காட்டக் குழைகளால் அளகக்*
*கொத்தால்*
*வெயிலொடு புயலுங் காட்டி மீட்டு மீட்டழையா நிற்பர்.*

(திருநகரச் சருக்கம், 12)

*சிவபெருமான் முழுமுதற் கடவுள்*

திரிகூட மலை, திருக்குற்ருலத்தல மகிமை, வடவருவி, சிவமது கங்கை, பராசத்தி பீடம், குறும்பலா என்று குற்ருலத்துக்குச் சிறப்புத் தருபவைகளைப் பற்றி ஆசிரியர் இப்புராணத்தில் பாடுகிருர். தக்கன் நான்முகனிடம் சென்று

பின்னமிலாது உயிர்க் குயிராய் நிற்பவனும் சிற்குணனும் பெருந்தேவர்க்கு முன்னவனும் இறுதியிலா முதல்வனும் யாரெனக் கேட்ப, நான்முகன் 'அவன்; முக்கணெம்மான்,' என்று சொல்கின்றான்.

*மாதவனே பிரமமென்றும் யான்பிரமமென்று மதிமயங்கா வண்ண*
*மீதெலாமெம்போல்வார் வெண்டலைமாலைகள் புனைந்தான் விமல மூர்த்தி.*

(தக்கன் வேள்விச் சருக்கம், 8)

சிவபெருமான் கூத்தப் பெருமானாயாடும் போது மடிந்த பல பிரம்மா விஷ்ணுக்களின் மண்டையோடுகளை மாலையாகக் கோத்துக் கழுத்திலணிந்து ஆடுகின்றான். அவர்களுடைய எலும்புகளை மூட்டையாகக் கட்டி அம்மூட்டையை நீண்ட கையெலும்பொன்றில் தொங்கவிட்டுத் தோள் மேல் வைத்து கங்காள மூர்த்தியாய் நடக்கின்றான் என்றும் சைவ நூல்கள் கூறும்.

தக்கன் வேள்வியழித்ததையும் தேவர்கள் சிவத்துரோகமடைந்ததையும் பின் அது தீர்ந்ததையும் வேடன் சிவகதியடைந்ததையும் யானை பூசித்ததையும் புலவர் பெருமான் புராணத்தில் பாடுகின்றார்.

**தக்கன் வேள்வி**

தக்கன் பிரமதேவனிடம் "பின்னமிலாது உயிர்க்குயிராய் நிற்பவனும், சிற்குணனும், பெருந்தேவர்க்கு முன்னவனும், இறுதியிலா முதல்வனும் யார்?" என வினவப் பிரமன் "யாங்கு முளன், யாங்குமிலன், அருவுமிலன் உருவுமிலன், எம்மான் சிவபெருமான்" என உரைப்பத் தக்கன் சிவபெருமானை நோக்கித் தவஞ் செய்யலானான். மழவிடையார் தக்கன் முன் தோன்ற "உன்னிடத்துறையுந் தோகை, சுந்தரி என் மகளாகத் தோன்றி, நீ அந்தணனாய் வந்து அவளை மணம் புரிதல் வேண்டும்," எனத் தக்கன் இறைஞ்சினான். அவன் கேட்ட மற்ற வரங்களையும் அருளி "சிந்தையுற நீ நன்னெறியில் நிற்கில் இவை நிற்கும்" என்று சொல்லிச் சிவபெருமான் மறைந்தார். தக்கன் மகளாய்ச் சதிதோன்றி இறைவனை நினைத்துத் தவம் செய்யவும் மறையோனாய் வந்து அவளை மணந்து மறைந்து சென்றான்.

இறைவன். தாய்தந்தையர்க்குத் தெரியாமற் பெண்ணைக் கொண்டு சென்றுனென்று தக்கன் வெகுண்டிருக்கத் தேவர் கள் உரைகேட்டு இறைவனையும் மகளையும் கயிலாயத்தில் பார்க்கச் சென்றுன். நான்முகன், திருமால், இந்திரன் ஆகிய தேவர்கள் வணங்கி நிற்பத் தக்கன் தனக்கு மாமன் என்ற மரியாதையைச் சிவபெருமான் தரவில்லையெனச் சினந்து யாகம் செய்யலானுன். சிவபெருமானை அழையாது மற்றையத் தேவர்களைக் கொண்டு யாகம் எடுப்பித்தான். தந்தை செய்யும் யாகத்தைக் காண விழைந்த சதி பெரு மானிடம் இரந்து வேண்டி யாகசாலையை அடைந்தாள். மகளை வரவேற்காததோடு இறைவனையும் தக்கன் பழித்துப் பேச சதி துயரடைந்து திரும்பினுள். நாரதன் சிவபெரு மானிடம் உமையை அவமதித்து இறைவனைத் தக்கன் இகழ்ந்தான் எனச் சொல்லவும்.

முதல்வன்

*புனித வாயிதழ் துடித்தது; நெறித்தது புருவம்;*
*நனி கொள்வாணுதல் இவர்ந்தது; சிவந்தது நயனம்;*
*அனில மங்கியும் ஒடுங்கின, நடுங்கின, அகிலம்.*

(தக்கன் வேள்விச் சருக்கம், 133)

இறைவன் சினத்துக்காளாக மன்மதன் அங்கில்லை; முறு வலுக்கிலக்காக முப்புரங்களுமில்லை; வியர்வை வந்திடக் கடையுகமுமில்லை அண்டத்தினை அழித்திட. சினத்தை யடக்கிக் குறிப்பொடும் பார்த்தான் இறைவன்.

**தக்கன் வேள்வியழிந்தது**

*பார்த்த திக்கினிற் கொடுமுடி யாயிரம் பரப்பிச்*
*சூர்த்த திண்டிய வரையிரண் டாயிரந் துளக்கிப்*
*போர்த்த தாள்களிலண்ட மும்கண்டமும் பெயர*
*வேர்த்தெழுந்தனன் வீரரில் வீரரில் வீரன்.*

(தக்கன் வேள்வியழிந்த சருக்கம், 1)

இறைவன் பாாத்த திக்கில் எழுந்தான் வீரபத்திரன். தக்கன் வேள்வியை அழித்து வன்சிரத்தையுந் துணித்து வருமாறு இறைவன் கட்டளையிட்டான். பத்திரகாளி பல் கணத்தொடும் வீரபத்திரனுக் குதவினுள்.

'தக்கன் எங்குளான்? சாலை எங்குளது? வானவர் எங்குளர்? போதுமின் புகுமின்' என்று சிவகணங்கள் புகுந்து சூரியன் கண்ணைப் பறித்தனர். சந்திரனைத் தரையில் தேய்த்தனர். அக்கினியின் கையையும் நாவையும் அறுத்தனர்.

நந்தி தேவரை இந்திரன் வானவர்களுடன் எதிர்த்தான். அவன் வச்சிராயுதத்தை தம் மழுவால் நந்திதேவர் சாம்பராய்ப் போகும்படி செய்தார். அவனுடைய யானையைச் சுழற்றியடிக்கவும் அவன் குயிலுருவம் கொண்டோடினன். யாகசாலையுள் புகுந்து வீரபத்திரரும் காளியும் கணங்களும் அமுதம் வைத்திருந்த குடங்களை உடைத்தனர். திருமால் கருடன் மீதேறி தேவசேனையுடன் வீரபத்திரரை எதிர்த்தார். கடும்போர் மூண்டது. திருமாலின் தேரையழித்துக் குதிரையைக் கொன்று தேரிலுள்ளவனைப் பாரிலுள்ளவனாக்கினர். திருமால் தன் சக்கராயுதத்தை வீரபத்திரர் மேல் செலுத்த அவர் அதை மாலையாகப் புயத்தில் தரித்தார். திருமால் வாளெடுத்து வர வீரபத்திரர் இடியென முழங்கினர். அது கேட்டுத் திருமால் மூர்ச்சையடைந்து பின் கடலிற் போயொளிந்து கொண்டார். பத்திரகாளி தேவப் பெண்களின் உறுப்புக்களை யரிந்து அவர்களை விரட்டினள். வீரபத்திரர் தக்கன் தலையை அறுத்தெறிந்தார்.

தக்கன் மகள் என்ற பழி தன்னை விட்டு நீங்க வேண்டுமென்று உமை சிவபெருமானை வேண்ட அவரும் இமவான் மகளாமாறு சொன்னர். அவளை மணம் புரிந்து கொள்வதாகவும் உரைத்தார்.

நான்முகன் எம்பிரானிடம் சென்று குறைபாடோதி இறந்தவருயிரை மீட்கக் கோரினன். அறுந்த கைகால் தலை மீண்டும் பொருந்தி உறங்கினர் விழித்தாரென்னத் தேவர்கள் உயிர்த்தெழ இறைவன் அருள் செய்தான்.

*தேவர்கள் சிவத்துரோகம்*

சிவபெருமானை மதிக்காது தக்கன் நடத்திய வேள்வியில் அமரர்களும் பிரமனும் விஷ்ணுவும் கலந்து கொண்டு சிவத் துரோகத்துக்கு ஆளானார்கள். சிவத்துரோகம் தீர்வதெவ் வாறு? திருக்குற்றலத்தலம் தீர்க்கவல்லது என்று வேதங்கள் முழங்குகின்றன என்றுரைக்கிறார் திரிகூடராசப்பக்கவிராயர்.

**தாய் பசிக்கத் தந்தை பசித்திருக்கக் காண்போர் தங்கள்**
**சுற்ற மனங் கொதிக்கத் தாங்கள் வாழ்வோர்**
**சேய் பசிக்கத் துடிக்க விருந்துண்போர் தாரஞ் சிறையிருத்திப்**
**பரதாரம் விரும்பிச் செல்வோர்**
**வாய் பதைத்துப் பிறர்குடிக்குத் தீங்கு சொல்வோர் மன்றிருந்து**
**வழக்கோ ரஞ் சொல்வோர் பொல்லா**
**நாய் வளர்த்துக் கொலை புரிவோர் பாவமெல்லாம் நன்னகரே**
**தவிர்க்குமெனும் இருக்கு வேதம்.**

(தேவர்கள் சிவத்துரோகமடைந்த சருக்கம், 59)

**அன்னமிட்டார் தமக்கிரண்டு நினைக்கின்றாரும் அடைக் கலத்தை**
**வயிறெரியத் தொடுகின்றாரும்**
**பின்னமிட்டுக் கிளைக்கூட்டம் பிரிக்கின்றாரும் பெரியாரைப்**
**புறம்பழிந்துப் பேசுவாரும்**
**கன்னமிட்டுக் களவாடிக் கண்ணுண்பாரும் காமத்தாலழிவாரும்**
**எய்து பாவம்**
**முன்னவர்க்கு முன்னர் குற்றாலமென்று மொழிந்தாலும்**
**தீருமெனும் மூன்றாம் வேதம்.** ( ஷை 61)

**அடுத்தார்க்கு நன்கு செய்யார் இடுக்கண் செய்வார்**
**அந்தணரை உயிர்செகுத்தார் ஆவைக் கொன்றார்**
**கொடுப்பாரை யருகிருந்து தடுப்பார் கற்பின் குலமாதர்**
**வரம் பழித்தார் குருவைப் போற்றார்**
**கெடுப்பார்க்குத் துணையாவார் அறஞ் செய்வார்க்குக்**
**கேடுசெய்வார் பாவமெலாங் கிரிக்கோதண்டம்**

எடுப்பார்க் குவளம் பதியாம் திருக்குற்ருலம் இடைப்பொழுதில்
ஒழிக்குமெனும் இரண்டாம் வேதம். (ஷ 60)

(கிரிக் கோதண்டம் – மலைவில்)

உலகிடத்துத் தொலையாத பாவமெல்லாம் உயர்தரு புண்ணிய
தலத்துத் தீர வேண்டும்,
பலபுண்ணிய தலத்துந் தீராப்பாவம் பரமனுறை சிவதலங்கள்
பரவத் தீரும்
திலகமெனுஞ் சிவதலத்துச் சென்ருர் பாவந்தீருமே
தீராது சிவத்துரோகம்
நலமலிசீர் திரி கூடத்திருக்குற்ருல நன்னகரே
தீர்க்குமெனும் நான்காம் வேதம். (ஷ 62)

தீராத பாவமெலாந்தீர்க்கும் திருக்குற்ருலத்தைப் பாடும் புலவர் பெருமான் பாவிகள் பட்டியலையும் நமக்குத் தருகின்ருர்.

நான்முகன் அமரர்களுக்குத் திருக்குற்ருலஞ் சேர்த்து சிவத்துரோகத்தைத் தீர்த்துக் கொள்ளுமாறு நல்லுரை பகன்ருன்.

தேவர்கள் சிவத்துரோகம் நீங்கல்

வானவர் வற்ருத தேனருவி வானருவிக் குற்ருலம் மேவினுர்; சண்பக வனத்ததிசயத்தை எதிர் கண்டார்; சந்தகில் குரவவேலிச் சண்பகச்சோலை மந்தமாருதத்தினுலே மனம் குளிர்ந்தார். தேவலோகத்து ஆடவர் வந்தாரென மார்பை ஆடையால் மறைத்துக் கொண்ட பெண்போல முகில் தென்னங் குரும்பைகளை மறைத்தது ஒத்திருந்தது.

கன்னியம் பசியபாளை கமழ்தரு பருவத் தெங்கின்
மன்னிய குரும்பை கரய்த்து மழைமுகில் பொதிந்த
தோற்றம்

மன்னிய உலகிற் றெய்வ ஆடவர் வந்தாரென்று
துன்னுபார் மடவார் கொங்கை துகிலுல் மறைத்தன
மானும்.
(தேவர்கள் சிவத்துரோகந் தீர்ந்த சருக்கம், 6)

தேவர்கள் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்தார்கள். இறைவன் தோன்றவில்லை.

உருகினோம் உடலெலாம் உளமெலா மறுகினோம்
விரவினோம் அனலிலே வெயிலிலே கருகினோம்
வருகிலார் அருள்கிலார் மழுவலா ருலகெலாம்
அருளுமோர் பரமனா ரருளிலா தவர் கொலோ. (ஷ 26)

என்று தேவர்கள் வருந்தி இறைவனை வழுத்தினர்.

தேவருக்கும் பெருந்தேவே திரிகூடப் பரஞ்சுடரே
மூவருக்கு முதற்பொருளாய் முளைத்தருளுந் தனிமுதலே
மேவருட்கண் வாரிதியே மேலான குணக்குன்றே
ஏவருக்கு முனையல்லாற் புகலுண்டோ வெம்பெருமான்.
(ஷ 31)

முன்னாளிலுனை யிகழ்ந்து சிறுவிதி தீ மகத்தடைந்த
முரணாலன்றே
மன்னுளுமர சிழந்து பதியிழந்து வறுமையினாற்
பதைக்கின்றோம் யாம்
அந்நாளில் எமைத் தொடர்ந்த சிவத்துரோகந்
தன்னை யின்றகற்றல் வேண்டும்
எந்நாளும் எங்கள் பதம் யாங்கள் பெறவேண்டுமென
இறைஞ்சிப் பின்னும். (ஷ 50)

என்று தேவர்கள் வருந்தி இறைவனை வழுத்தினர். பாதகம் நீங்க இறைவனைத் தேவர்கள் வேண்டினர். சிவ பெருமானும் விண்ணுலகமடைந்த அவர்கள் வாழ்வும் அரசும் பெற அருள் செய்தார்.

**வேடன்வலம் வந்த சருக்கம்**

பொருனையாறு தன் அலைக் கரங்களால் மாம்பழங்களைப் பந்தடித்து விளையாடும். அது பாய்கின்ற பொதிகைமலை

தாமரைப் பூப்போன்றும் தமிழ்மறை போன்றும் நான்முகன் போன்றும் குறுமுனிபோன்றும் இருக்கும்.

*காலத் தாம்பிரக் கனிகள் பந்தாடு தெண்டிரைக்கைக்*
*கோலத் தாம்பிரவன்னியாம் கொழிதிரை நதிபாய்*
*தூலத் தாம்புரக் குன்றம் வாரி சந்தமிழ் சுருதி*
*மூலத் தாம்பிரமன் பெருந்தவக்குறு முனிவன்.*
(வேடன் வலம்வந்த சருக்கம், 6)

தாம்பிரவன்னிபாயும் பொதிகை மலையில் திருக்குற்றுலம் உளது. திரி கூடத்தில் வீரன் என்னும் வேடனுக்கு வலனென்பான் மகன்.

*செருப்பும் கானமும் தேய்த்த திண்காலினன்*
*பொருப்பினேங்கி வளர்ந்த புயத்தினன்*
*நெருப்பினீர் பெய் நிறத்தினன் செங்கடா*
*மருப்புமான முறுக்கும் வன்மீசையான்.* (ஷ 10)

*முயலும் மான்களும் மூரிக்கலைகளும்*
*கயலும் சேல்களும் காளமும் சேனமும்*
*குயிலும் வீட்டுங் கொலைத் தொழிலே நடை*
*பயிலுங் காலத்தின் முன் பயில் பான்மையான்.* (ஷ 12)

தன் படைகள் புடைசூழ காட்டிலே அவன் வரும் பொழுது யானையின் அபயக் குரல் ஒன்று கேட்டது. நீலக் குன்றினைக் கார்மேகம் சுற்றியது போல் பாம்பொன்று யானையைச் சுற்றியிருந்தது.

*தந்தி கூப்பிடச் சக்கரத் தானென*
*வந்தெதிர்த்தனன் வென்றி வலனென்பான்*
*முந்து தாவி முன்னேகினர் யாரையும்*
*அந்த மாசுணம் அள்ளிவிழுங்குமால்,* (ஷ 33)

பாம்பைக் கொன்று வலன் யானையை விடுவிக்கவே அந்த யானையே அவனைத் தாக்க முயன்றது. அவன் ஏவிய

அம்புகளைத் தாங்க முடியாமல் யானையும் ஓடியது. அவனுடைய வீரர்களும் ஓடியொளிந்தார்கள்.

பசி வலனைக் கௌவவே தேடியலைந்து ஒரு முயலைக் கண்டு கொன்று நெருப்புத் தேடிச் சென்றான். திரும்புகையில் முயலையொரு நரி கௌவிச் செல்லவே அந்நரியைத் தொடர்ந்து வலன் ஓடினான். அவ்வாறு ஓடுகையில் திரிகூட மலையையும் வடவருவித் தீர்த்தத்தையும் சித்திரா நதியையும் கண்டு சங்க வீதியையும வலஞ்சுற்றி நரியைத் தொடர்ந்தான். அவ்வாறு வரும் பொழுதே வருத்தும் பசி நீங்கி, தளர்ச்சியொழிந்து தன்னிருப்பிடம் போய்ச் சேர்ந்தான். முடிவில் திருக்கயிலாயத்தில் சிவகணங்களுளொருவனாயிருந்தான். நரிக்கும் சிவபதம் கிட்டியது. திரிகூடத் திருக்குற்றாலத்தை வலம் வந்த காரணத்தால் வலனும் நரியும் அடையாத பேறு அடைந்தனர்.

**யானை பூசித்தது**

அருமைப் பேடைகள் களிப்புறக் களிமயிலகவும் கார் காலத்தில்; குளிர் காலத்தில் நாரைப்பேடுகள் தங்கள் சேவல்கள் ஊடுதலின் பொருட்டுத் தாங்கள் ஊடல் செய்யும். அன்றிற் பறவைகள் கூடும் பனிக்காலத்தில். தண்கயப் பங்கயத்தவர் முகம் வாட்டுகிறது பின் பனிக் காலம். வண்டு தாலாட்டந் தூங்கும் சீரிளவேனில். பின்னெழுந்தது முதுவேனில். வெய்யிலின் கொடுமையால் பருந்துகள் சுழன்றன. அப்பருந்தின் நிழலில் ஒதுங்கின பாம்புகள். படமெடுத்த பாம்புகளின் நிழலில் நின்றன எலிகள். யானைகள் எலும்பாய்த் தோலாய்த் தூங்கலாயலைந்தன. ஒரு மதயானையும் வெப்பத்தால் வாடிச் சுழன்று அலைந்து திரிந்து கடைசியில் திரிகூடமலையைச் சேர்ந்தது.

*முன்னெலாம் பசிக் குலைந்ததோர் மும்மத வேழங்கள்*
*பன்னெடுங் கவிப் பாணனார் பாணியைப் பரிவாற்*

*சென்னி வைத்தவர் திருமுகங் கொடுத்தொரு சேரன்*
*பொன்னின் மாளிகை புகுந்தெனப் பொழில் புகுந்ததுவே.*

(யானை பூசித்த சருக்கம், 15)

*வாழையிற் குலை மறுகரித் தலையெனத் திருகிக்*
*கூழை முக்கிமாங் கனியுண்டு கொழுநிதிக் குவைசேர்*
*பேழையைத் திறந்தெனப் பலவினிற் சுளை பிதிர்த்துத்*
*தாழை முப்புடை நறுங்கனிச் சாறொடுந் தாக்கி.* (ஷை 16)

ஆகாயகங்கையில் தாகம் தீர்த்தது. வடவருவியில் மூழ்கிச் சோலைப் பூந்தாதில் புரண்டு மகிழ்வுடன் விளையாடியது மதவேழம். தன்னையறியாது யானை சிந்திய நீரும் உராய்த லாலே உதிர்ந்த பழமும் குறும்பலாவீசர் பக்கத்திற் சேர்ந் தன. அவை கண்ணப்பன் வாயினின் றுமிழ்ந்த நீர் போன்றி ருந்தது ஈசர்க்கு.

*திமில வாரணம் உமிழும்நீர் திண்ணனம் பரனுர்க்கு*
*உமிழும் நீரதாத் தழையெலாமவன் சிகை யுகுக்குங்*
*கமழும் பூவதாச் சிதறிடும் கனியவன் கனிவாய்*
*அமிழ்தமாக மென்றளித்திடும் அவிகள் போன்றனவே.*

(ஷை 27)

வேண்டியபடி இன்பம் நுகர்ந்து யானை நிலத்தை விட்ட கலும் கடைசி நாளில் கூற்றுவன் தூதர் வந்தனர். சிவ கணத்தார் அவரைத் தடுத்து நிறுத்தினர். ''பின் புலத்தின் கொலை விலங்கு புரி தருமம் யாது?'' எனத் தூதர் வினவ, ''செழுங்குரங்கு பகலவனைச் சிவந்த பழமென்று தாவும் வள முடைய குறும்பலாவீசரைப் பூசனை புரிந்த குஞ்சரமிது'' எனச் சொன்னுர் சிவகணங்கள். அறிந்தும் அறியாமலும் செய்கின்ற பூசைக்கும் பெருமான் பூசை செய்வார்க்கருள் புரிவார் என்பதற்கு யானை சிவபெருமான் கோயில் வாயிலிற் பணி செய்வார்க்குத் தலைவனுயமைந்தது எடுத்துக்காட்டு.

**மலைமகள் தவம்**

சிவரகசிய காண்டம் உமை திருவவதாரச் சருக்கத்துடன் தொடங்குகின்றது. மலைமகள் சிவபெருமானைக் கணவனுய டையத் தவஞ் செய்கிருள்.

*அலைபுனற் றடஞ்சேர்ந் தன்னமாகுவாள் கூலமேவி*
*மலைமிசைப் பிடியை நேர்வாள் வனத்திடை நிற்குங்காலை*
*நிலைமலர்க் கொம்புபோல் வாணிட்டை யிருந்தாலம்பொற்*
*சிலையினை நிகர்வாளன்றிச் சித்திரம் போல் வாளன்றே.*

(உமை திருவவதாரச் சருக்கம் 30)

சிவபெருமான் அந்தணமுதியோராகிப் பனி மலைவல்லி முன் வந்து மலையில் வாழ்பவனை நாடுதல் பயன் தராதென் றும் தாம் அவளை மணம் புரிய வந்ததாகச் சொல்ல மலை மகளும் இரு செவி புதைத்து அகன்ருள். வந்த அந்தணரும் மறைந்தார். வந்தவர் இறைவனே என்று உணர்ந்த உமை இறைஞ்சலானுள்.

*கடவுள் வேதியனுர் தாமுங் கரந்தனர் திகைத்தாள் வல்லி*
*இடம் வலந் தேடிக்காணுள் இறைவனென்றிரங்*
*கலுற்ருள்*

(உ.தி.ச. 44)

*ஒன்றே பலவே உலகெலா மோங்கு*
*குணக்குன்றே கடலே கொழுங்கருணைப் பேராறே.*

(உ.தி.ச. 45)

* * *

*காரா யமுகொழுகு கந்தரத்தா யந்தரத்தாய்*
*ஆரா வமுதேயென் றனந்தக் கடலே*
*நீராய் வெளியாய் நெடுங்காலாய் வெங்கனலாய்*
*பாரா யொளியாய் பரந்தாய் பரமேட்டி.*

(உ. தி. ச. 47)

காளிதாசனுடைய 'குமாரசம்பவ'த்திலும் இத்தகைய நிகழ்ச்சியொன்று காணப்படுகிறது.

தவம் செய்து கொண்டிருக்கும் மலைமகளின் பால் வேதிய ரொருவர் வந்து சிவனைக் குறைத்துப் பேசி மலைமகள் அவர் பேச்சை மறுக்கவும் வெறுக்கவும் பின்னர் இறைவன் தன் வடிவுகாட்ட அவள் திடீரென்று பெற்ற மகிழ்ச்சியைக் காளி தாசன் சொல்லும் பகுதி வெகு அழகாயுள்ளது. ''இறை வனைக் கண்டு மயிர்க்கூச் செறியவும் கொடிபோன்ற உடல் வியர்க்கவும் கீழே வைக்கத் தூக்கிய திருவடி அப்படியே மேலே நின்றுவிடவும் மலைமகள் நடந்தாளுமில்லை நின்ளு மில்லை. பாய்ந்தோடிவரும் ஆற்றுப் பெருக்கை மலைதடுத்த போது நீர் கொந்தளிப்பது போலானள்.'' * என்று காளி தாசன் வர்ணிக்கிருன்.

**திருக்குற்ருல ஓவியப்பொது**

திருக்குற்ருலச் சித்திர சபையில் நடமாடும் கூத்தனுக்கு உலகநாயகி தாளம் கொட்டுகிருள். ஓவியப் பொதுவுக்கே இது சிறப்பான ஒன்று.

செப்புத் திருமேனியானுலும் கல்லில் செதுக்கப்பட்ட திருவடிவானுலும் ஓவியமானுலும் நடராஜ உருவம் மாற்றிய மைக்க முடியாதது. நடராஜத்திருவுருவம் எவ்வாறிருக்கும்? திரிகூடராசப்பர் சொல்கிருர்:

*ஒரு கரந்தனிற் படர் கனல் சுடர்விட ஒருகரந்துடி யார்ப்ப*
*இரு கரங்களில் வரதமுமபயமும் எவ்வுலகமும் காப்ப*
*அருள் பரந்தெழு திருவுளக் கருணையா லகிலமுங் குளிர் தூங்கக்*
*செருகு கொன்றையங் கண்ணி தேனூறிடச் செழு மதி நிலவூற்ற,*

(திருநடச் சருக்கம், 10)

இறைவன் ஆடுகின்ருன்.

---

*Kalidasa's Kumarasambhavam – Canto 5, 85-86 (S. G. Deshpande's translation.)

ஏண்டவரிருவர் சிவசிவசிவ வென்றேத்திட இருவரி
லொருவன்
காண்டகவரிய சரண நூபுரங்கள் கலின்கலின் கலினென
ஒலிப்ப
ஆண்ட கையமரர் சயசயசய வென்றுர்த்திடச் சித்திர
சபைக்கே
தாண்டவர் பணிவார் தமக்கெலா முத்தி தகுந்தகுந்
தகுமென நடித்தான்.

(திருநடச்சருக்கம், 18)

துடித் திரளமரர் துந்துபித்திரளாஞ் சோபனக் கவுரி
பொற்றுளம்
பிடிப்பளாஞ் சுருதி கருதியாயிரமாம் பேரிசை வாக்கு
நாமகளே
படிப்பளா மயன் மாலிமையவர் பரவிப் பார்ப்பராம்
அகில நாயகனே
நடிப்பனும் பொதுவேவார் சித்திரப் பொதுவார் நடநவில்
காட்சியார் நவில்வார்.

(திருநடச்சருக்கம், 19)

திருக்குற்றுல ஓவியப் பொதுவின் சிறப்பு இறைவனுடைய ஆடலில் இறைவியும் பங்கு கொள்கிருள் என்பது; கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலிலும் இக்கருத்துக் காணப்படுகிறது.

ஆடல் மகள் அரங்கேற்றம்

தருமசாமிச் சருக்கத்தில் ஒரு பாடல்.

பேதையர் பால் முகம்பாரா தோதல் பிரம்மச்சரியம்
காதலியை மணம்புணர்ந்து வாழ்தல் காருகத்தியமாம்
மாதரொடு வனத்துறைந்து நோற்பது வானப்பிரத்தம்
ஓதுமிவை மூன்று மொழித் தொன்றுணர்தல் சந்யாசம்.
(த. ச. 7)

இதுபோன்று இலக்கணம் சொல்லும் பாடல்கள் இப்புராணத்தில் பல உள.

சிவசாமி என்ற மறைவாணர் குலதிலகன் இல்லறமே நல்லறம் எனவோர்ந்து மணம் செய்து கொண்டு குற்றாலஞ் சேர்ந்தான். அவனும் அவன் மனைவி புனிதவதியும் குற்றாலத்தில் இல்லறம் நடத்தும் பொழுது அவர்களுக்கு ஒரு மகன் பிறந்தான். தருமசாமி எனப் பெயரிட்டார்கள். எல்லா நூல்களையும் கற்றுப் பெரியவனான காளையாம் புதல்வனுக்குச் சிவசாமி ஓர் அழகான பெண்ணை மணம் புரிவித்தான். பழகிடா மூர்க்கரொடு பழகிய தருமசாமி முதிய மறைநூல் விடுத்துப் பல பாவையரைத் துருவலானான். அந்நாட்டில் ஒரு மடந்தை ஒரு பேரழகி. ஆடுவதில் வல்லவள்.

*பாடலாற் கருங்குயிலைப் பணிகொண்டாள் பரிமளப்பூங்*
*காடெலாம் பூங்குழலாற் கைவிலை கொண்டாள்*
*கடல் சூழ்*
*நாடெலாம் பணிகொளவோ நாக நாட்டரம் பையரை*
*பாடலாற் பணிகொளவோ வரங்கேறத் தொடங்கினாள்.*

(த. ச. 50)

*பத்தியிசைக் காம்போதி தோடி பயிரவிபாடத்*
*தித்தி சிறு முகவீணை சீங்குழல் கின்னரமிழற்ற*
*மத்தளங்க ளிருபுறமும் பரதமுறை வகுத்தியம்பத்*
*தத்தளங்க தளங்கவெனத் தாளமுறை முறை முழங்க.*

(த. ச. 54)

*பிள்ளையார் கவித்துவமும் பேரணியு மஞ்சளியுந்*
*தள்ளரிய சலாந்தருவுஞ் சவுதவிகற்பமும் காட்டித்*
*தெள்ளிய செக்கணியாடிக் குச்சராதிகள் சேர்த்துக்*
*கள்ளவிழி போராடக் கையிலபி நய மெடுத்தாள்.*

(த. ச. 55)

*மண்ணின் மேற்பெயர்ந்தாளோ வானின் மேற்*
*குதித்தாளோ*
*கண்ணின் மேற் கலந்தாளோ கருத்தின் மேற்*
*புகுந்தாளோ*

*பண்ணின் மேல் வரிச்சுரும் போதும்பியோ படர் மயிலோ*
*விண்ணின் மேலுருப்பசியோ மேனகையோ வென*
*நடித்தாள்;*

(த. ச. 56)

*பாவம் தொலைதல்*

ஆடல் மகளையடைந்த தருமசாமி தந்தை தேடிவைத்த பொருளையெல்லாம் தொலைத்து மனைவிகொண்டுவந்த சீதனப் பொருள்களை இழந்து ஆடல் மகள் மது கொடுப்ப உண்டு பின் மதுவெனக் கண்டு அவளைப்பிரிந்தான். ஆகமநூற் பண்டிதர்களிடம் வந்து தருமசாமி தன் நிலையைச் சொல்லிப் பாவம் போக வழி கேட்டிரங்கினன். மழுவெனக் காய்ந்த நெய் யைப் பருகுவதே உய்யும் வழி எனச் சென்னர் மறையோர். அவன் நிலைகண்டு,

*தாயருமழுதார் தந்தை தமர்களுமழுதார் நல்லோர்*
*தீயருமழுதார் மூத்தோர் சிறியரும ழுதார் கூற்றும்*
*பேய்களுமழுத வாறற் பின்னையார் சலித்தழாதார்.*

(த. ச. 112)

நெய்யைப் பருகவிருக்குங்காலை சமயசஞ்சீவியாய நாரதமுனி அங்கு வந்து சேர்ந்தார். 'பாவம் இப்படி அனந்தகோடி யென்றாலும் அதைத் தீர்க்கும் தீர்த்தம் ஒன்றுளது. கைப் படு நெல்லிபோலக் காட்டுதும் உலகங்காண' என்றார் முனிவர். தருமசாமி வடவருவி சார்ந்தான்.

*படிந்தனன் படியா முன்னம் பாய்திரையருவிச் சீயம்*
*தடிந்தது பவ வேழத்தைச் சாய்ந்தது கழுநீர்ச் சோரி*
*வடிந்தது பாவக் கங்குல் மறையவன் தனக்குக் காலம்*
*விடிந்தது விடிந்ததென்னும் வெண்டிரை முழக்க*
*வெங்கும்.*

(த. ச. 126)

*சிலப்பதிகார மாதவியைச் சென்றடைந்த கோவலன் போல் தருமசாமி ஆடல் மகளை யடைந்தான். தரங்காணு*

மீன் பார்த்துத் தப்பவிடாக் குருகதுபோல் தருமசாமியை எதிர் கொண்டாள். தருமசாமியை விரும்பிய ஆடல் மகள் நாடகம் புரிந்தாள் 'காசையும் பொன்னையு நயந்தார் காமனையு நயப்பாரோ (த. ச. 61) என்ற ஆசிரியர் கூற்று இவ்விரண்டு ஆடல் மகளிரையும் இணைக்கின்றரோ என்பது சிந்திக்கற்பாலது.

நூற்பயன்

இறுதியாக நூற்பயனுரைத்த சருக்கத்தில் நூற்கேள்வி பெறுவது இன்றியமையாதது என்று ஆசிரியர் சொல்கின்றார்.

*இருவிழிகள் வான்முகத்தி லிருந்தாலும் வானிரவி யெழுந் தாலன்றிக்*
*கருது நிலப் பல்பொருளுங் காண்டலரிதா முலகிற்கண் போல் யாரும்*
*பெருகிய செல்வமுமறிவும் பெற்றாலு நூற்கேள்வி பெறு வார்க் கன்றித்*
*திருவளர் புண்ணிய பாவ மிம்மை மறுமையும் வீடுந் தெரியாதன்றே.*

(நூ. ச. 1)

இந்நூலைப் பயில்வார் யாராகிலும் பயன் பெறுவர் என்கிறார் ஆசிரியர்.

*கல்லார்க்கும் நிறை கல்வி கற்றார்க்கும் மேலொழுக்கம்*
*பொல்லார்க்கும் குணமாட்சி புத்தியில்லார்க் குயர் போதம்*
*வல்லார்க்குஞ் செயல் புரிய மாட்டார்க்கும் பொருளாக்கம்*
*எல்லாச் செல்வமும் நல்கும் எந்தை புடார்ச்சுனபுர நூல்.*

(நூ. ச. 17)

இராமலிங்க சுவாமிகளின் 'கல்லார்க்கும் கற்றவர்க்கும்' என்று தொடங்கும் பாடல் நினைவுக்கு வருகிறது.

நூற்பயனுரைத்த சருக்கத்தின் கடைசிப் பாட்டாகவும் முற்றுப் பெறும் நூலின் இறுதி விருத்தமாகவும் வெண்ணீறும் அஞ்செழுத்தும் ஓங்க ஆசிரியர் பாடுகின்றார்.

*ஆதிபிரான் வெண்ணீறும் அஞ்செழுத்து மோங்குக நாற்*
*சாதி நெறி வேதநெறி சைவநெறியுந் தழைக்க*
*மாதரார் கற்புநெறி வளர்க மாநில மதன் மேல்*
*நீதி மனு வேந்தர் நெறி நீடூழி வாழ்கவே.*

(நூ. ச. 98)

### (3) திருக்குற்றாலமாலை

*எங்கும் நீக்கமற நிறைகின்ற இறைவன்*

திருக்குற்றாலமாலை காப்புச் செய்யுளைத் தவிர்த்து நூறு பாடல்களைக் கொண்டது. 'மூவர் திருப்பாடல் கற்று முழுதும் உன்பால் பேரன்பு,' வைத்துப் பாடிய பாடல்களாகும் என்று ஆசிரியர் முதற்பாடலிலேயே தெரிவிக்கிறார். இந்நூறு பாடல்களும் 'குற்றாலத்துறைபவனே' என்று ஈற்றடிகளில் முடிகின்றன. இயற்கை வனப்பையும் இணைத்துப் பாடுகின்ற புலவர் பெருமான் ஒரு சில பாடல்களில்தான் குற்றாலக் காட்சிகளைப் பாடுகின்றார். பெரும்பாலான பாடல்கள் பத்திச் சுவை மட்டும் கொண்டவை. இப்பாடல்கள் கற்றோரிடையும் அன்பர்களிடையும் இதுவரை பரவாதிருந்த காரணம் யாதோ தெரியவில்லை. இவை கருத்துச் செறிவும் சொல்லழகும் நிரம்பியவை.

கவிஞருக்கு இறைவன் பார்க்குமிடமெங்கு நீக்கமற நிறைகின்றான்.

பூடுங்கல்லும்
*தருமிக்க பட்சி மிருகங்க ளாதி சராசரமும்*
*ஒருமிக்க தெய்வ வடிவாங் குற்றாலத் துறைபவனே.* (64)

என்று திரிகூடராசப்பர் பாடுகின்றார்.

திருக்குற்றால நாதர் குழல்வாய் மொழிப் பெண் விழி கொண்ட காட்சிக்கினியன். ஊக்கமும் தூக்கமுமில்லான். சம்பூரணமாம் ஓசையும் விந்துவுமானவன். அவனுடைய ஏளனச் சிரிப்பால் முப்புரமும் அழிந்தது.

*"முன் மூவர்கள் கோட்டை கொன்ற*
*வொரு மந்தகாசப் படையாய் குற்ருலத் துறைபவனே,"*

என்று மும்புரமெரித்ததைக் கவிஞர் சொல்லும் பாங்கு கவினுற அமைந்துள்ளது.

இவ்வுடலை ஒரு சுமையாகக் கருதுகிருர் கவிஞர். அது விழுந்தாலன்ருே இறைவன் திருவடி நீழலை எய்த முடியும். பிஞ்சாகிக் காயாகிக் கனிந்து அழுகிப் போகும் இச்சடலம் என்று போகும் என்று கவிஞர் ஏங்குகிருர்.

*வாசக் குழந்தையு மாய்மட வார்மண வாளனுமாய்*
*ஆசைப் பருவ மதுதப்பி ருலைந்த மாதருங் கண்*
*கூசக் கிழங் கொண்டு தோலாகி நாற்றங் குலைக்குமிந்த*
*ஊசற் சடமென்று போமோ குற்ருலத் துறைபவனே.*

*பிறவிப்பிணி தீர்க்கும் மருந்து*

குற்ருலத்தீசன் பிறவிப் பெரும்பணி தீர்க்கும் மருந்து. பிறவிப்பிணியை ஒரு சிலந்திக்கு ஒப்பிடுகிருர் புலவர் பெருமான். வினையாயரும்பி, ஆசையாக வீங்கி, ஐம்புலன்களாகிய கண்கள் வைத்து மலமாகிய சீக்கொண்டு பழுத்திருக்கிறது பிறவி நோய். இறைவன் மலர்த்தாள் கிடைக்கப் பெற்ருல் அவ்வல்லலைத் தவிர்க்கலாம். அருமையான பாடல் ஒன்றைக் கவிஞர் அளிக்கிருர்.

*கன்மமரும்பி அவாவீங்கி ஐம்புலன் கண்கள் வைத்துப்*
*பன்மலஞ் சீக்கொண்ட சென்ம வியாதி பழுத்து வந்தாற்*
*றன்ம வயித்தியன் சத்ர மிடாமற் றவிர்க்க மருந்*
*துன் மலர்த்தாளிணை தாராய் குற்ருலத் துறைபவனே.*

பெரிய கொப்புளங்களை மருந்துபோட்டு உடையச் செய்பவரும் உண்டு. அறுவைச் சிகிச்சை செய்பவரும் உண்டு. அறுவை என்பதுவே 'சத்ரம்' என்று வழங்கிவந்தது. தர்ம

வைத்தியர்கள் இருந்தார்கள் என்ற குறிப்பும் இப்பாடலில் கிடைக்கிறது.

*இறைவனை நினைந்து ஏங்குதல்*

தனக்குவமையில்லாதான் இறைவன். திருக்குறள் வழியில் நின்று ''உருவிற் குவமை யொன்றில்லாய் குற்றாலத் துறைபவனே'' என்று கவிஞர் பெருமான் பாடுகிறார்.

மக்களிற் கடையவரிடை காணும் மாசுகளைத் தம்மே லேற்றிப் பாடுவர் சான்றோர்.

*''பொன்னென்று சொன்ன வுடனே மயங்கு மென் புத்தியை நான்*
*என்னென்று சொல்லித் திருத்திக் கொள்வேன்?''* (27)

*என்றும்,*

*''குன்றாத ஞானக் கனியை யஞ்ஞானக் கொடும் பசிக்குத்*
*தின்றேக வென்னிலும் ஐவ ரொட்டார்''* (26)

என்றும் திரிகூடராசப்பக் கவிராயர் பாடுகிறார். கடவுள் படைத்துக் காத்துத் துடைப்பவன். அவன் விரும்பினால் அண்டங்கள் எழும், விழும். எல்லா வலிமையும் படைத்தவன்.

*''ஆற்றிற் குமிழியின் தோற்றங்கள் போலண்ட கோடி யெல்லாந்*
*தோற்றிக் கணப்பொழுதே மறைப்பாய்''*

என்று இறைவன் பேராற்றலைப் புகழ்கிறார்.

*''மழை முகம் தேடும் பயிர் முகம் போல் நின்வாய்த்த சங்க*
*குழை முகம் தேடும் என் சிந்தை கண்டாய்''*

என்று புலவர் பெருமான் இறைவன் அருளமுதம் வேண்டி நிற்கின்றார்.

"வானை மறந்திருக்கும் பயிரும் இந்த வையமுழுதுமில்லை
தோழீ!"

என்ற சுப்பிரமணிய பாரதியின் சொற்கள் ஒப்பு நோக்கத் தக்கவை.

பரமாம் நிலத்தை உழுவதெவ்வாறு

வேளாண்மைத் தொழிலில் பயிரிடுவதற்குமுன் நிலத்தை உழுது பண்படுத்த வேண்டும். முதலில் நீர் ஊற்றி ஏர் கொண்டு உழுவதற்கு நிலத்தைப் பதப்படுத்திக் கொள்ள வேண்டும். இடக்குப் பண்ணுத எருதுகள் வேண்டும். கலப்பையை மாட்டி ஆழமாய் உழவேண்டும். பரமாம் நிலத்தை உழுவதற்கும் இவை தேவையென்பது புலவர் பெருமான் கருத்து.

எழுதிண் புவியு நொடிக்கேறுஞ் சிந்தை யெருது
மாங்கோர்
பொழு தென் ஞெரு மடக் கேறி வராது புலன் கலப்பை
பழுதன்றிச் சேர்க்க வல்லேனல்ல ஞன் பரமா நிலத்தில்
உழுதுண்டு வாழ்வ தெவ்வாறே குற்றாலத்
துறைபவனே, (80)

என்பது பாடல். புலன் கலப்பையை மாட்டி அடக்கினு லன்றே பரமாம் நிலத்தை உழலாம். ஆசிரியர் வாழ்க்கை யோடியைந்த கற்பனை வளத்தை இப்பாடல் வழிக்காட்டு கிருர்.

சிவானந்தந் தேன்

இறைவனை நினைத்தாலே ஊன் உருகுகிறது, உள்ளம் உருகுகிறது. மூவர் தேவாரப் பாடல்களும் திருவாசகமும் அதிவீரராம பாண்டியன் கருவையந்தாதிகளும் தெவிட்டாத் தெள்ளமுதம். திரிகூடராசப்பரின் பாடல்களில் சில அவ்வகையைச் சேர்ந்தவை.

''திரையே வரையே
வளியே மறிபுலனே கனலே நெடு வானகமே
ஒளியே பரந்த வெளியே குற்றாலத் துறைபவனே. (77)

என்றும்,

''அலைவாய்ப் படாத தெள்ளாரமுதே துளையாத முத்தே
யுளைவாய்ப் படாத செம்பொன்னே குற்றாலத்
துறைபவனே'' (96)

என்றும்,

''அருட்பெருக்காய்
ஊறுஞ் சிவானந்தத் தேனே குற்றாலத் துறைபவனே''
(28)

என்றும்,

''தொண்டர்
உள்ளை யெல்லாங் கொள்ளை கொண்டாய் குற்றாலத்
துறைபவனே'' (8)

என்றும் திரிகூடராசப்பக் கவிராயர் உளங்கசிந்து பாடுகின்றார்.

பெண்கள் மையலில் ஈடுபட்டிருக்கும் தன்னைக் காத்து அடைக்கலம் தரவேண்டுமென்றும் புலவர் பெருமான் இறைவனை வேண்டுகின்றார். தமக்கு முன்னேயிருந்த பெரியார்கள் கையாண்ட மரபைப் பின்பற்றித் திரிகூடராசப்பரும் பாடுகின்றார். அவரும் ஒருமரபு வழிக் கவிஞரே.

வண்டாடும் பூங்குழல் கண்டாடும் பான்மொழி மாதர்
மயல்
கொண்டாடி நித்த முந் திண்டாடினேன் கொடுங்
கூற்றுதைத்துத்
தண்டா முனியுய்யக் கொண்டாய மரரைத் தாங்கவிட
முண்டாய டைக்கலங் கண்டாய் குற்றாலத் துறைப
வனே. (54)

பழமொழிகள்

அவர் காலத்தே வழக்கிலிருந்த பழமொழிகளைத் தம் பாடல்களிலே திரிகூடராசப்பர் பயன்படுத்தியுள்ளார். மூடரைப் பாடுவது ஊசியின்மேல் நிற்பது போன்றது என்ற கருத்து ஒரு பாடலிலுள்ளது.

*பேசிய வாய்மை யெல்லா முனைப்பேசி யுன் பொருளாம்*
*வாசியை மேற்கொண்டு வாழ்வதல்லாற் கவிவாண*
*ரென்றூற்*
*கூசிய மூடரைப் பாடித் திண்டாடிக் கொடுங்கவியாம்*
*ஊசியின் மேனிற்கப் போமோ குற்றாலத்துறைபவனே.*
(51)

மூடரைப் பாடுவது கவிஞருக்கு விருப்பமில்லை என்ற கருத்தைப் பிறிதோரிடத்திலும் வற்புறுத்துகிறார். நல்லோரைப் பாடுவது புலவர் பெருமானுக்கு உடன்பாடு என்பது பெறப்படுகின்றது. திரிகூடராசப்பர் நூல்களே இதற்குச் சான்று.

பேராசையை உள்ளடக்கிப் பாராசையற்றவன் போல் வேடம் புனைந்து திரியும் நான் பசுத்தோல் போர்த்த புலி என்று மற்றொரு பாடலில் சொல்கின்றார்.

*பேராசைக் கள்ளத்தை யுள்ளே யடக்கிப் பிறருக்கெல்லாம்*
*பாராசை யற்றவர் போற்றிரிவேன் பசுந்தோல் புனைந்து*
*பேராசை கண்ட புலிநான் என்றாசையைப் போக்கு*
*கண்டாய்*
*ஓராசை யுற்ற யோகீ குற்றாலத் துறைபவனே.* (61)

புலியின் தோல் போர்த்துப் பகமேய்வதை உவமையாகக் காட்டுகிறது திருக்குறள் (273). பேராசை கண்டபுலி பசுத்தோல் போர்த்து உலகை ஏமாற்றுகிறது என்று திறமையாகக் கருத்தை புலவர் வெளியிடுகின்றார். நடைமுறையில் வழங்கும் பழமொழி 'பசுத்தோல் போர்த்த புலி' என்பதாகும்.

*திருக்குற்ருல இயற்கைக் காட்சிகள்*

குற்ருலத்தருவி திங்களேயும் ஞாயிற்றையும் காட்டிலும் சிறந்தது. வெண்ணிலாக் கதிர்களேக் கற்றையாய்த் திரட்டி ஓடவிட்டதிலும் வெண்மையுடையது. கதிரவன் வெம்மையை அருவித் திவலேகள் போக்குந் தன்மையுடையன.

*''வெண்ணிலாக் கதிரை*
*பழிக்குந்திரி கூடத் தருவி நன்னீர் பகலோனே வெம்மை*
*ஒழிக்குந் திவலே தெளிக்குங் குற்ருலத் துறைபவனே''*

எனப் பாடுகின்ருர் கவிஞர்.

கோலக்கிளிமொழிப் பெண்கள் இசைவாதுக்கு மன்மதனே யழைப்பது போன்றிருக்கிறது குயில் கூவுவது.

*வாலக்கிளி மொழியார் இசை வாதுக்கு மாரனேப்போ*
*யோலக் கருங்குயில் கூவும் குற்ருலத் துறைபவனே.*

குற்ருல வளத்தை ஒரு கற்பனேப் பாடலில் ஆசிரியர் காட்டுகிருர்.

*குந்தி வெள்வால்*
*முறுக்கிச் சருக்கிக் குதித்து பலாப்பழ மொக்கி விக்கி*
*உறுக்கித் தருக்கி நடிக்கும் குற்ருலத் துறைபவனே.* (44)

பலாப்பழத்தை மொக்கி விக்கியவொரு மந்தியின் நிலே இவ்வாறென்ருல் மற்ருெரு மந்தி மரத்தின் மேலே ஏறும்பொழுது கிளேயில் வடியும் தேனில் வழுக்கிக் கீழே விழுந்து குந்தி நடக்கும்.

*கனி தின்றநட்டி*
*மறுமந்தி மேற் செலத் தேன்பாயும் கொம்பு வழுகி விழுந்*
*துறுமந்தி குந்தி நடிக்குங் குற்ருலத் துறைபவனே.* (45)

கொண்டலுலாவுங் குற்ருலத்தில்,

மலைச் சாரலெல்லாம்
*இருபாலும் முத்தும் கனகமும் வாரியிறைத்து நித்த*
*ஒரு பாலருவி குதி பாயும்.* (47)

அருவித்திரள் இரவிலும் பகல் போலொளி வீசும்.

*இரவிற் பொன்மேடை யெல்லாம்*
*ஒண் பகற் போலொளி வீசும் குற்றாலத் துறைபவனே,*

என்றும் புலவர் பெருமான் பேசுகிறார்.

*தடஞ்சோலை யெல்லாம்*
*சிறையாறு கால்வண்டு பண்பாட மாந்தளிர்ச் செங்கரத்*
*தால்*
*உறையாடும் தேனமு தூட்டும் குற்றாலத் துறைபவனே,*

என்று குற்றாலவளத்தில் தோய்கிறார் கவிஞர்.

'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்று மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்தருளினார். திரிகூட ராசப்பர் இக்கருத்தை வலியுறுத்துவதைத் திருக் குற்றால மாலையில் காணலாம்.

*"தனது பட்டாதிக்கம் போலே தமிழ் கவி சாற்றுவது*
*உனது கட்டாயத் தொழில் காண் குற்றாலத்*
*துறைபவனே"* (93)

*"நித்தர்கள் போற்று நின்றுவணி மூலத்தி னேர்ந்து வந்து*
*முத்தமிழிற் பாடக் கருணை செய்தாண்டனை"* (100)

திருக் குற்றாலமாலை பக்திவாவியில் மலர்ந்த தாமரைப் பூக்களைக் கொண்டு யாத்த மாலையாகும்.

'ஞானப்பொருளே' என்றும் (33) 'ஒடுக்கமும் தோற்ற முமில்லாய்' என்றும் (38) 'ஆசையுற்றுருறவே மெய்ஞ்ஞான நறவே' என்றும் 'மெய்யருட்பாலுண்பார்க்கு ஞானப்

பெருக்கே' (70) 'புரையற்ற தொண்டர் மனத்தேயிருந்து பொருள் விளக்கும் உரையற்ற மோனவுணர்வே' என்றும் (90) பலபட ஏத்துவது எச்சமயத்தினர்க்கும் ஒப்ப உளதாம்.

## (4) திருக்குற்றாலச் சிலேடை வெண்பா

### சிலேடை வெண்பா

திருக்குற்றாலச் சிலேடை வெண்பா காப்புப் பாடல்கள் ஐந்தும் போக நூறு பாடல்கள் கொண்டது.

புதியனவாகத் தோன்றிய பிரபந்த வகைகளில் சிலேடை வெண்பாவும் ஒன்றாகும். இவ்வகைப் பிரபந்தங்கள் சிலேடை யமைதியாலும் இப்பெயர் பெற்றன. மாலை யென்னும் பிரபந்த வகையிலும் ஊர்வெண்பா என்பதன் கீழும் அடக்கிச் சொல்லலாம். சிலேடைகளமைந்த திருவேங்கடமாலை என்ற பெயரும் திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பா, திருக்கழுக் குன்றத்துமாலை என்று சொல்லப் படுவதாலும் காப்புச் செய்யுளில் குற்றாலமாமாலை என்று இந்நூல் குறிக்கப்படுவதாலும் இப்பிரபந்தங்கள் மாலை என்றும் வழங்கப் பெற்றன என்பதை உணர்த்துகின்றன. இத்தகைய சிலேடை வெண்பாக்களில் ஊரின் பெயரை இரண்டாமடி மூன்றாம் சீரில் வைத்து முன் இரண்டடிகளிற் சிலேடையையும் பின் இரண்டடிகளில் திரிபையேனும் மடக்கையேனும் அமைப்பது மரபு. சில பிரபந்தங்களில் முன் ஐம்பது பாடல்களில் சிலேடையைக் கொண்டும் அமைகின்றன. (திருக்குற்றாலச் சிலேடை வெண்பா—உ.வே. சாமிநாதையர் பதிப்பு முகவுரை)

### திருக்குற்றால இயற்கை வனப்பு

திருஞானசம்பந்தரின் திருக்குற்றாலத் திருக்குறும் பலாப் பதிகங்களில் முதலிரண்டடிகளில் குற்றாலத்து இயற்கை எழிலைப் பாடி ஈற்றிரண்டடிகளில் இறைவன் புகழைச் சாற்றுவது போல் இவ் வெண்பாப் பாடல்களில்

தொண்ணூறு பாடல்கள் சிலேடை நயத்துடன் அமைந்துள்ளன. எஞ்சிய பத்துப் பாடல்கள் சிலேடையில்லாதவை. சென்ற தலங்களின் இயற்கைக் காட்சிகளில் ஈடுபட்டுத் திருஞான சம்பந்தர் இறைவனை வழிபட்டார். திருக்குற்றால வனப்புகளை வடித்துள்ள அவருடைய தேவாரப் பதிகங்கள் அனைவரும் விரும்பிப் போற்றும் பாடல்களாகும். திருக்குற்றாலத்துவளர் வேங்கைக் கொம்பார் சோலையில் கோலவண்டுயாழ் செய்யும். நீல நெய்தல் தண்சுனை சூழ்ந்த அச்சோலையில் வண்ண மயில் பேடையொடாடும். குளிர்ந்த சாரலில் வளரும் சிறைவண்டு செல்வழிபாடும். குலைவாழைத் தீங்கனியும் மாங்கனியும் தேன் பிலிற்றும். பசும்பொன் வேய் சூழ்ந்த மலைவாயசும்பும்.

*திருக்குற்றாலச் சிலேடை வெண்பா*

திருக்குற்றாலம் என்றாலே திரிகூடராசப்பக் கவிராயருக்கு இதயம் கசிந்துருகும். திருக்குற்றாலச் சிலேடை வெண்பாக் காப்புச் செய்யுளொன்று அவர் கொண்ட ஈடுபாட்டை விளக்கும்.

*பாவுக் கரசு சண்பை பாலருவாய ருண்டு*
*நாவுக் கரசாரூர் நம்பியுண்டு — கோவுக்குக்*
*கோவை சொன்னானுண்டு நெஞ்சே குற்றால மென்றுமரப்*
*பாவை சொனு லுஞ்சொலுமே பாட்டு*

திருக்குற்றாலமாலை பத்திச்சுவை மிகுந்த பாடல்கள் கொண்டவை. முதலிரண்டடிகளில் தன் குறைவைச் சொல்லி குற்றாலத்தீசன் நிறைவைப் பின்னிரண்டடிகளில் பாடுகிறார். திருக்குற்றாலச் சிலேடை வெண்பாவில் திருஞானசம்பந்தரைப் பின்பற்றி முதலிரண்டடிகளில் சிலேடை நயத்துடன் திருக்குற்றாலக் காட்சி சொல்லி மூன்றாவது நான்காவது அடிகளில் திருக்குற்றாலநாதர் புகழ் பாடுகிறார். சிலேடைப் பொருள் காணப் பிரித்துப் படிப்பதில் சிறிது இடர்ப்பாடு இருந்தாலும் ஒவ்வொரு பாடலிலும் இரு தடவை

கள் குற்றுலம் என்று பிரித்துப் பொருள் கொள்வதில் மன நிறைவு பெறச் செய்கிருர் புலவர் பெருமான்.

கோவும் கோமேதகமும்

*பூமேவு தென் சாரற் புல்லளைந்தும் கல்லளைந்தும்*
*கோமே தகமேயுங் குற்றுலம் — மாமேருச்*
*சிங்கா சநத்திஞன் செய்யகுழைத் துய்யமதிச்*
*சங்கா சநத்திஞன் சார்பு.* (1)

பூமேவு தென்சாரற் புற்களைக் கலந்து (அளைந்து), பசுக் கள் (கோ), மேன்மை பொருந்த (மேதக), மேய்தற் கிட மாகிய (மேயும்) குற்றுலம்; என்றும்

பூமேவு தென்சாரற் கற்களோடு கலந்து (கல்லளைந்து) கோமேதகம் என்னும் மணியை (கோமேதகம்) ஒக்கும் (ஏயும்) குற்றுலம்; என்றும் பொருள் கொள்ள வேண்டும்.

மேருவைச் சிங்காசனமாகக் கொண்ட வெண்மதியை யொத்த சங்கை ஒத்த குழையை (சங்காசம்—ஒப்பு; நத்து—சங்கு) உடையவன் அவனைச் சார்ந்தது குற்றுலம்.

வனமயிலும் வருவிருந்தும்

*வம்பார் வனமயிலு மாறு வருவிருந்தும்*
*கொம்பார் நடந் தழைக்குங் குற்றுலம்.* (6)

புதுமையாக வனமயில் மரக் கொம்பில் இலக்கணம் நிறைந்த கூத்தை மிகச் செய்யும் (கொம்பு ஆர் நடம் தழைக்கும்) குற்றுலம். தவறுது வரும் விருந்தினரை மகளிர் (கொம்பார்) நடந்து சென்று அழைத்து வரும் (நடந்து அழைக்கும்) குற்றுலம்.

வண்டுகளும் மலைச்சிகரங்களும்

இருவகை வண்டுகளான அளியும் சுரும்பும் மோதுத லின்றிச் சேர்ந்து (கூட) மது வருந்துகின்றன குற்றுலத்தில்.

ஆனைகள் விளையாடுதலினால் மலைச்சிகரங்கள் குற்றாலத்தில் வருந்தும் (சுரும்பு-மலை; கூடம்-சிகரம்; கூடம் அது-கூடமானது, சிகரமானது)

*ஆடலளியும் சுரும்பும் ஆனைகளாடும் சுரும்பும்*
*கூட மதுவருந்துங் குற்றாலம்.*

வேலன் வெறியாடும் களத்தில் அழகிய (கோல) முழவென்னும் வாத்தியம் (முழவு) ஒலிக்கும் (இசைக்கும்). வேடர் தினைப்புனத்தை பன்றி (கோலம்) உழுவதற்காக (உழ) வீறு கொண்டு சாடும் (விசைக்கும்).

**வண்டும் மயிலும்**

குற்றாலத்து வண்டும் மயிலும் பாடலிலும் ஆடலிலும் திறத்தைக் காட்டுகின்றன.

*பாடிய பூவண்டினமும் பாவரங்கிற் கார்மயிலும்*
*கோடிய ராகத் திறஞ்செய் குற்றாலம்.* (96)

வண்டினம் வளைந்த வீணையில் (கோடு இயம்) பாணர்களுடைய ராகத் திறமையைக் காட்டும் (ராகத் திறஞ் செய்) குற்றாலம். கார் மயில் பாவரங்கில் கூத்தர் (கோடியர்) உடம்பின் ஆடலின் திறமையை (ஆகத்திறம்) வெளிப்படுத்தும் (செய்யும்) குற்றாலம்.

**திருமகளும் மேருப் பொன்னும்**

திருக்குற்றால மாநகரின் பொன்னங்க மணிமடவாரைக் கண்டு திருமகள் நாணி நிற்பாள். அத்தனை வனப்பும் செல்வமுமுடையவர்கள். மேருமலைப் பொற்சிகரத்தின் முன்பு திருக்குற்றாலக் கோபுரம் அதன் மேலுள்ள ஆணிப் பொன்னால் உயர்ந்து நிற்கும்.

*மாபுரத்து நாரியர்க்கும் மாமேருப் பொன்னுக்கும்*
*கோபுரப் பொன் நாணி நிற்கும்.* (19)

மாபுரத்து நாரியர்க்கு தலைவனாகிய திருமாலின் (கோ) புரம் (உடம்பிலுள்ள) திருமகள் (பொன்) நாணி நிற்பாள் (நாணி நிற்கும்); மாமேருப்பொன்னுக்கு கோபுரத்திலுள்ள பொன் (கோபுரப் பொன்) ஆணித்தங்கமாய் (ஆணி) நிற்கும்.

***கிளியும் வருவிருந்து பார்ப்பவரும்***

திருக்குற்றாலத்தில் தித்திக்கும் தமிழில் மாடக்கிளி பேசும். வருவிருந்து பார்த்து உணவுப் பொருள்களைச் சேகரித்து வைப்பர் குற்றாலத்துப் பெருமக்கள்.

> ***மாடக் கிளியும் வருவிருந்து பார்ப்பவரும்***
> ***கூடத் தமிழ் தீட்டும் குற்றாலம்.***

மாடக்கிளி மிகுதியாக (கூட) தமிழ் எழுதும் (தீட்டும்). அதாவது இனிமையாகப் பேசும். வருவிருந்து பார்ப்பவர் கூடத்தில் (கூடத்து) உணவுப் பொருள்களைத் திரட்டி வைப்பார் (அமிழ்து ஈட்டும்).

***ஐம்பொருட் சிலேடை***

ஒரு வெண்பாவில் ஐம்பொருட் சிலேடையைக் காணலாம். போர்வீரர் தோள்தட்டி அம்பு எய்வர். கூத்தை நிகழ்த்துபவர் வாத்தியங்களைக் கொட்டிக் கொண்டு வருவர். ஓடை தன் நீர்ப்பரப்பிலே கொட்டிக் பூவையும் காட்டும். கொல்லன் கையில் அடிபட்டு உருப்பெற்ற வாள் நெய்பூசப் பட்டு நெய்தலைக் காட்டும். துகில் நெய்தற்றொழிலைக் காட்டும்.

> ***ஒட்டினருங் கூத்தினரும் ஓடையும் வாளும் துகிலும்***
> ***கொட்டி னெய்தலைக்காட்டுங் குற்றாலம்.*** (39)

1. ஒட்டினர்—சபதஞ் செய்த போர்வீரர்; கொட்டி—தோள் கொட்டி, எய்தலை-அம்பு எய்தலை, காட்டும்.
2. கூத்தினர், கொட்டின்-கொட்டுதலோடு, எய்தலை-வருதலை, காட்டும்.

3. ஓடை, கொட்டின்-கொட்டிப் பூவோடு, நெய்தலையும்-நெய்தற் பூவையும், காட்டும்.

4. வாள், கொட்டி-கொல்லனால் அடிக்கப்பட்டு, நெய்-நெய் பூசும் பொழுது, தலைக்கு-தலையை, ஆட்டும்-

5. துகில், கொட்டி-பாவாக இருக்கும் பொழுது அடிக்கப் பட்டு நெய்தலை-நெய்தற்றொழிலை, காட்டும்.

*யானை தன் கை நீட்டும்*

குற்றாலத்தில் மலைமேல் திரியும் யானை வானத்தை நோக்கித் துதிக்கையை நீட்டவும் சந்திரனும் சூரியனும் ராகு வந்துவிட்டதோ என்று ஐயுறும்.

*தாளசலங் கை நிமிர்ப்பத் தண்சுடரும் வெஞ்சுடரும்*
*கோளரவ மென்றயிர்க்குங் குற்றாலம் — நீளரவம்*
*ஆர்க்கும் மறைச் சிலம்பா ராடருவி பொன்றாரை*
*வார்க்கு மறைச் சிலம்பார் வாழ்வு.*

*[தாளசலம்—யானை.]*

*குன்றின் மேல் விளக்கு*

வானத்தில் பகலவன் மாளிகைக்கு மேல் வந்துவிட்டான். குன்றின் மேலிட்ட விளக்காய் அவன் ஒளி வீசுகிறான். தேனருவிக்குரியவரும் செண்பகாரணியத்தை யுடைய வரும் அருவமாய் நிற்பவருமான இறைவன் காப்பாராக.

*மன்றத்தின் மாளி கைமேல் வானிரவி வந்தேறிக்*
*குன்றத்தின் மேல் விளக்காங் குற்றாலம் — பொன்றத்தும்*
*தேனாருவியார் தெய்வமலர்ச் செண்பகப்பூங்*
*கானா ருவியார் காப்பு.*

(அருவியார்-அருவத்தையுடையவர்.)

*பரமபத வீடு திறக்குந் திறவுகோல்*

இன்னொரு வெண்பாவில் புலவர் பெருமான் பரமபத வீட்டைத் திறந்து உட்செல்ல ஒரு திறவுகோல் இருப்பதைப்

பற்றிச் சொல்கிருர். வடவருவிக் குற்ருலமே அத்திறவு கோல்.

வேதாகமங்களின் தலைவராகிய சிவபெருமான் சம்பந்தர் வாக்கால் எலும்பைப் பெண்ணுகச் செய்தார். அவர் வாழுமிடம் குற்ருலம்.

*மேலாம் பரமபத வீடு திறக்குந் திறவு*
*கோலாம் வடவருவிக் குற்ருலம் — நூலாதி*
*வேதாக மந்திரிப்பார் வெள்ளெலும்பைப் பிள்ளை சொல்லால்*
*மாதாக மந்திரிப்பார் வாழ்வு.* (50)

மலைமேலிருந்து விழும் குற்ருலத்தருவி எதிரே ஆகாய கங்கையைக் கண்டு கை கொட்டும். கொன்றை மாலை சூடியவர்—பிறை சூடியவர்-பாண்டியன் பிரம்பால் அடிபட்டவர் அடியார்களுக்கு மிகவும் நெருங்கியவர். அவர் சேருமிடம் குற்ருலம்.

ஒரு வெண்பாவில் குற்ருலம் இந்திரனுகும் என்கிருர் திரிகூடராசப்பர். இந்திரனிடம் கற்பகத்தரு உண்டு. இரு நிதிகள் உண்டு; கண்கள் பலவுடையவன்; வேள்விக்குரியவன்; அவனிடம் காமதேனு இருக்கிறது. குற்ருலத்தில் சோலைகள் இருக்கின்றன. இருநிதி படைத்தது. பலாமரம் இருக்கின்றது தல விருட்சமாக. குற்ருலத்தில் வேள்விகள் நடைபெறுகின்றன. தலைமையான இடமாகும்.

காவால்-கற்பகத்தரு, சோலைகளிருப்பதாலும், இரு நிதியால்-சங்க நிதி பதும நிதி என்னும் இரண்டு நிதிகளாலும், கண் பலவால்-கண்கள் பல இருப்பதாலும், கருதப் படுகின்ற பலாமரத்தாலும், வேள்விகளால்-வேள்விக் குரியவனுதலாலும், வேள்விகள் நடப்பதனுலும், கோவால்-காமதேனுவாலும் அல்லது வச்சிராயுதத்தாலும், தலைமையாலும் குற்ருலம் இந்திரனுகும் என்று சொற் பந்தல் போடுகிருர் கவிஞர் பெருமான்.

*காவாலிரு நிதியாற் கண்பலவால் வேள்விகளாற்*
*கோவாற் புரந்தரனுங் குற்றாலம்.* (70)

### அம்பு படாவில்

குற்றாலத்தில் மேகங்கள் அங்குமிங்கும் அலையும். மலைச் சிகரங்களில் சென்றொதுங்கும். திடீரெனச் சாரல் வலுக்கும். வெறிக்கும். கார்மேகக் கீற்று ஒன்றைக் கிழித்துக் கொண்டு பகலவன் கதிர்கள் பாயும். வானிலே இந்திரவில் தோன்றும். திருக்குற்றாலத்தில் பார்த்துப் பழகிய காட்சி இது. வானவில் அம்பு படா வில்லன்றோ! வண்டுகள் சுவைக்காத மலரும் திருக்குற்றாலத்திலுண்டு. செண்பகப் பூவை வண்டுகள் அடைவதில்லை. மரங்களின் கிளைகள் பட்டுப் போகாது (படா). நிலையின்மை உண்டாகா. காய்க்கும் குறும்பலா மரத்தையுடையவர் திருக்குற்றாலநாதர். வினை படாமல் அருட்போர்வையைத் தருபவர் உறையும் கோயில் திருக் குற்றாலம்.

*அம்புபடா வில்லு மளிபடாப் பூமலரும்*
*கொம்புபடாச் சோலையுஞ்சூழ் குற்றாலம்— வம்புபடாப்*
*போதுபடா மாத்தருவார் போர்வினை படாமலருள்*
*மீதுபடா மாத்தருவார் வீடு.* (90)

(வம்புபடா-நிலையின்மை இல்லாத; போதுபடா-அரும்பாது; மா தருவார்-பெரிய குறும்பலாவினர்; அருள் மீது-மேலே போர்த்திக் கொள்ளும், படாமா-'போர்'வையாக, தருவார்-தருபவர். படாம்-போர்வை)

### சேல் விழியும் வானரமும்

திருக்குற்றாலச் சிலேடை வெண்பா ஒன்றில் புலவர் பெருமான் புலமையும் கற்பனையும் சிறகடித்துப் பறக்கின்றன. வெகு அரிதாகக் காணப்படும் சொல்லோவியங்களில் ஒன்று.

*செப்புக் குவிமுலையார் சேல்விழியும் வானரமும்*
*கொப்புக் குழைதாவுங் குற்றாலம்.*

மாதர் வாட்டங்கண் காதில் அணிந்திருக்கும் கொப்புவை நோக்கித்தாவும். வானரமும் கொம்புக்குக் கொப்பு தாவும்.

*யமகங்கள்*

திருக்குற்றாலச் சிலேடை வெண்பாவில் மூன்று செய்யுட்களில் (10,27,92) முன் இரண்டடிகளில் யகமமும் ஆறு செய்யுட்களில் (9,25,31,38,82,86) பின் இரண்டடிகளில் யமகமும் நான்கு செய்யுட்களில் (6,44,66,97) பின் இரண்டடிகளில் மடக்கும் அமைந்துள்ளன. (திருக்குற்றாலச் சிலேடை வெண்பா-உ. வே. சாமிநாதையர் பதிப்பு முகவுரை).

*கோளரியாஞ் சென்மவினைக் கோட்டானை மேற்பாயும்*
*கோளரியாந் தெள்ளருவிக் குற்றாலம்.* (10)

குற்றம் பொருந்திய பிறவிக்குக் காரணமான கொம்பையுடைய யானையின் மேல் தெளிந்த அருவியாகிய சிங்கம் பாய்கின்ற குற்றாலம். (கோள் அரி-குற்றம் பொருந்திய; கோளரி-சிங்கம்) குற்றாலத் தருவி வெண்மையாயிருப்பதால் சிங்கமாக உருவதும் செய்யப்பட்டது.

நீண்ட கொம்பையுடைய மலைகளைப் போன்ற கடாக் களிறுகள் விளையாடுகின்ற சிகரங்களின்மேல் கொம்புகளை யுடைய வரையாடுகளும் ஏறும். குற்றாலத்து உயர் மாடங்களில் சிவந்த உத்திராட நட்சத்திரம் ஒளிகாலும்.

*கோட்டு வரையாடி வருங் கூடமிசை மாடமிசைக்*
*கோட்டு வரையாடி வருங் குற்றாலம்.* (92)

[கோட்டுவரை-கொம்பையுடைய மலைகளைப் போன்ற யானைகள்; ஆடி வரும்-விளையாடுகின்ற; கூடம்-சிகரம்; கோட்டு வரையாடு-கொம்பையுடைய வரையாடு; இவரும்-ஏறும்.]

இறைவன் மாதொருபால் உடையவன். இடப்பங்கு அம்மையினுடையது. தம்படிவத்தோடு (உருவத்தோடு)

கண்டம் கறுத்தார் நாரியை இடப்பாகம் வைத்தார். மூன்னாள், சினந்து (கோபங் கொடு-கோபம் கொண்டு) தக்கனைக் கண்டு அவன் தலையை அங்கு அறுத்தெறிந்தார். கண்டு அங்கு அறுத்தார்-அங்கு கண்டு கொய்தார்).

தம் படிவப்
பங்கொடுகண் டங்கறுத்தார் பண்டுதக்கன் சென்னி
யைக்கோ
பங்கொடுகண் டங்கறுத்தார் பற்று. (31)

சிவபெருமான் தேவருய்ய நஞ்சையுண்டார். எனவே கண்டம் கறுத்தது. அவர் தாழம்பூவையும் அணிவதில்லை.

அண்டருய்யக்
கண்டங்கார் பூத்திருந்தார் கற்பிலாக் கேதகையின்
கண்டங்கார் பூத்திருந்தார் காப்பு.

(கற்பிலா-அறிவில்லாத; கேதகையின் கண் தங்கு-தாழையின் கீழேயுள்ள;பூ-தாழம் பூவை;திருந்தார்-அணியார்).

## (5) திருக்குற்றாலப் பரம்பொருள்மாலை

### இறைவனும் இயற்கை எழிலும்

திருக்குற்றாலப் பரம் பொருள் மாலை திருக்குற்றால நாதரைப் போற்றிப் பாடிய பாடல்களாகும். காப்புப் பாடல் போக முப்பத்தொரு பாடல்கள் ஈற்றடியில் 'குற்றாலப்பரம் பொருளே' என்று முடிகின்றன.

வரையார் முக்கூடமும் தேனாறுஞ் சண்பகமா நதியும்
திரையொரு பொங்கு கடற்றிருவேணியுஞ் சிற்பொதுவும்
விரையார் குழல்மொழிபாகமும் வெள்வளை வீதியுடன்
பரைபீடக் கோயிலுங் கொண்டாய் குற்றாலப் பரம்
பொருளே. (15)

திரிகூடராசப்பர் திருக்குற்றாலத்து இயற்கை எழிலையும் இறைவனையும் இணைத்தே பாடுவார்.

*திருவளர் சன்னதியுந் திரிகூடச் சிகரமும் தண்*
*அருவியும் சண்பகக் கோதை தன்பாகத் தருளும்*
*பெற்றேன்* (1)

என்று இறும்பூ தெய்துகிறார்.

*கோடி நிதான தனமென்று மேகங் குழலதென்று*
*நீடிய கூர்விழி வேலென்று பேசிநிலை திரிந்தேன்.* (6)

எனவே அருள் பாலிக்கவேண்டும் என இறைவனை இறைஞ்சுகின்றார்.

காலன் தூதரையனுப்பும் பொழுது சிவகணங்களை அனுப்பித்தரவேண்டுகிறார் கவிஞர்.

*அஞ்சாது தென்புலத் தூதர் வரவென தப்பனன்றே*
*நெஞ்சாற் றொழுதுன்னை வாழ்த்தல் செய்வேனந்த*
*நேரத்திலே*
*மஞ்சார் குழலி மணாளா கணங்கள் வரவிடுப்பாய்*
*பஞ்சாக்கரப் பொருளானாய் குற்றாலப் பரம்பொருளே.* (27)

அருணகிரிநாதர் கந்தரனுபூதியில்,

*கார்மாமிசை காலன்வரிற் கலபத்*
*தேர் மாமிசை வந்தெதிரப் படுவாய்*

என்று பாடுவதை இப்பாடல் நினைப்பூட்டுகிறது.

*பதிபசு பாசப் பரம்பொருள்*

திரிகூடநாதர் பாடல்களிற் சிலவற்றில் தத்துவமும் பக்தியும் இணைந்திருக்கக் காணலாம்.

*ஆசையு மாசை யிலாதது மேகன னேகனுமாய்த்*
*தேசுறுந் தேகியும் தேகமுமாகிய சிற் சொரூபாம்*
*மாசுறு மென்னையுந் தேசாக்கி யானந்த வாழ்வருள்வாய்*
*பாசம் பசு பதியாவாய் குற்றாலப் பரம்பொருளே* (17)

*ஆதலு மானதைக் காத்தலுங் காத்து தழித்தது நீ*
*ஈதலு மீந்ததை யேற்பது நீ ........* (24)

சைவ சித்தாந்தத்தில் ஆசிரியர் அழுத்தமான பற்றுக் கொண்டவர் என்பதும் தெரிகின்றது.

திருக்குற்ருலப் பரம்பொருள் மாலையிலும் 'நாத் தழும் பேறும் படி திருநாமத்தை நன் மனதாய்த்தோத்திரஞ்' செய்கின்ருர் திரிகூடராசப்பர்.

## (6) திருக்குற்ருலநாதருலா

*உலாக்காண வந்த பெண்கள்*

தொண்ணூற்ருறு வகைப் பிரபந்தங்களுள் உலா ஒன்ருகும். தாம் வழிபடும் கடவுள் மீதும் தம்மை யாதரித்த அரசர்கள் மீதும் புலவர்கள் உலாப் பாடினர். சேரமான் பெருமாள் நாயனுர் திருவாய் மலர்ந்தருளிய ஆதியுலாவும் ஒட்டக் கூத்தரியற்றிய மூவருலாவும் எடுத்துக் காட்டாகும்.

திரிகூட ராசப்பர் தாம் வழிபடும் தெய்வமாகிய திருக்குற்ருல நாதர் மீது திருக்குற்ருல நாதருலாப் பாடினுர். பிற உலாக்களில் பவனி காணவரும் பெண்கள் மானிடர். திருக்குற்ருல நாதருலாவில் மானிடப் பெண்கள் மட்டுமல்லாமல் பிறமகளிரும் வந்தனர் என்ற புது முறையை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

*நாதத் திரிகூட நாயகன் வந்தானென்று*
*சீதத் திருச் சின்னம் சேவிப்பப்—பேதையரும்*
*நாகப் பெதும்பையரும் ஞாலத்து மங்கையரும்*
*மாகத்திலுள்ள மடந்தையரும்—போகத்தர்*
*பூமியரிவையரும் பூநீர்த் தெரிவையரும்*
*காமருவு பேரிளம் பெண் கன்னியரும்,*

(கண்ணிகள் 157-159)

உலாக்காண வந்தனர்.

*அகத்தியர் தென்திசை வருகை*

இமையவரனைவரும் சிவபெருமான் திருமணத்தைக் காணக் கூடிவிடவே வடதிசை தாழ்ந்து தென்திசை உயர்ந்தது. இறைவன் அகத்தியரைத் தென்திசை செல்லப் பணித்தசர்.

யாரிடத்தும்
போற்று பர நாமதிகம் புங்கவர்க்கு நீயதிகம்
சாற்று மூவாறிற் றமிழதிகம்—ஏற்ற
தலங்களிற் குற்ருலத் தலமதிகம் நான்கும்
துலங்கிஞலன்ருே தென்பால் துலங்கும்,

(கண்ணிகள் 24-25)

என்று சிவபெருமான் போதத் தமிழ் முனி நீ போதுகெனச் சொன்ஞர். 'ஆரிய முதலிய பதினெண்பாடையில்' என்று கம்பனும் (கம்பரா. கிட்கிந்தா. பம்பாநதிப்படலம்) இருபதாம் நூற்ருண்டுத் தமிழ்க் கவிஞர் சுப்பிரமணிய பாரதி, 'செப்பு மொழி பதினெட்டுடையாள்—எனிற் சிந்தனையொன்று டையாள்' என்று சொல்வதும்' ஒப்பு நோக்கத்தக்கவை.

திருமாலைச் சிவமாக்கல்

திருக்குற்ருலம் வந்த அகத்தியர் திருமால் உருவைச் சிவலிங்கமாக மாற்றிப் பூசித்தார் என்று உலாவில் சொல்லப் படுகிறது. நெடிய திருமாலை அகத்தியர்.

ஆடகவிற்
செங்கரா தேவா திகம்பரா வேதாந்தா
சங்கரா சம்பூ சதானந்தா—பொங்கரவா
குற்ருல நாதா குறுகு குறுகென்று
பொற்ருளிணைக் குறுகி

(கண்ணிகள் 55-56)

சிவமாக்கிப் போற்றிஞர்.

மடந்தை யாழ் வாசித்தாள்

மடந்தை யாழ் வாசித்ததை ஆசிரியர் இவ்வுலாவிற் சொல்வது அவரது இசையறிவைக் காட்டும். திருக்குற்ருலக் குறவஞ்சியில் பல்லவி, அனுபல்லவி, சரணம் என்று பாடல் களை இயற்றியிருப்பதும் அவைகளுக்குரிய இராகத்தையும் தாளத்தையும் காட்டியிருப்பதும் சங்கீத மூர்த்திகள் என்று

சொல்லப்படுபவர்கள் காலத்துக்கு முன்பே தமிழ் நாட்டில் இசை உயர்ந்த நிலையிலிருந்த தென்பதற்குச் சான்றாகும்.

*தம்புரு மீட்டிச் சரமண் டலமிழற்றி*
*வம்புருவக் கின்னரியாழ் வாசித்துப்—பைம்பொன்*
*மகரயாழ் வாங்கியொரு மாடகமே றிட்டுப்*
*பகருந் திவவு வலிபார்த்துச் - சகரமுதல்*
*ஏழும் பொருந்திநரம் பேழுந் திருத்தியொலி*
*ஏழும் வகுத்தவிசை யேழிலே—சூழுவித்து*
*மந்தர மத்திம தாரம் வகை மூன்றும்*
*தந்தர மாகத் தரம் பிரித்து—முந்து*
*விரலுங் கனைமிடறு மெல்லிதழும் வீணைக்*
*குரலுங் குரலுமொன்றாய்க் கூட்டி—முரலும்*
*துவர்வாயுங் கண்டமுஞ் சூழ்விரலு மன்றி*
*அவயவங்க ளொன்று மசையாமற்—கவுட*
*மலகிரி தோடி வராடி முகாரி*
*கலியாணி யாகிரி காந்தாரி—பொலிவான*
*கொல்லி சவுராட்டங் குச்சரி காம்போதி*
*வல்லபெரு நாட்டை வயிரவி—வெல்லுமிசைப்*
*பூவாள மோகனம் பொங்கு சங்க ராபரணம்*
*தேவகாந் தாரி செயசாட்சி—மாவசந்தம்*
*மாளவி சாயரி மற்றுமுள்ள ராகமெல்லாம்*
*தாள விதமதுர சாரமாய்க்—காளவிடப்*
*பாம்புஞ் செவிதாழ்ப்பப் பட்டமர முந்தளிர்ப்பச்*
*சேம்புங் கருவேம்புந் தேன்பிலிற்ற - கோம்பியும்*
*சோப மயிலுந் துயில் பயிலப் பைங்கிளியும்*
*கோபப் பருந்துமொரு கூட்டுறையத்—தாபரமும்*
*சிந்திரமு நின்றுருகத் தேவரமு தென்று வப்பப்*
*பத்துபெற வொத்து தழீப் பாடினாள்.*

(கண்ணிகள் 366 – 378)

பக்தியை ஊடிழையாகக் கொண்டு யமகம், திரிபு, சிலேடை, மடக்கு, முரண், எண்ணணி, சொல்லணி என்று

பல அழகுகள் நிரம்பிச் சொற்சுவை பொருட்சுவையுடன் இந் நூல் திகழ்கின்றது. அணிவகைகள், இசைக் கருவிகள், மரங்கள், மலர்கள், மலைகள், பறவைகள், மகளிர் விளையாட்டுக்கள் எனப் பல துறைகள் பற்றி ஆசிரியர் இந்நூலிலும் சொல்லி ஒரு செய்திக் கதம்பமாய் விளங்குகிறார் என்று சொல்ல வேண்டியதில்லை.

## III

### *திரிகூடராசப்பரின் இலக்கியக் கொள்கைகள்*

திரிகூடராசப்பர் நூல்களில் அந்தாதிகள் இரண்டு, வெண்பா மூன்று, பிள்ளைத் தமிழ் ஒன்று, உலா ஒன்று, தலபுராணம் ஒன்று, குறவஞ்சி ஒன்று, கோவை ஒன்று, மாலை நான்கு, ஊடல் ஒன்று. அந்தாதிகளில் ஒன்று யமக வந்தாதி, மற்றொன்று வெண்பாவந்தாதி. அச்சேறிய நூல்கள் ஒன்பதில் குறவஞ்சி, தலபுராணம், உலா ஆகியவைகளை ஒரு கூறுகவும், சிலேடை வெண்பா, மாலை, பரம்பொருள் மாலை, யமகவந்தாதி ஆகியவைகளை இரண்டாவது கூறுகவும் பிரிக்கலாம். கோவை மூன்றாவது பிரிவில் அடங்கும். மீதி நூல்கள் கிடைக்கவில்லை. குறவஞ்சியும் தலபுராணமும் உலாவும் தனித்தனியான அமைப்பு என்றாலும் இம்மூன்று நூல்களிலும் திருக்குற்றாலநாதர் கோயில் பற்றிய விவரங்கள் கிடைக்கின்றன. குறவஞ்சி நடிப்பதற்கென்று எழுதப்பட்டதால் எளிய நடையில் உள்ளது. திருக்குற்றாலத்தல புராணம் இலக்கிய நயம் மிகுந்ததென்றாலும் வெகு எளிய நடையில் உள்ளது என்று சொல்ல முடியாது. உலாவும் அவ்வாறே. திருக்குற்றால மாலையும் திருக்குற்றாலப்பரம் பொருள் மாலையும் பத்திச்சுவை நிரம்பிய இனிய பாடல்கள். எளிதில் புரிந்து கொள்ளக் கூடியவை. சிலேடை வெண்பாப் பாடல்களைப் புரிந்துகொள்ளச் சிறிது உழைப்பு வேண்டும். இப்பாடல்கள் குற்றாலக் காட்சிகளை ஓவியங்களாய்க் கண்முன் கொண்டு வந்து நிறுத்தும்.

**அடிப்படைக் கொள்கைகள்**

திரிகூடராசப்பக் கவிராயர் மரபுவழிப் புலவர். அவருடைய நூல்கள், திருக்குற்ருலம், அதனின்றும் பிரிக்க முடியாத இயற்கை வனப்பு, அங்கு கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் திரிகூடநாதர், சைவம் என்ற நான்கு தூண்களின் மேலெழுந்தவை. திரிகூடராசப்பர் நூல்களனைத்தும் தெய்வத் தொடர்புடைய நூல்கள். திருக்குற்ருலநாதரை அல்லது அவர் இடப்பாகத்தமர்ந்திருக்கும் குழல்வாய் மொழியம்மையைப் பாடுபவை. திருக்குற்ருலத்தை விடுத்து வேறு தலத்தைப் பற்றிய நூல்களை அவர் எழுதாதது அவர் கொண்ட கொள்கையாகும். திருக்குற்ருலம் என்று வாய் ஓயாது சொல்லி அதன் காட்சிகளில் நெஞ்சைப்பறிகொடுத்து அத்தலத்தில் எழுந்தருளிய இறைவனை ஏத்தி ஆசிரியர் மனமகிழ்கின்ருர். இம்மூன்றில் எதையும் கைவிட முடியாது. சிவனைப்பற்றி எழுகின்ற பாடலோ நூலோ சைவத்தைத் தவிர்க்க முடியாது. எனவே சைவத்தைப் போற்றுவதும் ஆசிரியருடைய கொள்கையாகும். ''மேதகு சீர்ச் சைவ நெறி வேத நெறி தழைத்தோங்க'' (தலபுராணம், கடவுள் வாழ்த்து, 21) என்றும் ''வேத நெறியும் சைவ நெறியுந் தழைக்க'' (தலபுராணம், நூற்பயனுரைத்தசருக்கம், 68) என்றும் ''தானவர் குலாந்தகனைச் சைவ நெறி வைதிகத்தின் தாய் போல்வானை'' (தலபுராணம், திருமால் சிவ பிராஞன சருக்கம்) என்றும் சொல்வதால் பெறப்படும். 'சாற்றுந் தமிழ் பெருகச் சைவ நெறி பெருக' என்றும் (உலா, கண்ணி 58) ''தெய்வ நெறி வளரத் திங்கள் மும்மாரிபெய்யச் சைவ சமயந்தழைத்தேற'' என்றும் (உலா, கண்ணி 555) சொல்கின்ருர். சைவத்தைப் போற்றுபவர் என்ருலும் பிற சமயத்தைப் பழிப்பவரல்லர்.

*மூவர் பெருமான் மொழியு மறுசமயத்*
*தேவர் பெருமான் சிவபெருமான்,*

(உலா கண்ணி 67)

என்று சொன்ஞலும் சமணர்களை ஏற்றுக்கொள்ள மறுக்கிருர்,

*"சைவர் மேலிடச் சமணர் கீழிடச்
சகல சமய மேற்கவே,"*

என்று குறவஞ்சியில் கூறுகிருர்.

சைவத்தில் மாருத பற்றுடையவர் என்பதற்குப் பொது வாகச் சிவன் பற்றிய கதைகளைத் தம் நூல்களில் குறிப்பிட்டாலும் சிறப்பாகத் தமிழ் நாட்டுப் புராணங்களாகிய திருவிளையாடற் புராணம், திருத்தொண்டர் புரணம் என்பவைகளிற் காணும் பல கதைகளைத் தம் நூல்களில் உரைக்கின்ருர்.

*வடமொழிச் சொற்கள் ஆட்சி*

வடமொழிச் சொற்களைக் கையாளத் திரிகூடராசப்பர் தயங்குவதில்லை. குற்ருலத் தலபுராணத்தில் வடமொழிச் சொற்களைத் தாராளமாகக் கையாண்டுள்ளார். குற்ருலக் குறவஞ்சியிலும் பத்திச்சுவை நிரம்பிய திருக்குற்ருல மாலையிலும் பரம்பொருள் மாலையிலும் வடமொழிச் சொற்கள் மிகுதியில்லை. வடமொழிச் சொற்கள் குறைவாகப் பயன்படுத்தப் பட்ட ஆசிரியருடைய பாடல்கள் சிறந்தவைகளாக விளங்குகின்றன என்பதில் ஐயமில்லை. அதுவும் இயற்கைக் காட்சிகளை எடுத்துரைக்கும் பகுதிகளில் வடமொழிச் சொற்கள் மிகக் குறைவு.

*ஆறெலாங் குதிக்கும் வாளை யலையெலாங் கொழிக்குஞ் செம்பொன்*
*சேறெலா முழக்குமேதி செய்யெலா முகிழ்க்கு நீல*
*நாறெலாம் வளர்க்கும் பூந்தேன் நாடெலாம் வளர்க்குஞ் செங்கோல்*
*சாறெலாம் வளர்க்கும் வீதி தமிழெலாம் வளர்க்கு மன்றம்,*

(தலபுரா. நாட்டுச் சருக்கம் 45)

என்ற பாடல் எடுத்துக்காட்டு.

**நடை**

பண்டிதர்களும் பாமரர்களும் ஒருங்கே புரிந்து கொள்ளக் கூடிய எளிய நடையில் திரிகூடராசப்பர் எழுதவல்லவர். குறவஞ்சிப் பாடல்கள் எடுத்துக்காட்டாகும். அதே போழ்து இலக்கிய நயம் நிரம்பியவைகளாகும். யமகம், திரிபு, சிலேடை என்பவை மலிந்து கிடக்கும் பாடல்களையும் எழு தக்கூடியவர் என்பதை அவருடைய நூல்களிற் காணலாம். நடையில் எளிமையும் கடுமையும் இவர்க்கு உடன்பாடே

**காலத்தின் தாக்கம்**

ஆசிரியர் தம் காலத்தில் திருக்குற்றலப் பகுதியில் வாழ்ந்த மக்களை உற்று நோக்கியவர். அங்குள்ள வயல்கள், குளங்கள், மக்களணியும் ஆபரணங்கள், அவர் பேசிய சொற்கள், கோயிற் பூசை விவரங்கள், திருவிழாக்கள், கோயிலுக்குத் திருப்பணி செய்தவர்கள் என்பவை பற்றியெல் லாம் ஆசிரியர் சொல்வது தம் கால நிலவரத்தைப் பிற்காலத் தவர் அறிந்து கொள்ளவேண்டுமென்பதற்காகவே. வரலாற் றுக் கண் கொண்டு தம் நூல்களை திரிகூடராசப்பர் ஆக்கினர் என்பது தெள்ளத் தெளியப் புலனுகின்றது.

**சொல்லாட்சி**

சொல்லாராய்ச்சி செய்ய விரும்புவோர்க்கு திரிகூடராசப் பர் நூல்கள் பெரிதும் பயன்படும். குறவஞ்சியில் காணப் படும் சொற்கள் இன்றும் குற்றலப் பகுதியில் வழக்கில் உள்ளன. விண்ணுணம் என்ற சொல் மருட்சி தருவது என்ற பொருளில் வழங்குகிறது. காசலை என்ருல் ஆத்திரம். 'சுறுக்கில்வா' என்ருல் 'விரைவில் வா' என்று பொருள். 'நாணயம்' என்ற சொல் ஒழுங்கு அல்லது நாகரிகம் என்ற பொருளில் பேசப்படுகிறது. திருவாங்கூர் என்று இன்று நாம் சொல்வதைத் திருவாங்கோடு என்று ஆசிரியர் சொல்கிருர். 'ட'வை நாவில் தவழவிடுவதில் அல்லலுற்ற ஐரோப்பியர் கள் 'ர'வை அதனிடத்தில் நிரப்பினுர்கள். கள்ளிமேடு என்

பதை கலிமேர் (Calimere) என்றும் தரங்கம்பாடி என்பதை டிராங்கிபார் (Tranquebar) என்னும் திருவாங்கோடு என்பதை திருவாங்கோர் (Travancore) என்றும் ஐரோப்பியர்கள் சொன்னுர்கள். 'நாறும் பூக் குற்ருலச்சங்கு' என்ற ஒரு பெயர் குறவஞ்சியில் வருகிறது. 'சங்கரன்' என்பது சங்கு என்று நெல்லைச் சீமையில் மருவி வழங்கும் பெயர். 'நாறும் பூக்குற்ருலச் சங்கு' என்பதற்கு 'மணம் வீசுகின்ற மலர்கள் நிறைந்த குற்ருலத்துப் பெருமான்' என்று பொருள். சுருக்கமாக 'நாறும் பூ நாதன்' என்று இன்றும் அப்பகுதியில் பெயர் தரித்தவர் உண்டு.

செய்யப்படுவது செய்யுளாகும். இக்காலத்தில் பெரும்பாலும் 'கவிதை' என்ற சொல் கையாளப்படுகிறது. 'கவி' என்பது புலவனையும் 'கவிதை' என்பது செய்யுளையும் குறிக்கின்றன. 'கவி' என்ற சொல்லுக்குக் குரங்கு என்றும் பொருள் கொள்வதுண்டு. 'கபி' என்ற வடமொழிச் சொல் தமிழில் 'கவி' என்றுதானே வழங்கப்படவேண்டும். திரிகூடராசர் தம்முடைய நூல்களில் செய்யுளைக் குறிக்கக் கையாளும் சொற்களை நோக்கலாம். 'பாடல்' என்ற சொல்லை ஆசிரியர் பல இடங்களில் கையாள்கிருர். 'மொழி கொண்ட மூவர் திருப்பாடல்' (திருக்குற்ருல மாலை, 1) என்று தேவாரத்தைக் குறிக்கின்ருர்: வேண்டாத பாடலை அவப் பாடலென்றும் இறைவனைப் பாடுபவைகளை சிவப்பாடலென்றும் தெய்வப் பாடலென்றும் மறைத் தவப் பாடலென்றும் திரிகூடராசப்பர் சொல்கின்ருர்.

*அவப் பாடல் பாடியலைவது நீரவனுதினமும்*
*சிவப் பாடல் பாடித் தெளிவ தென்ருே தெய்வப் பாடல் மறைத்*
*தவப் பாடல் காட்டு நற்ருருடையாய் கொன்றைத் தாருடையாய்*
*உவப் பான்தன் மாமன் றுடையாய் குற்ருலத் துறைபவனே.*

(திருக்குற்ருலமாலை, 46)

'முத்தமிழ் பாடக் கருணை செய்தாய்' (தி.கு.மா. 100) என்றும் ஆசிரியர் சொல்கின்றார். இறைவன் 'செஞ்சொற் பன்னென்று சொன்னபடி' செய்தாரென்றும் உரைக்கின்றார். (தி.கு.மா. 27) 'உன்னைத் தனது பட்டாதிக்கம் போலே தமிழ்க் கவி சாற்றுவது உனது கட்டாயத் தொழில்' என்றும் பாடுகின்றார். (தி.கு.மா. 93) எனவே 'செஞ்சொல்' என்பதற்கும் 'கவி' என்பதற்கும் பாடல் என்றும் :பொருள் கொள்ளலாம். திருக்குற்றால நாதருலா காப்புச் செய்யுளில் 'பாமேவு பாரதியார் சொற்கலைகள்' என்று சொல்கின்றார். 'பா' என்பது பாக்களையும் 'சொற்கலைகள்' என்பது சொற்களாலமைந்த கலைகள் என்பதையும் குறிக்கும் என்று கொள்ளலாம். 'அக் கவிகள் பேசுவித்தார்' என்று அதே நூலிலுள்ள மற்றொரு காப்புச் செய்யுளில் சொல்கிறார். 'கவிகள்' என்பது இங்கு பாடல்களைச் சுட்டுகின்றன. 'தமிழ் இயல் காட்டும் பாடலந்தாதி' என்று திருக்குற்றால யமக வந்தாதிக் காப்புச் செய்யுளில் வருகிறது. 'பாவுக்கரசு' என்று திருஞான சம்பந்தரைத் திருக்குற்றாலச் சிலேடை வெண்பாக் காப்புச் செய்யுளில் குறிப்பிடுகின்றார். 'குற்றாலமென்று மரப்பாவை சொனலுஞ் சொலுமே பாட்டு' என்று அதே காப்புச் செய்யுளில் குறிக்கிறார். இங்கு பாட்டு என்பதுவும் பாடலைக் குறிக்கிறது. 'முன் மூவர் கவிமாலை சூடினை கோத்தடியேன் பாமாலையும் புனை' என்று திருக்குற்றாலப் பரம்பொருள் மாலையில் உரைக்கிறார். இங்கு, 'கவி', 'பா' என்ற இரண்டு சொற்களையும் ஒரே பொருளில் கையாள்கிறார்.

'பாவினிற் பயனிற் சொல்லிற் பண்ணினிற் பயிலுந்
தோறும்
நாவினுக் கினியதான நகரினைப் பகர்தல் செய்வாம்',
(திருக் குற்றாலத்தலபுராணம் – திருநாட்டுச் சருக்கம் 53)

என்பதில் 'பா' என்பது பாட்டைக் குறிக்கும். எனவே திரிகூட நாதர் நூல்களில் பா, பாடல், பாட்டு என்பவை களை ஒரு பொருட் கிளவி எனக் கொள்ளலாம். 'கவி' என்ற வடமொழிச் சொல்லையும் அதே பொருளில் வழங்குகிறார்.

ஓரோவழி 'சொல்' என்பது ஆகுபெயராய்ப் பாடலைக் குறிக்கிறது. 'செய்யுள்' என்ற சொல்லாட்சி இல்லை போலும்.

'சொல்' என்பது சொல்லப்படுவதாகும். சொல்லப்படும் சொற்கள் வேறுபட்ட பொருள்களில் பயன்படுத்தப்படுகின்றன. திரிகூடநாதர் பயன் படுத்தியுள்ள சொற்களாவன: அறை, இசை, இயம்பு, உரை, கழறு, கூறு, செப்பு, சொல், நவில், பகர், புகல், பேசு, விளம்பு.

## பிற்சேர்க்கை

### 1. திருக்குற்றாலக் குறவஞ்சியில் கிடைக்கும் தகவல்

***அணிகள்***

கடகம்
குன்றிவடம்
கைவளை
சவடி
சிலம்பு
சூடகம்
தண்டை
தோள்வளை
நெளிவு
முத்தாரம்
முதாரி
மூக்குத்தி
மோதிரம்

***இராகங்கள்***

அடாணா
ஆகிரி
எதுகுலகாம்போதி
கல்யாணி
காம்போதி
கேதாரகௌளம்
சௌராஷ்டம்
தர்பார்
தன்னியாசி
தோடி
நாதநாமக்கிரியை
நீலாம்புரி
பந்துவராளி
பயிரவி
பிலகரி
பியாகடை
புன்னாகவராளி
முகாரி
ஸ்ரீராகம்

***குறிகள்***

களவு
காமித்தகுறி
கைம்மயக்கம்
திட்டிதோஷம்
மாலையும் மணமும்
வரப்பெறுங்குறி

***தாளங்கள்***

அடதாளம்
ஆதிதாளம்

ஏகதாளம்
சம்பை
சாப்பு
மிசுரதாளம்
ரூபக தாளம்

*தெய்வங்கள்*

அருட் சொரி முத்து
ஆரியங்காவன்
எக்கலாதேவி
கணபதி
கறுப்பன்
காலவைரவன்
காளி
குழல்வாய் மொழியம்மை
குறும்பலாவுடையார்
சக்கதேவி
சரசுவதி
நான்முகன்
திரிகூடநாதர்
திருமால்
துர்க்கை
பன்றிமாடன்
பிடாரி
முருகன்
வள்ளிநாயகி
வன்னியராயன்

*பறவைகள்*

அன்னம்
ஆந்தை
உள்ளான்
ஊர்க்குருவி
கம்புள்
கரிக்குருவி
காடை
கானுங்கோழி
கிள்ளை
குருகு
கூழைக்கடா
கொக்கு
கொண்டைக் குலாத்தி
சகோரம்
சிட்டு
தாரா
நாகாணவாய்ச்சி
நாரை
பஞ்சவர்ணக்கிளி
மயில்
மரங்கொத்தி
மாடப்புறு
மீன் கொத்தி
வக்கா
வவ்வால்
வலியான்
வெள்ளைப் புறு

*மலைகள்*

கயிலைமலை
கொல்லிமலை
சயிலைமலை
சாமிமலை
திரிகூடமலை
தென்மலை
நாஞ்சி நாட்டு
வேள்விமலை
பழனிமலை
விந்தைமலை

*பழமொழிகள்*

1. மாமியாரிள் மகள் மேல் கண்ணும் பகுத்திமேல் கையு மான பான்மை போல்,

2. செடிக்கொரு வளையம் போட்டுத் தேடு.
3. கடல் பெருகித் தரிகொள்ளாதபோது கரை குறுக்கிட்டாற்போல்
4. வவ்வால் பறக்க மரநாயகப்பட்ட வைபவமாச்சுது.
5. வெட்ட வெளியிலே கோடிப் பாம்பாடுமோ?
6. சந்தேகமோ? உன் தலைப்பேனைக்கேள்.
7. தாயைக் கற்பித்த மகள் போல்.

## 2. குறவஞ்சிமேட்டுத் தாமிரசாஸனம்

சாலிவாகன சகாப்தம் 1640க்குச் செல்லா நின்ற கொல்லம் 891-ஷு தை மீ 11உ ராஜமானிய ராஜஸ்ரீ முத்துவிஜய ரெங்க சொக்கநாத நாயக்கரவர்களோம் திருக்குத்தாலம் ராஜப்பன் கவிராஜருக்குப் பொறுப்புப் பட்டயம் எழுதிக் கொடுத்தபடி சுவாமி திருக்குத்தால நாத சுவாமி பேரில் குறவஞ்சி நாடகம் பாடி அரங்கேத்தினதற்கு மேலச் செண்பகக் காலில் கருப்புக்கட்டி ஊத்து மேட்டில் கல் உ-ல் சங்கில் அளவு ஹீ 37-யும் 52-யும் விட்டுக் கொடுத்தபடியினாலே பொறுப்பு ஷு க-க்கு தீர்வை வீதம் குடுத்து கையாடிக் கொண்டு சன்னதி பிரபந்த வித்துவானாக நடந்து வருவாராகவும் இந்த நிலத்துக்கு வேறே வரி நாட்டுச் சிலவு காவல் கூலி போர் நெல் குடுக்கத் தேவையில்லை யென்று கட்டளையிட்ட படியினாலே இந்த படிக்குக் கையாடிக் கொள்ளவும்.

(கையொப்பம் தெலுங்கில்) ஸ்ரீ ராம ஜெயம்

3. பயன் படுத்தப்பட்ட
திரிகூடராசப்பக் கவிராயர் நூல்கள்

1. திருக்குற்ருலக் குறவஞ்சி—மு.ரா. அருணுசலக் கவிராயர் அரும்பதவுரையுடன், 1927.
2. திருக்குற்ருலத் தலபுராணம்— ஷை
3. திருக்குற்ருலநாதருலா – பதிப்பாசிரியர் : L. ஸ்ரீநிவாச ஐயர், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம் 1955.
4. திருக்குற்ருல யமக அந்தாதி திருக்குற்ருல நாதசுவாமி கோயில் வெளியீடு. 1954.
5. திருக்குற்ருலநாதர் உலா ,,
6. திருக்குற்ருலச் சிலேடை வெண்பா ,,
7. திருக்குற்ருலப் பரம் பொருள் மாலை ,,
8. திருக்குற்ருலக் கோவை. ,,
9. திருக்குற்ருலமாலை—மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடு, 1921.
10. திருக்குற்ருலமாலை—பதிப்பாசிரியர் T. S. P. சுப்பிரமணியபிள்ளை, திருநெல்வேலிப் பாலம். 1912.
11. திருக்குற்ருலச் சிலேடை வெண்பா—பதிப்பாசிரியர் மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர். 1940.

# தேனுந்தும் ஆனந்த மாநடம்

ஆண்டுதோறும் மார்கழித் திங்கள் திருவாதிரை நாளன்று தென்னாட்டுச் சிவன் கோயில்களில் தெற்கு நோக்கியிருக்கும் நடராஜர் உலா வருவார். சிறப்பாகத் தில்லைச் சிற்றம்பலத்தில் நடமிடும் கூத்தப்பெருமானை உலகெங்கணும் உலா வரச் செய்த பெருமை ஒருவருக் குண்டு. அவர்தான் கலாயோகி ஆனந்த குமாரசாமி. ஜே.எம். நல்லசாமிப் பிள்ளையை ஆசிரியராகக் கொண்ட 'சித்தாந்த தீபிகா' வின் 1912 ஆம் ஆண்டு ஜூலைமாத இதழில் ஆனந்த குமாரசாமியின் சிவபெருமான் திருநடனம் என்ற ஆங்கிலக் கட்டுரை வெளிவந்தது. மற்றையக் கட்டு ரைகளுடன் அந்தக் கட்டுரையையும் உள்ளடக்கி அதே பெயருடன் நியூயார்க்கிலிருந்து ஆனந்த குமாரசாமியின் கட்டுரைத் தொகுதியொன்று 1917 ஆம் ஆண்டு நூலாக வெளிவந்தது. 'சிவபெருமான் திருநடனம்' என்ற கட்டுரை அவருக்குப் பொன்றுப் புகழ் தேடித் தந்தது. 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்ற குறள் மொழிக்கேற்ப அவர் புகழ் ஓங்கி உலகப் பேரறிஞர்களில் ஒருவராக அவர் இன்று விளங்குகிறார்.

தனது எழுபது ஆண்டுக்கால வாழ்வில் ஆனந்த குமார சாமி ஐந்நூறுக்கும் மேற்பட்ட கட்டுரைகளையும் பல நூல் களையும் ஆங்கிலத்தில் எழுதினார். 'சிவபெருமான் திரு நடன'மும் ஆங்கில நூலே. இதேதலைப்புள்ள கட்டுரையை,

''தேன்புக்க தண்பணை சூழ் தில்லைச் சிற்றம்பலத்துத்
தான் புக்கு நட்டம் பயிலுமது என்னேடீ?''

என்ற திருவாசகத்துத் திருச்சாழல் வரிகளுடன் தொடங்கு கிறார். ''சிவபெருமான் ஆடல்கள் எல்லாவற்றிலும் பொதிந் துள்ள ஆழமான கருத்து ஒன்றேயாகும். அதுவே இறைவன் பேராற்றலை வெளிப்படுத்துவது'', என்கிறார் குமாரசாமி. மூன்று வகை நடனங்களை அவர் குறிப்பிடுகிறார். அவையாவன : மாலை நடனம், தாண்டவ நடனம், நாதாந்த நடனம். அவற்றுள் மாலை நடனம் அல்லது அந்தி நிருத்தம் பற்றி அவர் எழுதுகிறார்.

''பிற்காலத்தில் சிவனுடன் ஒன்றி விட்ட ஆரியர் காலத்துக்கு முந்திய மலைக்கடவுளைப் போற்றிக் கடுமை யாகவும் சற்றே வெறியுடன் ஆடியவர்களின் மனங்களில் சிவபெருமான் நடனத்தின் மிக நுண்ணிய தத்துவார்த்த விளக்கம் குடிகொண்டிருந்தது என்று நான் சொல்ல வரவில்லை. சமயம் அல்லது கலையின் ஒரு சிறந்த உட்பொருள் அல்லது சின்னம் மக்களனைவர்க்கும் உடைமை யாகி விடுகிறது. தத்தம் இதயங்களில் மக்கள் எந்தக் கருவூலத்தைப் போற்றிப் பேணி வந்தார்களோ அதை அவர் களுக்குத் தந்தது. சிவபெருமான் நடனம் பற்றிய தொடக்கம் எவ்வாறிருப்பினும் காலப்போக்கில் அது கடவுளின் தொழிலைப் பிரதிபலிக்கும் பிம்பமாயிற்று. சிவபெருமானின் பல நடனங்களுள் நான் இங்கு குறிப் பிடுவது மூன்றைப் பற்றி மட்டுமே. அவற்றுள் ஒன்றே சிறப்பாக விளக்கத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

''இமயமலையில் பரமன் ஆடும் அந்தி நடம் பற்றி 'சிவப்பிரதோஷஸ் தோத்திரம்' வர்ணிப்பதாவது :

'மணிகளாலிழைக்கப்பட்ட பொற் சிம்மாசனத்தில் மூவு லகங்களுக்கும் தாயான தேவியை இருத்தி, திருக்கயிலா யத்தின் உச்சிகளிலே சூலபாணி ஆடுகின்றான். அமரர்கள்

அவனைச் சூழ்ந்து நிற்கின்றனர். கலைமகள் வீணையை இசைக்கின்ருள்; இந்திரன் குழலூதுகின்ருன்; நான்முகன் பாணி கொட்டுகின்ருன்; திருமகள் ஒரு பாடலைத் தொடங்குகிருள்; திருமால் மத்தளம் கொட்டுகின்ருன். அந்தி வேளையில் தெய்வத் திருநடனத்தைக் கண்டு களிக்கவும் ஒருங்கே சேர்ந்து ஒலிக்கும் இசையைச் செவிமடுத்தின்புறவும் கந்தர்வர்கள், யக்ஷர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள், அமரர்கள், அப்சரசுகள், இன்னும் மூவுலகவாசிகளும் வந்து கூடுகின்றனர்.' இவ்வந்தி நிருத்தம் 'கதா சரித சாகரத்துக்கு முன்னுள்ள இறை வணக்கத்திலும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.''

'சிவபெருமானின் தாண்டவம் வைரவனுகவும் வீரபத்திரனுகவும் உள்ள அவனுடைய தாமச குணத்தைக் காட்டுகிறது', என்றும் ஆனந்த குமாரசாமி சொல்கிருர். அரங்கமாய்ப் பேய்க் காட்டில் பித்தவேடம் கொண்டு பெருமான் ஆடுகின்ருன். தேவியுடன் கணங்களும் பேய்களும் சேர்ந்தாட இடு சுடு காட்டிலும் ஆடுகிருன். மூன்ருவதான நடராஜனின் நாதாந்த நட்டம் தில்லைப் பொன்னம்பலத்தில் நிகழ்கிறது. கோயிற் புராணத்தில் இது விவரிக்கப்படுகிறது.

கோயிற் புராணக் கதைக்கும் நடனத்தின் உட் பொருளுக்கும் தொடர்பேதும் இல்லை. சிவபெருமான் பிட்சாடன வடிவம் கொண்டு விஷ்ணுவை மோகினி வடிவம் கொள்ளச் செய்து தாருகாவனத்தில் பிச்சையேற்ருர். முனிவர்கள் மோகினியைக் கண்டு மோகிக்கப் பன்னியர்கள் சிவபெருமானைக் கண்டு மோகித்தார்கள். அஃதறிந்த முனிவர்கள் சினந்து சிவபெருமான் மீது பல சாபங்களிட அவை பலிக்கவில்லை. அதன்பின் முனிவர்கள் தீ வளர்த்தார்கள். சிவபெருமான், குண்டத்தக்கினியினின்றும் முதற்கண் வந்த புலியைப் பிடித்துரித்துத் தோலை உடுத்துக் கொண்டார். பின்பு எழுந்த பாம்பைப் பிடித்துக் கழுத்தில் மாலையாக அணிந்து கொண்டார். பின்பு தோன்றி வந்த முயலகன்

மீது பாய்ந்து அதன் முதுகு நெரியும்படி அதன் மேலே வலப் பாதத்தினாலே மிதித்துக் கொண்டார். தேவரும் முனிவரும் காண சிவபெருமான் ஆடலானார். விஷ்ணுவிடமிருந்து இதைத் தெரிந்து கொண்ட ஆதிசேஷன் மீண்டும் அவ் வாடலைத் தனக்குக் காட்டியருளவேண்டுமென்று சிவபெரு மானை வேண்டித் தவம் செய்யவே, பெருமானும் அண்ட மையமான தில்லையில் அவனுக்குக் காட்டியருளுவதாக வரம் தந்தார்.

தில்லையிலாடிய சிவபெருமானின் அவ்வாடலே தென் னிந்தியாவிலுள்ள கூத்துக்குத் தலைவனான நடராஜனின் செம்புத் திருமேனிகளுக்குக் கருப்பொருளாகிறது. இவ்வுரு வங்களில் சின்னஞ்சிறு வேறுபாடிருந்தாலும், அவையனைத் தும் ஒரே அடிப்படை நோக்கத்துடன் எழுந்தவை. இவ் வுருவங்கள் ஆடுஞ் சிவனை நான்கு கைகளுடனும் மின்னார் செஞ்சடையுடனும் கற்றைச் சடையின் அடிப்பாகங்கள் பரந்தாடவும் அமைந்துள்ளன. தலையின் மேல் சீறும் பாம்பும் மண்டையோடும், கங்கையும் காணப்படுகின்றன. முடியின் மேல் பிறை நிலாவையும் கொன்றைமாலையையும் காணலாம். வலது காதில் குண்டலமும் இடது காதில்தோடும் அணிந்துள்ளார். அவரது உடை மேல் துடைகளைச் சுற்றி இறுகியுள்ள கால் சட்டையாகும். இடுப்பிலிருந்து மேலாடை பறக்கிறது. பூணூல் மார்பர், மேலேயுள்ள வலது கையில் துடியும் இடது கையில் தீயும் பிடித்துள்ளார். கீழேயுள்ள வலதுகை 'அஞ்சேல்' என்று அபயம் அளிக்கிறது. இடது கை நல்ல பாம்பைப் பிடித்துள்ள குறளன் முயலகனை நோக்கியுளது. இடது கால் தூக்கிய திருவடியாகும். தாமரைப் பீடத்தின் மேல் முயலகன் முதுகை ஒடித்துத் திருவடியை ஊன்றியுள்ளார் பெருமான். பீடத்தின் இடது பக்கமிருந்து சுடர்களுள்ள திருவாசி ஆடும் கூத்தனைச் சுற்றி எழும்பிப் பீடத்தின் வலது பக்கத்தில் வந்து சேர்கிறது. திருவாசி துடியும் அனலும் ஏந்திய கைகளைத் தொட்டுச் செல்கிறது. நடராஜத் திருமேனிகள் பல அளவுகளிலிருந்

தாலும் மொத்த உயரத்தில் நாலடிக்கு மேற்பட்டவை இல்லை யெனலாம்.

இலக்கியத்தின் உதவியின்றியே இந்த நடனத்துக்குப் பொருள் கூறுவது கடினமன்று. எனினும் நாட்டியத்தைப் பற்றி மட்டுமல்லாமல் அதன் உட்பொருளையும் விளக்கும் இலக்கியம் ஏராளம். ''சைவர்கள் அறிந்து கொண்டபடி நாதாந்த நட்டத்தின் பொருள் யாது?'' என்று கேட்டுக் கொண்டு ஆனந்த குமாரசாமி சைவ இலக்கியங்களிலிருந்து மேற்கோள்கள் காட்டுகிறார்.

*''காட்ட அனல் போல் உடல் கலந்து உயிரையெல்லாம்*
*ஆட்டுவிக்கும் நட்டுவன் நம்மண்ணலை வெண்ணுப்,''*

என்பது போன்று நூல்களில் இறைவனுடைய நடனத் தின் உட்பொருளைக் காணலாம். இறைவனுடைய ஆடல் அவன் செய்யும் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல், என்ற ஐந்தொழில்களைக் குறிக் கின்றன. இவை பிரமன், விஷ்ணு, ருத்திரன், மகேசு வரன், சதாசிவன் என்போர் ஒருவர்க் கொன்றாய்த் தனித் தனியே செய்யும் தொழில்களுமாகும்.

நடனத்தின் மையக்கருத்து இறைவனுடைய தொழி லாகும். ஆடும் சிவன் உறுப்புக்கள் உணர்த்தும் உட்பொருள் யாது? 'உண்மை விளக்க'த்தின் பாடலொன்றிலிருந்து விளக்கம் பெறலாம்.

*தோற்றம் துடியதனில் தோயுந் திதியமைப்பில்*
*சாற்றிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமா*
*ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி*
*நான்ற மலர்ப்பதத்தே நாடு.*

நாலாவது கை ஆன்மாவுக்கு அடைக்கலம் தரும் தூக்கிய திருவடியை நோக்கியுளது என்பது திருமேனியைப் பார்ப் பவர்க்குத் தெரியும்.

சிதம்பர மும்மணிக்கோவை ஐந்தொழில்கள் பற்றி இயம்புகிறது.

*பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்*
*நாமநீர் வைப்பில் நாநிலே வளாகமும்*
*ஏனைய புவனமு மெண்ணிங் குயிரும்*
*தானே வகுத்ததுன் தமருகக் கரமே.*
*தனித்தன வகுத்த சராசரப் பகுதி*
*அனைத்தையுங் காப்பதுன் னமைத்தகைத் தலமே.*
*தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலும்*
*மாற்றுவ தாரமு லமைத்த தோர் கரமே.*
*ஈட்டிய வினைப்பய னெவற்றையு மறைத்துநின்*
*றூட்டுவ தாகுநின் னூன்றிய பதமே.*
*அடுத்த வின்னுயிர்கட் களவில்பே ரின்பங்*
*கொடுப்பது முதல்வ நின் குஞ்சித பதமே.*

திருமூலர் திருமந்திரத்தின் ஒன்பதாவது தந்திரத்தி லுள்ள திருக்கூத்துத் தரிசனப் பாடல்கள் மையக் கருத்தை மேலும் விளக்கமாக எடுத்துச்சொல்கின்றன.

*எங்குந் திருமேனி எங்குஞ் சிவசத்தி*
*எங்குஞ் சிதம்பரம் எங்குந் திருநட்டம்*
*எங்குஞ் சிவமாயிருத்தலால் எங்கெங்குந்*
*தங்குஞ் சிவனருட்டன் விளையாட்டதே.*

*ஆனநடமைந் தகள சகளத்தர்*
*ஆனநடமாடி ஐங் கருமத்தாக*
*ஆனதொழில ருளாலேந் தொழிற் செய்தே*
*தேன் மொழிபாகன் றிருநட மாடுமே.*

*காளியோ டாடிக் கனகா சலத்தாடிக்*
*கூளியோ டாடிக் குவலயத்தே யாடி*
*நீடிய நீர் தீ கால் நீள் வானிடை யாடி*
*நாளுற வம்பலத்தே யாடு நாதனே.*

*தீமுதலைந்துந் திசையெட்டுங் கீழ்மேலும்*
*ஆயு மறிவினுக் கப்புற மானந்த*
*மாயை மாமாயை கடந்து நின்றார் காண*
*நாய னின்று நடஞ் செய்யு மாறே.*

*சத்திவடிவு சகல வானந்தமு*
*மொத்த வானந்த முமையவள் மேனியாஞ்*
*சத்தி வடிவு சகளத் தெழுந் திரண்*
*டொத்த வானந்த மொரு நடமாமே.*

*ஆகாசமா முடலங்கார் முயலகன்*
*ஏகா சமாந் திசையெட்டுந் திருக்கைகள்*
*மோகாய முக்கண்கள் மூன்றொளி தானாக*
*மாகாய மன்றுள் நடஞ் செய்கின்றானே.*

இதுவே இறைவனது ஆடல். நம்சிந்தையை அரங்க மாய்க் கொண்டு நம்முள் ஆடுகின்றான் கூத்தப்பெருமான். இவ்வரிய கருத்தை மனத்துட் கொண்டால் ஆடலின் ஆழ்ந்த பொருள் விளங்கும். அங்கிங்கெனாதபடி கடவுள் எங்கும் உளர். அதே போலத்தான் சிந்தையும். இன்னொரு திருமந்திரப் பாடல்.

*ஆடியகாலும் அதிற்சிலம் போசையும்*
*பாடிய பாட்டும் பலவான நட்டமும்*
*கூடிய கோலங் குருபரன் கொண்டாடத்*
*தேடியுளே கண்டு தீர்ந்தற்ற வாறே.*

இதைக் குறிக்கோளாகக் கொண்டு அவனைத் தவிர பிற எண்ணங்களை வெளியேற்றி, நம்முள் உறைந்து அவன் நடம்செய்ய வழி செய்ய வேண்டும். உண்மை விளக்கத்தில் ஒரு பாடல்.

*மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்*
*தானந்த மானிடத்தே தங்கியிடும் — ஆனந்தம்*
*மொண்டருந்தி நின்றாடல் காணு மருள் மூர்த்தியாய்க்*
*கொண்ட திருவம் பலத்தான் கூத்து.*

திருமந்திரத்தில் காணும் 'மோனந்த மாமுனிவர்' என்ற குறிப்புடன் திருமூலர்பெருமானின் திருவாக்கை ஒப்பிட்டுப் பார்க்கவும்.

*இருந்தார் சிவமாகி யெங்குந் தாமாகி*
*இருந்தார் சிவன் செயலியாவையு நோக்கி*
*இருந்தார் முக்காலத் தியல்பைக் குறித்தங்கு*
*இருந்தாரிழவு தெய்திய சோம்பே.*

*சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே*
*சோம்பர் கிடப்பது சுத்த வெளியிலே*
*சோம்பர் உணர்வது சுருதி முடிந்திடம்*
*சோம்பர் கண்டார்ச் சுருதிக்கட் டுக்கமே.*

அழித்தல் சிவனுடைய தொழில். எனவே சுடுகாடு அவன் விரும்பி உறையும் இடம். எதை அழிக்கிருன் இறைவன்? ஒவ்வொரு ஊழிக்காலத்தின் முடிவிலும் வானம், வையம் இவைகளை மட்டும் அவன் துடைக்கவில்லை. ஒவ்வொரு ஆன்மாவையும் பற்றிய விலங்குகளையும் உடைத் தெறிகிருன். நம்முடைய ஊன் உடம்புகளை எரிக்கும் சுடு காடல்ல அவ்விடம். பாழாகித் தரிசாய்க் கிடக்கும் அவனடி யார்களின் இதயமே அது. நானென்ற புலேச்செருக்குத் துடைக்கப்படுவதை அது குறிக்கிறது. அங்கு மாயையும் வினைகளும் எரிந்து சாம்பலாகின்றன. அந்தச் சுடுகாட்டில் நடராஜன் ஆடுகின்ருன். எனவே சுடலேயாடி என்ற பெய ரையும் கொள்கின்ருன். இந்த உவமையில் நடராஜனுக அவன் ஆடும் திருக்கூத்தையும் சுடுகாட்டுப் பூதமாய் அவன் நிகழ்த்தும் வெறியாடலேயும் இணைக்கும் வரலாற்றுத் தொடர்பை கண்டுகொள்ளலாம்.

இறைவனைத் தாயாகக் காணும் வங்காளத்து சாக்தர் களிடையும் நடனம் பற்றிய இக்கருத்து நிலவுகிறது. துற வால் துப்புரவு செய்து நெருப்பைக் கொண்டு தூய்மைப் படுத்திக் காளி ஆடுகிருள். வங்காள மொழிப் பாடலொன்று இதைச் சுட்டுகிறது.

*சுடுகாட்டை விரும்பும் உனக்காகச்*
*சுடுகாடாக்கினேன் என் இதயத்தை.*
*கரியவளே! மயானக் காடுறைவாய்!*
*அரிய ஊழிக் கூத்தை ஆடுக ஆடுகவே!*
*தாயே! தரிசாக்கி வைத்தேன் இதயத்தை!*
*ஓயாது எரிகின்றது ஓங்கும் சுடலைத் தீ;*
*செத்தவரின் சாம்பர் சிதறிக் கிடக்கும்*
*நத்தி உனக்காக நான் காத்து வைத்தேன்.*
*மரணத்தை வென்ற மாகாலன் நின்னடிக்கீழ்*
*வருவாய் வருவாய் நான் காண*
*பண்கெழுமப் பாடியும் ஆடியும்*
*கண் மூடி உன்னைக் கண்டு களித்திடவே.*

தமிழ் நூல்களில் சிவபெருமானுடைய ஆடலின் நோக்கம் விளக்கப்படுகிறது. சிவஞான சித்தியாரிலுள்ள பாடலொன்று இறைவன் ஆடலை விளக்குகிறது.

*உலகமே உருவ மாக யோனிகள் உறுப்பதாக*
*இலகுபே ரிச்சா ஞானக் கிரியையுட் கரணமாக*
*அலகிலா உயிர்ப்பு லன்கட் கறிவினை யாக்கி ஐந்து*
*நலமிகு தொழில்க ளோடும் நாடகம் நடிப்பன் நாதன்.*

உண்மை விளக்கப் பாடல்கள் அறிவுறுத்துவதாவது :

*மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலம்*
*சாய அமுக்கி அருள் தானெடுத்து - நேயத்தால்*
*ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்*
*தானெந்தை யார் பாதம் தான்.* (36)

*கருணையுருக் கொண்டாடல்*
*பேணுமவர்க் குண்டோ பிறப்பு* (38)

இறைவன் திருவிளையாடல்களினால் உலகம் இயங்குகிறது என்று சைவத் திருமுறைகள் கூறும். ஓவற நட்டம் புரிவது அவன் விளையாட்டு. ஸ்கிரியாபின் என்பவருடைய ஆனந்தப் பெருக்கெடுத்தோடும் பாடல் ஒன்று சிவபெரு

மான் ஆடலை எத்துணை அழகாய் எடுத்தியம்புகிறது: இந்துக்கலை விளைஞன் வடித்த சிலையே ஸ்கிரியாபின் எழுதிய கவிதை.

*விளையாட்டில் விருப்பம் கொண்ட பேரான்மாவுக்கு*
*(புருஷன்)*
*அனைத்தையும் படைப்பது ஒருபிள்ளை விளையாட்டு.*
*(யோக மாயை)*

*அன்பெனும் பேரானந்தம் அவன் அடைக்கலம்.*
*அவன் படைத்த பூங்காவின் மலர்களை (பிரகிருதி)*
*அவன் நுகர்ந்து அங்கேயே கிடக்கிறான்.*
*அவற்றின் அழகில் மயங்கியவன்*
*சாடுகிறான், கும்மாளமிடுகிறான், கூத்தாடுகிறான்.*
*குதித்துக் குதித்து விளையாடுகிறான்.*
*தளைகளில்லா இத்தெய்விக அன்புப் போராட்டத்தில்*
*விளையாட்டில் (லீலை)*
*அவனுக்கு எல்லாம் இன்ப மயம்,*
*குறியேதுமில்லா உயரிய மாட்சியில்—*
*ஈதிரும் புதிருமான ஆசைகளின் சேர்க்கையில்—*
*உணர்வில் மட்டுமே, அன்பில் மட்டுமே*
*பேரான்மா அவனுடைய தெய்விகக் குணத்தை*
*அறிகிறான் (சுபாவம்).*

*என் உலகே' வாழ்வே, மலர்ந்த மலரே, பேரின்பமே!'*
*முன்பு வாழ்ந்த வடிவங்களனைத்தையும் மறுத்து*
*உன்னுடைய ஒவ்வொரு விநாடியையும் நான்*
*உண்டாக்குகிறேன்*

*என்றென்றைக்கும் நான் 'அல்ல'வன் (நேதிநேதி)*
*இந்த நடனத்தைக் கண்டு களித்து, இச்சூறுவளியில்*
*மூச்சுத் திணறி*
*இம்மகிழ்ச்சி அரங்கில் அவன் மாயமாய்ப் பறக்கிறான்.*
*ஓயாத இம்மாற்றத்தில் (சம்சாரம், நித்ய பாவம்)*
*குறியொன்றுமில்லா இத் தெய்விக ஓட்டத்தில்*
*பேரான்மா தன்னை உணர்ந்து கொள்கிறான்.*

நெஞ்சுரத்தில் தனிமையாகத் தலையில்லாது,
இடைவிடாது படைத்துக் கொண்டும்,
ஒளிக் கற்றைகளை வாரியிறைத்தும்,
உயிருட்டிக் கொண்டும்,
பல்லுருவம் பெயர்த்துத் திருவிளையாடல் செய்தும்,
அவன் தன்னை யறிந்தவன்.
என்னுலகே, நீ கற்பித்த நான் உன்னுள் உறைபவன்,
நான் இயங்கத் தொடங்கி விட்டேன்.
இப்பொழுது அனைத்தும் நீயே
விடுதலையின்—பேரானந்தத்தின் அலையாவாய் நீ!
பெரும் புரட்சியில் (மகா பிரளயம்) அண்டம் அழிகிறது
பேரான்மா இயக்குகிறான்.
கட்டுக் கடங்காத் தெய்விக சக்திக்கு முடிவே
யில்லை யென அவன் உணர்கிறான்.
துணிவெல்லாம் அவனே.
அச்சுறுத்தியது இப்பொழுது எழுச்சி.
திகிலூட்டியது இப்பொழுது மகிழ்ச்சி.
'நான் இருக்கிறேன்' என்ற உவகைக்குரல்
அண்ட மெங்கும் எதிரொலிக்கிறது.

"மானிடர்கள் கண்டு களிக்குமாறு ஆடுபவர்களைப் போலச் சிவபெருமானும் ஆடுகிறான் என்ற வாதம் எழுப்பப் படுகிறது. ஆனால் அண்டத்தில் உயிர்களை வாழ்விக்கவும் அவனடியை அடைய விரும்புவோர்க்கு விடுதலையளிக்கவும் இறைவன் ஆடுகிறான் என்பது அதற்கு விடையாகும். மானிடர்கள் நாட்டியத்தை நாம் சரிவர உணர்ந்து கொண்டால் அதுவும் விடுதலை உணர்ச்சியைக் கொடுக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். இறைவன் ஆடுவது அவன் விருப்பத்தைப் பொறுத்தது. அவன் காட்டும் முத்திரைகளும் அவ்வாறே. அவனுக்கு அவை தானாகவே தோன்றியவை. ஒன்று கருதி எழுந்தவையல்ல. இறைவன் பெறுபவன் என்ற நிலைக்கு அப்பாற்பட்டவன்", என்று ஆனந்த குமாரசாமி எழுதுகிறார்.

ஒரு தலையாகச் சிவபெருமான் நடனம் சிவயநம என்ற பஞ்சாட்சரம் அல்லது ஐந்தெழுத்துடன் இணைக்கப்படுகிறது சிவயநம என்பதற்குச் சிவனுக்கு வணக்கம் என்பது பொருள். பஞ்சாட்சரம் பற்றிய உண்மை விளக்கப் பாடல் கள்.

*ஈசன் அருள் எழிலார் திரோதமலம்*
*ஆசில் எழுத் தஞ்சின் அடைவாம் (40)*

*அண்ணல் முதலா அழகார் எழுத்தைந்தும்*
*எண்ணில் இராப் பகலற் றின்பத்தே — நண்ணி*
*அருளானது சிவத்தே யாக்கும் அணுவை*
*இருளானது தீர இன்று. (42)*

உண்மை விளக்கத்தின் மற்றொரு பாடல் திருவாசியைப் பற்றி விளக்கம் அளிக்கிறது.

*ஓங்காரமே நல் திருவாசி உற்றதனில்*
*நீங்கா எழுத்தே நிறைசுடராம் — ஆங்காரம்*
*அற்றார் அறிவர் அணி அம்பலத்தான் ஆடலிது*
*பெற்றார் பிறப்பற்றார் பின்.*

திருவாசியைப் பற்றித் திருவருட்பயனில் காணப்படும் விளக்கம் இயற்கையுடன் இயைந்ததாயுள்ளது என்பது குமாரசாமியின் கருத்து.

*ஊன நடனம் ஒருபால் ஒருபாலாம்*
*ஞான நடம் தான் நடுவே நாடு.*

திருவாசி இயற்கை அல்லது பிரகிருதியைச் குறிக்கிறது. உள்ளடங்கிய ஒளி ஆடும் கூத்தன். திருவாசியைத் தொடும் முடியும் கைகளும் திருவடிகளும் அண்டங்களைத் தினும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனை (புருஷனை)க் குறிக்கிறது. ஆன்மாவின் நிலை சிவ என்பவைக்கும் நம என் பவைக்கும் இடையிலிருக்கும் ய போல் இருக்கிறது.

சிவபெருமான் ஆடலைப் பற்றிய சுருக்கமான விளக்க மாவது : சிவபெருமான் ஆடலின் அடிப்படையான உட் பொருள் மூன்று வகைப்படும். முதலாவதாக, எல்லா இயக் கத்துக்கும் மூலாதாரமான பண்கெழுமிய ஆடலின் உருவம். அண்டம் திருவாசியால் குறிக்கப்படுகிறது. இரண்டாவ தாக, ஆடலின் நோக்கம் எண்ணிலடங்கா மானிட ஆன்மாக்களை மருட்சிக் கண்ணியினின்றும் விடுவித்தல். மூன்ருவதாக, ஆடும் இடமாகிய சிதம்பரம்—அதாவது—அண்டத்தின் மையம்—நெஞ்சினுள் இருக்கிறது.

நடராஜ உருவம் பற்றி தத்துவார்த்தமாகவும் சமயச் சார்புடனும் நோக்கிய ஆனந்த குமாரசாமி கலைக்கண் ணேடும் அத்திருமேனிகளைக் கண்டார். ''இம்மாண்புமிகு உருவ அமைப்பு, விஞ்ஞானம், சமயம், கலை என்பவை பின்னிப் பிணைந்த ஒன்று. இதைப் போன்ற தோற்றத்தை நினைத்துப் பார்த்த கலைஞர்களுடைய—முனிவர்களுடைய சிந்தனைச் செழிப்பும் அன்பும் தான் என்னே! நின்று நிலைக்கும் உருவம், வாழ்க்கை முடிச்சை அவிழ்க்கும் கருவி ஒரு குழுவுக்கோ இனத்துக்கோ மட்டும் அமைதி தராமல் ஒரு நூற்ருண்டுச் சிந்தனையாளர்க்கு மட்டும் ஏற்புடைத்து என்று இல்லாமல் உலகனைத்துமுள்ள தத்துவஞானி, ரசிகன், கலைஞன் ஆகியவர்களுக்கு எக்காலத்தும் எந் நாட்டுக்கும் ஏற்புடைத்தான இயற்கையுடன் ஒன்றிய கருத்தை வழங்கியதன் அருமைதான் என்னே! தொழிலும் எழிலும் கொண்டு உயர்தனி மாட்சியுடன் விளங்குவது வாழ்க்கையின் உள்ளுணர்வுக்கு உருவம் கொடுப்பது எவ்வாறு என்பதில் ஈடுபட்டவர்களுக்குத் தான் தெரியும்.

''கல்வியில், ஊன்றிய சிறப்பு முறை மலிந்த இக் காலத்தில் கருத்து இணைப்புக்கு நாம் பழக்கப்பட்டவர் களல்லர். ஆனுல் இத்தகைய உருவங்களைக் 'கண்டவர்' களுக்கு வாழ்க்கையும் கருத்தும் தனித்தனி இயங்கமாட்டா. சில உருவங்களின் சிறப்பை ஆராயும் போது அவைகளி

லுள்ள படைப்புத்திறனை நாம் உணர்கின்றேமில்லை. ஓர் இசைச் சொற்றொடரைப் பயன்படுத்துவோமாயின் அடிப்படையான பண்களைக் காட்டும் முறையையும் இன்றியமையாத குறியீடுகளின் செழிப்பையும் அறிகின்றேமில்லை.

''இத்தகைய உருவத்தின் ஒவ்வொரு உறுப்பும் வெறும் மூடநம்பிக்கையையும் கொண்ட கொள்கையையும் சுட்டாது தெற்றெனத் தெரியும் உண்மைகளைப் புலப்படுத்துகிறது. இன்றையக் கலைஞன் எத்துணை மேதையாயினும் எல்லா இயக்கத்தையும் விஞ்ஞானம் உணர்த்தும் சக்திக்கு இதைக் காட்டிலும் சீரிய உருவத்தைத் துல்லியமாகவும் அறிவுத் திறனுடனும் படைக்க வல்லவனல்லன். நேரத்தையும் முடிவில்லா ஊழிக்காலத்தையும் ஒருங்கே கூட்டிச் சிந்திப்போமாயின் வெளிக்குள்ளடங்கிய மாபெரும் நிலப்பரப்புகளையும் காலத்தின் பெருங்கூறுகளையும் மாற்றி மாற்றி நினைத்துப் பார்ப்பதைத் தவிர்த்து வேறென்றும் செய்ய முடியாத நிலையிலிருக்கிறேம். அப்பொழுதுதான் விட்டுவிட்டு ஒலிக்கும் துடியினுடையவும் அழித்து விடாது மாற்றியமைக்கின்ற தீயினுடையவும் அமைப்பு குறியீடுகளின் சிறப்பை உணர்த்தும். இவை பிரமனின் பகல், இரவு என்ற கொள்கையின் காட்சிப் பொருட் குறியீடுகளாகும்.

''பிரமனுக்கு இரவாகும் பொழுது இயற்கை சலிக்காது. சிவபெருமான் அருளினலொழிய இயக்கம் இல்லை. அவன் களிபேருவகை கொண்டு ஆடும்பொழுது சடப்பொருள்கள் மூலம் துயில் நீங்கி எழும் ஒலி அலைகளை வாரியிறைக்கிறன். அசையாத பொருள்களும் அசைந்து அவனைச் சுற்றி ஒளிக்கற்றைகளைப் பரப்புகின்றன. ஆடிக்கொண்டே அவன் பல்வேறு தொழில்களை நடத்துகின்றன். முடிவுக்காலம் நெருங்கியதும் எல்லாவற்றையும் — உருவங்களையும் நாமங்களையும் — தீயால் சுட்டெரித்து அவைகட்கு ஓய்வு கொடுக்கிறன். இது கவிதை; இம்மி குறைவின்றி விஞ்ஞானமும் கூட.''

சிவபெருமான் ஆடும் திருமேனி பற்றியும் அத்திருமேனி விதந்தோதும் தத்துவம் பற்றியும் ஆனந்த குமாரசாமியின் அரிய கட்டுரை உலக இலக்கியமாய் விட்டது. கருத்துக் களாகிய மலையுச்சிகளில் மேகங்களெனத் தம் வாசகர்களைத் தவழ விடுகிறார் இருபதாம் நூற்றாண்டு உலக மேதைகளில் ஒருவரான ஆனந்த குமாரசாமி.

"கடந்த பலதலை முறையினரும் நடராஜத் திருவுருவத் தைப் போற்றினர் என்பது வியப்பன்று. நாம் ஐயுறவு களனைத்தையும் தெரித்தவர்கள்; எல்லா நம்பிக்கைகளையும் அநாகரிக மனிதனுடைய காலத்து மூடநம்பிக்கைகளுடன் தொடர்பு செய்து பேசுவதில் வல்லவர்கள். மிகப் பெரியதை யும் மிக நுண்ணியதையும் துருவி ஆராய்பவர்கள், எனினும் நடராஜனைப் போற்றி வணங்குபவர்கள்."

இவ்வாறு தமது கட்டுரையை முடிக்கிறார் ஆனந்த குமாரசாமி.

தமிழ்நாட்டுக் கோயில்களில் நடராஜருடைய செப்புத் திருமேனிகள் வழிபாட்டில் உள்ளன. வழிபடப்பட்டு வந்த இத்திருமேனிகள் அகழ்ந்தெடுக்கப்பட்டு உலகின் பல இடங் களிலுள்ள அருங்காட்சியகங்களை அணி செய்கின்றன. இத் திருமேனிகளின் சமய—தத்துவார்த்தப் பொருளை விளக்கிய ஆனந்த குமாரசாமி அவைகளின் கலைமாட்சியையும் உலகத்தார்க்கு எடுத்தோதினார். எழிலும் தொழிலும் வழிந் தொழுகும் ஆடும் கூத்தன் செப்புத் திருமேனிகளுள் சென்னை அருங் காட்சியகத்திலுள்ள திருவாலங்காட்டிலிருந்து அகழ்ந் தெடுக்கப்பட்ட நடராஜர் ஒன்றாகும். இத்திருவாலங்காட்டுச் செப்புத் திருமேனியைக் கண்ணுற்ற 'பிரான்சோ' உலகோ பல நூற்றாண்டுகளுக்கு ஒருமுறை காணும் மாபெரும் கலை விஞைர்' என்று ஜார்ஜ் பெர்னார்ட்ஷாவால் போற்றப்பட்ட

அகஸ்த் ரொதீன் கவிதை மொழியில் தம் உணர்ச்சிகளைக் கொட்டினூர்.

"காற்றின் அசைவினுல் உந்தப்பட்டு வாழ்க்கை என்ற நீரோட்டமும் விண்ணும் வெயிலும்—என் உயிரும்கூட— ஓவற நிரம்பி வழிகின்றன. மேலே நாட்டுக்கலை இவ்வாறு நமக்குத் தோற்றமளிக்கிறது. மிகப் பழைய காலத்திலேயே மனித உடம்பின் தெய்விக அழகை நுணுகி ஆய்ந்து கற்றுத் தேர்ந்திருந்தார்கள். மனிதன் தோன்றிய காலத்தில் எவ் வாறிருந்தானே அவ்வாறே இன்றும் இருக்கிருன். மனித உருவங்களில் மாற்றம் ஏதும் இல்லையென்பதை மனத்தில் கொள்ள வேண்டும். ஆனுல் இன்றைய அடிமைத்தனம் ஒவ்வொரு பொருளிலிருந்தும் தன்னை விடுவித்துக் கொண்ட தாக நம்புகிறது. நாம் வியக்கின்ருேம். ஆனுல் சுவையோ போன இடம் தெரியவில்லை. இத்தலையாய படைப்பில் நிழல் மெதுவாக ஈடுபட்டு இதுகாறும் தங்கியிருந்த அவ்விரு ளிலிருந்து எழும்கடும் நோயை நம்மீது மாயமாய்த் தோய விடுகிறது.வயிற்றிலிருத்து மார்புகளைப் பிரிக்கும் இவ்விரண்டு கைகளும் அருமையினும் அருமை. உண்மையில் மெடிசிஸ் வீனஸ் கைகளால் தன் வனப்பைப் பாதுகாக்கின்ற குறிப் புக்கு எடுப்பிலும் ஏற்றத்திலும் இக்கைகள் காட்டும் குறிப்பு எள்ளளவும் குறையாது. நீண்ட சதைப் புடைப்புக்களைக் கொண்ட கால்கள் காண்பவரை ஏங்க வைக்கும் புரியாய் புதிர். நிழலின் பின்னணி துறைகளில் படும் ஒளியினுல் மேலும் பொலிவுறுகிறது. இத்தோற்ற அமைப்பு கலைஞர் களால் வெகுவாகக் கையாளப் பட்டாலும் இங்கு வழக்கத் திற்கு மாருயுள்ளது. இயற்கை இங்கு உளது. எனினும் எட்டிப் பிடிக்க முடியாதது. எல்லாவற்றிற்கும் மேலாக எவரும் கண்டறியாத ஒன்று இருப்பதாகத் தோன்றுகிறது. அசைக்க முடியாத ஆழங்கள், வாழ்க்கையின் ஆழம். நேர்த்தியில் அழகு தவழ்கிறது. நேர்த்திக்கு மேலாக மெச்சு புகழ் உருவ அமைப்பு. ஒவ்வொன்றும் எல்லை கடந்து நிற்கிறது. இதை மென்மை என்கின்றனர்; ஆனுல் இது

வலிமை மிக்க மென்மை. இதை எடுத்தியம்பும் சொற்கள் இல்லை. இன்பத்தின் தேக்கம் போன்ற இதழ்கள். ஒத்த சிறப்புடைய துடிக்கும் நாசிகளின் எல்லைகளைக் கொண் டவை. பாம்பு போன்று வளைந்திருக்கும் வாய். ஈரம் கசியும் மகிழ்ச்சி அலைகளுடன் உறவாடுகிறது. மூடியும்—பாதி துருத்திக் கொண்டிருக்கும் கண்கள். இமைகளின் அரவணைப்புக்குள் அடங்கிய—ஒடுங்கிய கண்கள். கண் களின் வனப்புமிகு அமைதி. அமைதியான பார்வை; அவ் வமைதியின் மோன ஆனந்தம். வியத்தகு 'நாசூக்' குடன் மாணிக்கக் கண்ணாடி போல் அமைந்தவை இக் கண்கள். மென்மையான எண்ணங்களின் உறைவிடம் போல் தோன்றும் வாய்; உணர்ச்சிக் குமிழிகளின் எரி மலையும் கூட. இவ்வாயின் வழியே தேனீக்கள் உள்ளே நுழைவதும் வெளியே வருவதுமாய் இருக்கின்றன. இனிமையான மணங்கமழ் மூச்சு."

இச்சொல்லோவியம் ஆனந்த குமாரசாமியுடன் சேர்ந்தே புனையப்பட்டது.

தத்துவமும் பண்டையக் கூத்தும் இணைந்து, சமயமும் கலையும் ஒன்றோடொன்றிப் பின்னித் தான் நடராஜத் திரு வுருவங்கள் எழுந்தன. ஆடும் கூத்தன் சில சைவ சித்தாந்தக் கருத்துக்களை அறிந்து கொள்ளக் கருவூலமாய் அமைந்துள்ளது.

டீ ஜோயட் என்பவர் சொல்கிறார் : உலகைப் படைத்து அளித்துத் துடைத்து வீடுபேற்றைத் தருபவன் கடவுள் என்ற நோக்கு கிழக்கு—மேற்கு இருபக்கத்து நாடுகளிலுள்ள ஆன்மீகத் தத்துவஞானியின் சிந்தனைக்கு அப்பாற்பட்ட தன்று. ஆனால் இப்பல்வகைத் தொழில்களையும் நாட்டியத் தைக் கருவியாகக் கொண்டு அவன் சாதிக்கின்றானென்றால் அதைக் கிழக்கேயுள்ளவன் தான் சாதிக்க முடியும்."

ஆடும் கூத்தன் பற்றிய இலக்கியம் தமிழில் 1800ஆண்டு கட்கும் மேலாக இருந்து வருகிறது. தமிழிலக்கியத்தைப்

புறக்கணித்து நடராஜரைப் பற்றி எழுதுவதோ பேசுவதோ சுவரின்றிச் சித்திரம் எழுதுவது போலாகும். உலகப் புகழ் பெற்ற சோழர் காலச் செப்புத் திருமேனிகளை உண்டாக்க இவ் விலக்கியம் பெரிதும் உதவியது. நடராஜர் செப்புத் திரு மேனி கலையுலகிற்குத் தமிழ்நாடு தந்த நன்கொடை யாகும். ஆனந்த குமாரசாமியின் கருத்தை நினைவு கூர்தல் பயன் தரும். அவர் கூறுவதாவது: ‘‘சைவ நாயன்மார்களின் உருவங்களைப் பற்றித் தஞ்சைக் கோயிற் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. எனவே, இறைவன் திருமேனிகள் முன்பே வடிக்கப்பட்டிருக்க வேண்டும். சிவபெருமானின் ஆடும் திருமேனிகள் குப்தர் காலத்தைச் சேர்ந்த ஐகோலில் உள்ள துர்க்கை கோயிலிலும் எலிபண்டாவிலும் காணப்பட் டாலும் கல்லால் செதுக்கப்பட்ட இச்சிலைகளில் நடராஜத் திருமேனிக்கு முன்னோடியாகச் சொல்லக்கூடிய எதுவுமில்லை. ஒன்பதாவது பத்தாவது நூற்றாண்டுகளில் தழைத்த சமய-தத்துவ இலக்கியத்துடன் திராவிட உலோகக்கலை தோன் றியது என்றே கருத வேண்டும்.’’

‘சிவபெருமான் திருநடனம்’ என்ற நூலுக்கு முன்னுரை வழங்கிய ரொமான் ரோலான் சொல்கிறார்: ‘‘குமாரசாமி யினுடைய புத்தகத்தின் நோக்கம் ஆன்மாவின் வலிமை யைக் காட்டவும் தன்னுள் சேகரித்து வைத்திருந்த செல்வங்களனைத்தையும் வெளிக் காட்டவும் மனித இனத்தை மேம்படுத்தி அதை இன்புறச் செய்வதுமாகும். இந்தியாவின் முழுமையான—பரந்த ஆன்மா-ஒரு கோடி யிலிருந்து மறுகோடி வரை அதன் நெருக்கமான—செவ் வனேயமைந்த கட்டுக் கோப்பில் பொன்னான இணைப்பு மேலோங்கி நிற்பதைப் பறை சாற்றுகிறது. குதர்க்கம் இல்லை. எல்லாம் ஒன்றாய் இணைந்து அணைகிறது. வாழ்க் கையின் எல்லாச் சக்திகளும் ஒரு காடு போன்று குழுக் களாயும் அக்காட்டின் ஆயிரம் கைகளும் ஆடல் ஆசானான நடராஜனால் வழிகாட்டிச் சொல்லப்படுகின்றன.’’

'சிவபெருமான் திருநடனம்' வெளிவந்த பிறகு உலகெங் கணும் ஆடும் கூத்தனைப் பற்றிய கட்டுரைகளும் நூல்களும் எழுந்தன; எழும். இவ்வனைத்துக்கும் முன்னோடியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கியவர் ஆனந்த குமாரசாமி.

திருமூலர் சொல்லும் 'தேனுந்தும் ஆனந்த மாநடம்' பற்றி ஆனந்த குமாரசாமி எழுதினார். அளவில் சின் னஞ்சிறு கட்டுரை உலகச் சிந்தனையாளர்களிடையில்—கலைஞர்களிடையில் பெரும் புயலை எழுப்பியது. அவர் களனைவரும் நடராஜத் திருமேனியின் முன்,

*குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிழ்*
*சிரிப்பும்*
*பனித்த சடையும் பவளம்போல் மேனியிற்பால்*
*வெண்ணீறும்*
*இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்,*
*மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்தமாநிலத்தே,*

என்று வணங்கி நிற்பாரன்றோ!

# இலக்கியத்தில் மடல்கள்

போக்குவரத்து வசதிகள் பெருகிய இக்காலத்தில் கடிதங்கள் பெருவாரியாக எழுதப்படுகின்றன. `புருக்கள் மூலம் கடிதங்கள் முற்காலத்தில் அனுப்பப்பட்டன. எழுது வதற்குத் தாழையும் ஓலையும் தாமரை இலையும் பயன் படுத்தப்பட்டன. எழுதுவதில் இடர்ப்பாடும் இருந்தது. மிகுதியான நேரம் எழுதுவதில் கழிந்தது. இலக்கியங் களில் புகழ்படைத்த சில கடிதங்களைப் படிக்கிறோம். வட மொழி இலக்கியத்தில் ஒரு கடிதமும் ஆங்கில மொழி யிலுள்ள ஒரு மடலும் தமிழ்ச் சிலப்பதிகாரத்திலுள்ள ஒரு முடங்கலும் ஆகியவைகளைச் சிறிது நோக்கலாம்.

1

காளிதாசன் எழுதிய சாகுந்தல நாடகத்தில் துஷ்யந்தனும் சகுந்தலையும் ஒருவரையொருவர் கண்டு காதல் கொண்டனர்.

*''மோவா மலரோ நகங்களை யாத முழுமுறியோ*
*ஆவா கருவி துருவாது பெற்ற அருமணியோ*
*நாவாற் சுவையாய் புதுநற வோசெய்த நற்றவங்கள்*
*தாவா தொருங்கு திரண்டுவந் தாலன்ன தையலரே.''*

என்று மன்னன் மாமுனிவரின் மகளை நினைந்து மனத்தில் இடர்ப்படுகின்றான். காதல் நோய்க்கிரையான கண்ணுவ முனிவரின் வளர்ப்பு மகளாம் சகுந்தலையும் தோழியரிடம் அவள் சிந்தையைக் கவர்ந்து சென்றவர் எவரென்று அடை

ஆ—13

யாளம் சொல்லி விட்டாள். சகுந்தலையின் காதல் கரை கடந்து சென்று விட்டதால் அவள் தன் காதலைத் தெரிவித்து முடங்கல் எழுதினால் அதைத் துஷ்யந்தனிடம் சேர்த்து விடுவதாகப் பிரியம்வதை சொன்னாள். அப்படி முடங்கல் விடுப்பின் அரசர் ஒரு வேளை தன்னைத் துறந்து விடுவாரோ என்று சகுந்தலை அஞ்சினாள். ''உடம்பைக் குளிரச் செய்கின்ற வேனிற்கால நிலவை யார்தாம் தம் ஆடை முன்றானையால் மறைப்பர்,'' என்று தோழியர் ஆறுதல் கூறவும் சகுந்தலை தாமரை இலையின் மேல் நகங்களால் தன் எண்ண அலைகளைத் தவழவிட்டாள்.

*''இரக்கமிலா அரசே! நானென் செய்வேன்! இரவுபகல்*
*எரிக்கின்றானென் உடம்பை எழிற்காமன். நின்மேலே*
*பெருக்கின்ற தென்காதல் பேதையேன் நின்நெஞ்சம்*
*இருக்குமா றுணர்ந்திலேன் எனக்கதனை இயம்புதியோ,''*

என்று எழுதிய செய்யுளைத் தோழியர்க்குச் சகுந்தலை படித்துக் காட்டினாள்.

மறைவில் நின்று கேட்டுக் கொண்டிருந்த அரசனே முடங்கலுக்கு விடை சொல்வான் போல நேரில் சகுந்தலை முன் சென்று,

*''மெல்லியலாய்! நின்னையவன் மென்மேலும் எரிக்கின்றான்,*
*சொல்லவொணு வகையாக என்னையோ சுடுகின்றான்;*
*அல்லொழிந்த விடிநாளில் அழிமதியை வாட்டுதல்போல்*
*எல்லவன்மற் றதன்மனை அல்லியை வாட்டவில்லையே,''*

என்று தன் நிலையை அவளுக்குத் தெரியப்படுத்தினான். உலக இலக்கிய அன்பர்களிடையில் சகுந்தலையின் காதற் கடிதம் புகழ்மணம் பரப்பி நிற்கின்றது. காதல் வானில் பெரும்பாலும் மாதர்தம் உள்ளக் கிடக்கையை முடங்கல் வழி வெளிப்படுத்துவதில்லை என்ற கூற்றுக்கு மாறாகத் தன்

---

*மறைமலையடிகள் : சாகுந்தல நாடக ஆராய்ச்சி.

அவல நிலையைத் தலைவனுக்கே சகுந்தலை விண்ணப்பிக்கின்றாள். சகுந்தலை காதல் மடல் எழுதும் காட்சியை 'அலகிலா அறிவுக் கண்ணால்' அனைவரும் நுகருமாறு ஒப்பற்ற ஓவியமாய் இரவிவர்மா புனைந்தான்.

## 2

பதினெட்டாம் நூற்றாண்டில் ஆங்கில இலக்கிய உலகில் இசைபட வாழ்ந்தவர் டாக்டர் சாமுவல் ஜான்சன். தலை சிறந்த எழுத்தாளர்; உரையாடுவதில் வல்லவர். எழுத்தாளன் எவர்க்கும் தாழ்ந்தவனல்லன் என்ற கருத்துக் கொண்டவர். பணமோ பதவியோ அவரைத் தலைதாழ்த்தும் செயலற்றிருந்தன. அவர் காலத்து உடன் வாழ்ந்த புலவர்கள் ஜான்சனின் நட்பைப் பெரிதும் போற்றி வாழ்நாளில் பெறமுடியாத ஒன்றைப் பெற்று விட்டதாகப் பெருமை கொண்டனர். டாக்டர் ஜான்சனுடைய வாழ்க்கையை நூலாக எழுதிப் பாஸ்வெல் என்பவர் வாழ்க்கை வரலாற்று நூல் எழுதுவதற்கே ஒரு முன்னோடியாக இன்றுவரை திகழ்கின்றார் என்பது மிகையன்று.

டாக்டர் ஜான்சனுடைய நூல்களில் குறிப்பிடத்தக்க ஒன்று அவர் தொகுத்துப் பொருள் எழுதிய அகர முதலி. அதை வெளிக்கொணர்வதற்கு அவர் அரும்பாடு பட்டார். அதுபற்றிய திட்டம் குறித்துச் செஸ்டர்பீல்டு பிரபுவுக்கு அவர் எழுதினார். பணம் படைத்த அம்மேட்டுக் குடிமகனைப் பார்க்கப் புலவர் பெருமானாகிய ஜான்சன் ஒருநாள் செஸ்டர்பீல்டு பிரபுவின் அறைக்கு வெளியே காத்திருந்தார். பிரபுவுடன் யாரோ உரையாடிக் கொண்டிருப்பதாக அறிவிக்கப்பட்டது. கால்வி சிப்பர் என்ற சாதாரண மனிதர் ஒருவர் அறையை விட்டு வெளியே வந்ததைக் கண்ணுற்ற ஜான்சன் 'இவருக்காகவா என்னைக் காக்க வைத்தனர்,' என்று வெகுண்டெழுந்து அவ்விடத்தை விட்டு நீங்கி மீண்டும் அப்பக்கம் திரும்பினாரில்லை.

அகரமுதலி முற்றுப்பெற்று வெளிவரும் தறுவாயில் செஸ்டர் பீல்டு பிரபு ஜான்சனுடைய வெளியீடு பற்றிப் புகழுரை எழுதினல் மனக்கசப்பை விடுத்து உறவு கொண்டு நூலைத் தமக்கு டாக்டர் ஜான்சன் உரிமையாக்குவார் என நினைத்து 'உலகம்' என்ற இதழில் இரண்டு கட்டுரைகள் எழுதி வெளியிட்டார். மேன்மை தங்கிய பிரபு எழுதியதாவது : ''பொதுவாக மக்களும் சிறப்பாக இலக்கிய உலகும் ஓர் அரிய நூலை ஆக்கியதற்கு ஜான்சனுக்குக் கடமைப் பட்டவர்கள். மனிதனிடம் நாம் முழுமையை எதிர் பார்க்க முடியாது. ஆனல் இதுகாறும் வெளிவந்துள்ள ஜான்சனுடைய நூல்களை வைத்து மதிப்பிட்டால் ஒரு மனிதன் எந்த அளவுக்கு வழுவின்றிச் செயற்பட முடியுமோ அந்த அளவுக்கு அவருடைய நூல் சிறந்து விளங்கும் என்பது நம் நம்பிக்கை. சில ஆண்டுகட்டு முன்னர் இதைப் பற்றி அறிவிக்கப்பட்ட யாத்தல் முறையே இதை உறுதி செய்யும்.'' செஸ்டர்பீல்டு இரண்டாவது கட்டுரையில் பின்வருமாறு எழுதினர்: ''தற்போது நம் மொழி பெரியதொரு குழப்பத்திலுள்ளது என்பதை நாம் ஒத்துக் கொள்ள வேண்டும். தங்கு தடையின்றி வெளியுலகோடு நாம் வாணிபம் செய்ய நேரிட்டதால் பிற மொழிகளினின்றும் பல சொற்றொடர்களும் வழக்காறுகளும் இறக்குமதி செய்யப்பட்டு —பயன்படுத்தப்பட்டு நம் உடமைகளாகிவிட்டன. நம்முடைய மொழியையும் அவை வளம்படுத்தின. பிறவற்றிலிருந்து நம்மொழி பெற்ற வலுவையும் எழிலையும் தக்க வைத்துக் கொள்ளலாம். என்றாலும், தேவைக்கு மிஞ்சிய அணிகளை அணிந்து கொள்ளும் பெண்மணி போன்று வெளி நாட்டு அணிகள் அவளை மறைத்து, நசுக்கிவிடக் கூடாது. தக்கவைத்துக் கொள்பவை எவை, தவிர்க்கப்பட வேண்டியவை எவை என்பதை உறுதிப்படுத்த வேண்டிய காலம் கிட்டி விட்டது. சகிப்புத்தன்மை, உரிமையாக்கிவிடல், ஒன்றிவிடல் என்பவை போதிய அளவு நம்மிடை நடை பயின்று விட்டன. ஒழுங்கும் சீரும் இப்பொழுது தேவை. குழப்பத்தின் போது உரோமாபுரியினர் கையாண்ட

முறையை நாமும் மேற்கொண்டு ஒரு சர்வாதிகாரியைத் தேர்ந்தெடுத்தல் வேண்டும். இந்த அடிப்படையில் இன்னல் நிறைந்த இவ்விடத்தில் அமர டாக்டர் ஜான்சனுக்கு நான் என்னுடைய வாக்கை அளிக்கின்றேன். சுதந்திரப் பிரிட்டிஷ் குடிமகனுய்ப் பிறந்த நான் எனக்குள்ள ஆங்கில மொழி பற்றிய எல்லா உரிமைகளேயும் டாக்டர் ஜான்சனிடம் அடைக்கலம் புகுவிக்கின்றேன். பழைய உரோமபுரிக் குடி மகன் போல் மட்டுமின்றி அக்காலத்துக் குடிமகன் போல் என்னுடைய பாப்பாண்டவராகவும் அவரைக் கருது கிறேன்.''

ஜான்சன் செஸ்டர்பீல்டு பிரபுவின் தேனிற் குழைத்த மொழிகளைக் கேட்டு ஏமாறவில்லை. தம்மை ஏமாற்றி விடலாம் என்று செஸ்டர்பீல்டு பிரபுவின் சூழ்ச்சி ஜான் சனைக் கொதித்தெழச் செய்தது. பண்பு குறையாமல் சீரிய முறையில் டாக்டர் ஜான்சன் பிரபுவுக்கு எழுதிய மடல் ஒன்று உலகப் புகழ் வாய்ந்தது. எழுத்தாளனை பீடு நடை போடச் செய்த இவ்வோலை படித்து இன்புறத்தக்கது.

## டாக்டர் ஜான்சனுடைய மடல்

''மேன்மை தங்கிய செஸ்டர்பீல்டு பிரபு அவர்களுக்கு.

பிப்ரவரி 7, 1755.

பிரபுவே!

என்னுடைய அகர முதலியை மக்கள் ஏற்றுக் கொள்ளு மாறு தாங்கள் இரண்டு கட்டுரைகள் எழுதியுள்ளதாக 'உலக'த்தின் உரிமையாளர் எனக்குத் தகவல் தெரிவித்துள் ளார். தங்களுடைய மேதாவிலாச மோகத்தால் மற்றைய மனித இனத்தினரைப் பின்பற்றி, வலியிழந்து 'மண்ணை ஆளுபவரை ஆளுகிறவன்' என்று செருக்குடன் சொல்லிக் கொள்ளலாம் என்ற விருப்பத்தைக் கட்டுப்படுத்த இயலாத

வனுனேன். உலகத்தினர் பாடுபட்டுப் பெறமுயன்ற அம் மதிப்பை நானும் அடையலாம் என விழைந்தேன். ஆனால் அந்தோ! என்னுடைய கௌரவமும் அடக்கமும் அதன் பின்னே செல்லாது தடுத்து நிறுத்துமளவுக்குத் தங்கள் வாயிலில் காத்துக் கிடந்த என்னை ஊக்குவிப்பாரில்லை. ஒரு தடவை மக்கள் மேடையொன்றில் தங்களை நோக்கிப் பேசிய காலே சமஸ்தானப் பழக்க வழக்கங்களை அறியாத ஒய்வு பெற்ற புலவன் தன் உடமையினின்றும் மகிழ்விக்கும் கலைத் திறனைப் போன்று என் சொற்பட்டியல் முழுவதையும் வாரி இறைத்தேன். ஆவனவெல்லாம் செய்தேன். தினையள விருந்தாலும் அதைப் புறக்கணித்து எந்த மனிதனும் இன்ப முருன். தங்கள் வீட்டுத் திண்ணையில் நான் காத்துக் கிடந்தும் தங்கள் ஆசார வாயிலினின்றும் வெளியேற்றப் பட்டுமோ ஏழு ஆண்டுகள், என் பிரபுவே, கழிந்து விட்டன. அது போழ்து இன்னல்களுக்கிடையில் என்னுடைய பணியைத் தொடர்ந்து செய்து வந்தேன். அவைபற்றிப் புகார் செய்வது பயனற்றது. ஒருவாறு என்னுடைய நூலை வெளிவரும் நிலைக்குக் கொண்டுவந்து விட்டேன். ஓர் உதவி (பெற்றேன்) இல்லை; ஊக்குவிக்கும் ஒரு சொல் (கேட்டேன்) இல்லை; சலுகைப் புன்னகை ஒன்று (கண்டேன்) இல்லை. இதை நான் எதிர்பார்க்கவும் இல்லை; ஏனெனில் எனக்கென்று ஒரு புரவலரைக் கண்டறியாதவன் நான். வர்ஜில் ஆட்டி டையன் முடிவில் அன்புடன் தோழமை கொண்டான். அத் தோழன் மலைவாழ் ஆள் என்றும் தெரிந்து கொண்டான்.

''தண்ணீரில் மூழ்கி உயிருக்குத் தவிக்கும் ஒருவனைக் கவலையின்றிப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு ஒருவாறு அவன் கரை சேர்ந்தபொழுது உதவிநல்கவரும் ஒருவர் தான் புரவலரோ, என் பிரபுவே? என்னுடைய உழைப்பைப் பாராட்டித் தாங்கள் அன்பு கூர்ந்து கடைக்கணித்த பார்வை முன்னமே நிகழ்ந்திருந்தால் உவகை ஊட்டியிருக்கும். அதைக் குறித்து நான் பராமுகமாயிருந்து நுகர முடியாமற் போகும்வரை—தன்னந்தனியாகயிருந்து நான் அதை அம்பு

லப் படுத்தாதவரை— உலகம் என்னையறிந்துகொண்டு அது எனக்குத் தேவைப்படாதவரை, எவ்விதப் பயனும் பெறுத விடத்துக் கடமைகள் என்று சொல்லப்படுவனவற்றை ஆற்ற மறுப்பது மனிதாபிமானத்துக்குப் புறம்பான குற்றச் சாட்டாகாது என்று நான் கருதுகின்றேன். இறையருளால், எனக்காக நானே செய்து கொண்ட அத்தனைக்கும் புரவலொருவர்க்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன் என்று மக்கள் கருதும்படி செய்வதும் எனக்கு உடன்பாடன்று.

"கல்வியை ஆதரிக்கும் எவர்க்கும் கடப்பாடில்லாது இது காறும் என்னுடைய நூலுக்காக உழைத்த நான் என்னுடைய பேச்சை நிறுத்திக் கொள்ளவேண்டும். ஏமாற்றம் ஏதும் எனக்கு இல்லை. சுருக்கமாகச் சிறிது சொல்வேன். ஒரு காலத்தில் பெருமிதத்தோடு தற்பெருமையில் உழன்ற ஆசைக் கனவினின்றும் துயிலெழுப்பப்பட்டு விட்டேன்—

பிரபு அவர்களின் தாழ்மையான -
கீழ்ப்படிதலுள்ள ஊழியன்,
சாம் ஜான்சன் (என்ற நான்)."

டாக்டர் சாமுவல் ஜான்சன் செஸ்டர்பீல்டு பிரபுவுக்கு எழுதிய கடிதம் இலக்கியச் சிறப்பு வாய்ந்தது. உணர்ச்சியுடன் ஜான்சன் சாதாரண மக்களால்—ஏன் கற்றவர் கூடக் கேட்டு வியப்புற்று நிற்கும் வகையில் புரிந்து கொள்ள முடியாத சொற்றொடர்களைப் பஞ்சாய்ப்பறக்க விடுவதைப் போல் உதிர்க்க வல்லவர். எதிராளியின் மனம் சுண்டிப்போகும்படி சுடச்சுடப் பேசிப் பழக்கமுள்ளவர். இருப்பினும் செஸ்டர்பீல்டு பிரபுவுக்கு அவர் எழுதிய கடிதம் குருதி சிந்தும் வில்லம்புகளாயமையாது அவர் வாயினின்றும் சொல்லம்புகளாயமைந்து நாவினுற் சுட்ட வடுக்களாய் இன்றுவரை நிற்கின்றன. அறிவுடையொருவனைப் பணம், பதவி என்ற பெயரால் தலைதாழ்த்த முடியாது என்பதற்கு ஜான்சன் கடிதம் நல்லதொரு சான்று.

''உதவி வரைத்தன் றுதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து''

உதவி நல்காது நல்கியவர் போல் உலகில் உலா வர விரும்பிய செஸ்டர்பீல்டு பிரபுவுக்கு ஜான்சன் நல்லதொரு பாடம் கற்பித்தார். கருதியதைச் சாதிக்கும் உரனும் திறனும் படைத்தவர் டாக்டர் ஜான்சன். தமிழுலகில் நக்கீரர் இறைவனையே தம் வாதத்தால் மடக்கவில்லையா? ஆழ அமுக்கி முகக்கினும் நாழி முகவாது நானாழி. எவ்வளவு உயர் நிலையிலிருந்து மொழிந்தாலும் இல்லது உண்மையாகாது. பாண்டிய மன்னன் சிறந்த பாடலொன்றுக்கு பொற்கிழி வழங்குவதாக அறிவித்தான். மதுரைச் சொக்கன்பால் அன்பு கொண்ட தருமிஎன்னும் அந்தணன் ஒருவன் வறுமையைப் போக்க அவ்விறைவனே ஒரு பாடலையாத்து அவனுக் களித்தான்.

கொங்கு தேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறி யெயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ அறியும் பூவே.

தலைமகளைத் தலைமகன் நாணின் நீக்குதற் பொருட்டு தனது அன்பு தோற்ற நலம் பாராட்டிய பாடல். ''அரிவை கூந்தலைக் காட்டினும் மணம் மிகையாக உள்ள பூவை நீ கண்டதுண்டா, தேன் குடிக்கும் வண்டே?'' எனத் தலைவன் தும்பியைக் கேட்கிறான். அரசவையில் அமர்ந்த புலவர்கள் பாட்டின் சிறப்பைப் பாராட்டவும் தருமி பொற்கிழியை எடுக்கச் சொல்லும்போது நக்கீரன், ''பாட்டில் குற்றமுளது. எனவே பொற்கிழி உனக்குரித்தன்று;'' என்று சொல்லித் தடுத்துவிட்டான். தருமி இறைவனிடம் சென்று முறையிட இறைவனே ஒரு முதிய அந்தணனாய் வந்து ''யார் நம் கவிக்குக் குற்றமியம்பினார்?; என்று கேட்டான். நக்கீரன், ''சொற் குற்றமின்று;பொருட்குற்றம்'' என்றான். ''சூடும் மலர்களின்

சார்பாலன்றி நாரியர் கூந்தலுக்கு நாற்றமில்லை'' என்று நக்கீரன் மேலும் உரைத்தான். ''பங்கய முகமென் கொங்கை பதுமினி குழலோ?'' என்று முதிய அந்தணன் வினவவும் ''அதற்கும் அவ்வாறே'', என்றான் நக்கீரன். ''தெய்வ மங்கையர் குழலோ?'' என்று இறைவன் கேட்க, ''தேன் பிலிற்றும் மலர்களினின்றும் பெற்ற மணமே அது,'' என்றான். நக்கீரன்.

*"பரவி நீ வழிபட்டேத்தும் பரஞ்சுடர் திருக்காளத்தி*
*அரவி நீர்ச் சடையார் பாகத்து அமர்ந்த ஞானப் பூங்கோதை*
*யிரவினீர்ங் குழலுமற்றே'' என ''அஃதுமற்றே''*
*வெருவிலான் சலமே முற்றச் சாதித்தான் வினவுயென்று நோக்கான்.*

முதிய அந்தணன் நெற்றிக் கண்ணைச் சிறிதே காட்டித்தான் யார் என்பதை நக்கீரனுக்கு அடையாளம் காட்டவே ''முற்றும் நீர் கண்ணானலும் நும்பாடல் குற்றம் குற்றமே,'' என்று நக்கீரன் சாதித்தான். நெற்றிக் கண்ணினின்று தோன்றிய வெப்பம் தாங்காமல் பொற்றாமரை வாவியில் நக்கீரன் வீழ்ந்தான். பின்னர் ''கயிலைபாதி—காளத்திபாதி அந்தாதி'' பாடி இறைவன் திருவருளைப் பெற்றான் என்பது கதை. இக்கதையிலிருந்து நாம் கற்றுக் கொள்ளும் பாடம் என்ன? இறைவனுயிருந்தால் கூட குற்றம் குற்றமே. விதிவிலக்கில்லை. உண்மை என்றும் நிலைத்து நிற்கும். 'கொங்குதேர் வாழ்க்கை' என்று தொடங்கும் இப் பாடல் சங்க இலக்கியப் பாடல். இறையனாரியற்றியது. இப் பாடலின் நயம் ஒருபுறமிருக்க, இதிலுள்ள பொருட்குற்றம் அறிவுடையோரைத் தூண்டி ஒரு சுவைமிக்க கதையை உருவாக்க உதவியது.

## 3

பிறப்பிற் குன்றாப் பெருந்தோள் மடந்தை மாதவி ஆடலும் பாடலும் அழகும் என்ற இம்மூன்றில் ஒன்றும் குறைவுபடாதவள். ஏழாண்டுகளில் ஆடல் அரங்கேற்றம் அரசன் முன்னிலையில் நிகழ்ந்தது. பொற்பூங்கொடி உயிர் பெற்று ஆடினாற் போலும் அவள் காணப்பட்டாள். அரசனிடமிருந்து ஆயிரத்தெண் கழஞ்சு பொன்னும் இலைப்பூங்கோதையும் பரிசு பெற்றாள். நம்பியர் திரிதரு மறுகில் இலைப் பூங்கோதையை ஆயிரத்தெண் கழஞ்சு பொன்விலை கொடுத்து வாங்கி, தோழி வசந்தமாலையின் பின்சென்று மாதவியின் வீடடைந்து அவளை அணைந்து குற்றமற்ற தன் மனைவியையும் வீட்டையும் கோவலன் மறந்தான். கண்ணகியுடன் மனையறம் நடத்திய ஆண்டுகள் சில; எனவே, பல ஆண்டுகள் மாதவியுடன் கழித்தான் போலும்! புகார் நகரில் நடந்த இந்திரவிழாவில் மாதவியுடன் ஆடியும் ஊடியும் பாடியும் களித்தான். கடற் கானல்வரிப் பாடல்கள் பாடிய கோவலனுக்குப்பின் மாதவியின் பாடல்கள் கேட்டு

> 'கானல் வரியான் பாடத் தாமொன்றின் மேல் மனம் வைத்து
> மாயப் பொய் பலகூட்டு மாயத்தாள் பாடினாள்,'

என்று சொல்லி அவளைத் துறந்து தன் மனைவியிடம் சென்றான். காதலனைப் பிரிந்து தன்மாடம் சென்ற மாதவி தனிமையில் வாடினாள். மடலெழுதினால் வாராரோ என்று மதிமயங்கி ஒன்று எழுதித் தோழி வழியனுப்பினாள். முதிர் பூந்தாழை முடங்கலில் பித்திகை முகையதனை ஆணியாக் கொண்டு செம்பஞ்சின் குழம்பில் தோய்த்து மாதவி எழுதலானாள். சண்பகம், மாதவி, பச்சிலை, கருமுகை, வெண்பூ, மல்லிகை, செங்கழுநீர் என்பவைகளை இடையிடையிற் கட்டித் தொடுத்த தாழைத் தோட்டிலே மடலெழுதினாள் மாதவி. காதலன் கைக்குப் போகும் தாழைமடல் மலர்மணம் நாறும் மடலாகவும் அமைந்தது. பண்ணையும்

திறனையும் பழிக்கும் நாவால் மழலைமொழியில் பேசிப் பேசிக் கடிதம் வரைந்தாள் மாதவி.

"இன்னிள வேனில் இளவரசாளன்
அந்தி போதகத் தரும்பிடர்த் தோன்றிய
திங்கட் செல்வனுஞ் செவ்விய னல்லன்.
புணர்ந்த மாக்கள் பொழுதிடைப் படுப்பினுந்
தணந்த மாக்கள் தந்துணை மறப்பினும்
நறும்பூ வாளியி னல்லுயிர் கோடல்
இறும்பூ தன்றிஃது அறிந்தீமின்."

வசந்தமாலையை வருகெனக் கூவி தாழைமடலைக் கொடுத்து 'கோவலர்க்களித்து அவரைக் கொணர்க ஈங்கு,' என்று அவளைத் தூது விடுத்தாள் மாதவி. வீடு போய்ச் சேரு முன்னரே கோவலனைக் கூலமறுகிலே கண்டு வசந்த மாலை ஓலையைக் கொடுத்தாள்.

"நடிப்பு அவளுக்குக் கைவந்த கலையாயிற்றே! தானே வந்து காதலிற்றேன்றும் கண்கூடு நடிப்பு, பல்காலும் வந்து காணும்படி நடித்த நடிப்பு தன் வடிவை மறைத்து வேறு வடிவுடன் காட்டிய நடிப்பு, புறவாயிலில் நின்ற நடிப்பு, இருவருக்குமிடையே தூது செல்லப் புலவி யால் போகிறுள் போல் நடித்த நடிப்பு, பிரிவாற்றுமையால் வருந்தினதாகக் காட்டிய நடிப்பு, கண்டவரெல்லோர்க்கும் தன் விரகத்தைச் சொல்லி நடித்த நடிப்பு, மயங்கி வீழ்ந்து பிறர் தூக்கியெடுக்கும்படி நடித்த எடுத்துக்கோள் நடிப்பு — இவையத்தனை நடிப்பும் ஆடல்மகளாதலின் அவளுக்கு இயல்பன்றே!" என்று கூறிக் கோவலன் மாதவி மடலை ஏற்க மறுத்தான். வசந்தமாலையும் விரைந்து சென்று மாத விக்குச் சொல்ல, "மாலை வாராராயினும் காலையிற் காண் போம்," என்றுரைத்து மலர்ப்படுக்கையிற் சாய்ந்தாள் மாமலர் நெடுங்கண் மாதவி. ஆடல் மகளின் கலையிலும் அழகிலும் மயங்கிய கோவலன் மாதவியின் கானல்வரிப் பாடல்களைக் கேட்டுக் கண்ணகிக்கும் நடிப்புக் கலையில்

சிறந்தோங்கிய மாதவிக்கும் இடையேயுள்ள வேறுபாட்டை அறிந்து கொள்ள முடிந்தது. எவ்வளவு தான் புளிப் போட்டுத் தேய்த்து ஒளிபெறச் செய்தாலும் பித்தளை பொன்னுகாது என்பதைத் தெரிந்து கொண்ட கோவலன் நறுமலராலும் கவிதை சிந்தும் சொற்றெடர்களாலும் புனைந்த மாதவியின் மடல் கண்டு மீண்டும் அவள் வலையிற் சிக்க மறுத்தான். மாதவியின் கானல்வரிப் பாடல்களிற் பொதிந்துள்ள பொருள் கண்ணகியால் நினைத்துப் பார்க்க முடியாதது. ஊடிச்சென்ற கோவலனைக் கூடியடைய மாதவி எழுதிய ஓலைக்கு வேலையில்லாமற் போயிற்று. இள வேனில் என்பான் இளவரசன்; எனவே முதிய உள்ளம் உடையவனல்லன். மாலை மதியமும் பிறப்பிலே கோட்ட முடையான். கூடியிருந்தால் ஊடலைக் கிளப்பிக் கலகம் மூட்டுவான்; நீங்கியிருந்தால் தண்ணெளியென்ற பெயரில் சுடுகணைகளை வாரியிறைப்பான். இஃதை அறிந்து கொள் வீர்,'' என்று மாதவி விடுத்த வேண்டுகோளுக்குக் கோவலன் செவி சாய்க்கவில்லை. கண்ணகிக்குக் கலை யுணர்ச்சி இல்லாததால் மாதவியின் கலைப்புலமையும் திறமையும் கோவலனை அவன்பால் ஈர்த்தன என்று சொல் வது பொருந்தாது. கோவலன் காலங்கடந்து அறிந்து கொண்ட உண்மை 'ஆடல் மகளே யாதலின் ஆயிழை பாடு பெற்றன அப்பைந்தொடி', என்பதுவே. பல்லாண்டு கள் கண்ணகியின் மனை வாழ்க்கையைப் பறித்துக்கொண்ட மாதவி — கற்புடை மகளிர் எண்ண வொண்ணுத கருத்துக் கொண்டு பிறிதொருவன் மேல் காதல் கொண்டது போலப் பாடின மாதவி-கோவலனைத் தன் மனை யாளிடம் போய்ச் சேர முடியாதவாறு செய்த முயற்சியே அவள் எழுதிய மடல். கடல் பொங்கியெழுந்ததெனச் சீறினன் கோவலன். வெளியூர் சென்று மனைவியின் காற் சிலம்பை விற்று அதனுல் பெற்ற பணத்தைக்கொண்டு வாணிபம் நடத்தலாம் எனத்திட்டமிட்டு கண்ணகியுடன் கோவலன் மதுரை புறப்பட்டுச் சென்ருன். மாதவியின் அரங்கேற்றத்திற்குப் பின்னர் இலைப்பூங்கோதையை ஆயி

ரத்தெண் கழஞ்சு பொன் கொடுத்து வாங்குபவன் எவனு யினும் அவன் மாதவிக்கு மணாளனாகியிருப்பான். கோவலன் பொன் கொடுக்க முடிந்ததால் மாதவியை அடைந்தான். புகார்நகரப் பெருங்குடிமகன் கோவலனுக்கு மனைவியிருப் பதும் அவள் வாழ்க்கையைப் பாலைவனமாக்கித் தன் வாழ்க் கையைச் சோலைவனமாக்கிக் கொண்டதும் மாதவிக்குத் தெரியாததல்ல. பிரிந்த கோவலனை மீட்டும் பெற முயற்சி செய்த கடிதத்தோடு மாதவி மன அமைதி பெற்றுக் கண்ணகி யுடன் வாழக் கோவலனை விட்டு விட்டிருக்கலாம். அவன் மனம் சலிக்கின்றதா என்ற சோதனை போலும் முதற் கடிதம். கோவலனுடைய பெற்றோர்களுக்காக உருகிப் போவது போலவும் கண்ணகியைப் புகழ்பவள் போலவும் மீண்டும் கடிதம் எழுதி கோசிகன்பாற் கொடுத்து மதுரைக் குப் போகும் வழியில் கண்ணகிக்குத் தெரியாதபடி மாதவி கொடுக்கச் செய்தாள். கோவலனை அடையாளம் கண்டு கொள்ள முடியாத கோசிகன்.

*'கோவலன் பிரியக் கொடுந்துய ரெய்திய*
*மாமலர் நெடுங்கண் மாதவி போன்றிவ்*
*வருந்திறல் வேனிற் கலர்களைந்துடனே*
*வருந்தினை போலு நீ மாதவி'*

என்று சொல்லிக் குருக்கத்தி நிழலையடைந்தான்- கோவலன் 'யாது நீ கூறிய உரை?' எனக் கேட்டு அவனிடம் வரவும் கோவலன் அவன் தான் எனத் தெரிந்து கொண்டு அவன் புகார் நகரம் விட்டுப் போனபின் அங்கு நிகழ்ந்தன வற்றைக் கோசிகன் சொன்னான்.கோவலனுடைய பெற்றோர் அவனுடைய பிரிவைத் தாங்காது துயர்க்கடலில் வீழ்ந்த தும், ஏவலாளர் அவனைத் தேடியலைந்ததும், இராமனைப் பிரிந்த அயோத்தி மக்கள் போலப் புகார் நகரத்தினர் துயருற்றதும்,

*வசந்தமாலை வாய் மாதவி கேட்டுப்*
*பசந்த மேனியள் படர் நோயுற்று*

*நெடுநிலை மாடத் திடைநிலத் தாங்கோர்*
*படையமை சேக்கைப் பள்ளியுள் வீழ்ந்ததும்*
*வீழ்துயருற்றோள் விழுமங் கேட்டுந்*
*தாழ் துயரெய்தித் தான் செய்திருந்ததும்*

கோசிகன் கோவலனுக்குச் சொன்னான். 'இணையடி தொழுதேன்; என் துயர் நீக்குக' என்று சொல்லி தன் மலர்க்கையால் எழுதிய முடங்கலை 'கண்மணி யனையாற்குக் காட்டுக' என்று மாதவி கொடுத்ததாகக் கோசிகன் செய்தி சொல்லி அழிதலைத் தருகின்ற உள்ளத்தையும் நிறைந்த காம நோயுமுடையாளாகிய,

*'போதவிழ் புரிகுழற் பூங்கொடி நங்கை*
*மாதவியோலை'* யைக் கோவலனிடம் நீட்டினான்.

*''அடிகள் முன்னர் யானடி வீழ்ந்தேன்*
*வடியாக் கிளவி மனக்கொளல் வேண்டும்*
*குரவர் பணியன்றியும் குலப் பிறப்பாட்டியோடு*
*இரவிடைக் கழிதற் கென் பிழைப்பறியாது*
*கையறு நெஞ்சங் கடியல் வேண்டும்*
*பொய் தீர் காட்சிப் புரையோய் போற்றி''*

என்பது மாதவியின் ஓலை. அஃது பாவமன்னிப்புக் கோரி வரையப்பட்ட முடங்கலா? அல்லது, மீண்டும் கோவலனைப் பெறச் செய்த முயற்சியா? அல்லது, இருமுது குரவர் இறந்து படுவர் என்ற அச்சத்தால் அவர் உயிர் தரிக்கச் செய்த உந்தலா? முதன் முதலாக கண்ணகி பற்றி மாதவி கோவலனிடம் குறிப்பிடுவது, முன்னவளுக்குக் கணவனுடன் வாழ்வது உரிமை; பின்னவளுக்கு அவனில்லை யெனில் பிழைப்பின்மை, என்பதை வலியுறுத்தவா? முதற் கடிதத்தைக் கொண்டு சென்ற வசந்தமாலையிடம் 'கோவலரைக் கொணர்க ஈங்கு' என்று சொன்ன மாதவி, 'வருந்துயர் நீக்குக' எனவும், 'கண்மணியனையார்க்குக் காட்டுக' எனவும், இரண்டாவது முடங்கலுடன் சென்ற கோசிகனிடம்

சொன்னுள். முதல் முடங்கலை ஏற்காது சீறின கோவலன் இரண்டாவது கடிதத்தைக் கண்டு மனம் நெகிழ்ந்தான். மாதவியின் இசைமொழி கேட்ட கோவலன் மனமுருகி 'மாதவி தன்னுற் செய்யப்பட்ட தீதிலள்; என்னுற் செய்யப் பட்ட தீது' என்று உணர்ந்தான். மாதவி மடலில் எழுதிய சொற்களிற் சில தன்னுடைய முதுகுரவர்க்கும் பொருந்தும் எனச் சொல்லி அவர்களைத் தேற்றுமாறு சொல்லிக் கோவலன் கோசிகனை அனுப்பிவிட்டு மனைவியும் கவுந்தியடி களும் இருக்குமிடம் சேர்ந்தான். மாதவி ஆடற்கலையில் வல்லவள். ஐயமில்லை. பிறிதொருவன் பால் மனம் வைத்தது போலப் பாடுவதிலும் வல்லவள். 'நான் செய்த பிழையென்ன?' என இரண்டாவது மடலில் கோவலனை வினவுகிருள். ஆடல் மகள் மாதவியைக் கண்ணகியைப் போலவே கற்புக்கரசியராய்ப் பார்க்க விரும்பின கோவலன் மனைவியை

*'பட்டாங்கில் யானுமோர் பத்தினியே யாமாகில்*
*ஒட்டேன் அரசை ஒழிப்பேன் மதுரையை'*

என்று வீறு கொண்ட காலை பார்க்கக் கொடுத்து வைக்க வில்லை. கோவலன் பாண்டியன் பால் கொலைக்களப் பட்டதுவே கண்ணகியின் சீற்றத்துக்கும் அவள் கற்பின் வலிமையை உலகறியச் செய்ததற்கும் காரணம்.

மாதவியின் முதற் கடிதத்தைப் பார்க்க மறுத்த கோவலன்பழிச் சொற்களை அள்ளியெறிந்தான். மதுரைச் செலவின்போது கோசிகன் சொல்லப் புகார் நகரத்துச் செய்தி கேட்டு, மாதவியின் மனப் புழுங்கலைச் செவியுற்று, தான் அவளுடன் கழித்த இன்ப நாள்களை எண்ணி மாதவி தீதிலள் என்றும் தனக்குச் சொல்லிக் கொண்டான். மாதவியின் வீடே அடைக்கலம் என்றிருந்த கோவலன் மாதவியினின்றும் எட்டாத தொலைவி லிருந்தால் தான் அவளை மறக்கலாம், கண்ணகியுடன் மனை யறம் நடத்தலாம் என்றெண்ணியே ஊரைவிட்டுப் போனுன். கோவலனை நன்கறித்த மாதவி எட்டிப் போய்

விட்டாலும் 'நப்பாசை' அவனை விடாது என்று நன்கறிந்தே மீண்டும் ஓலை அனுப்பினுள். ஒரு வேளை அவன் திரும்பக் கூடும் என்று அவள் எண்ணியிருக்கலாம். கடிதத்துக்குப் பாயிரம் போலமைந்த கோசிகன் வழி மாதவியனுப்பிய செய்தி துயரை நீக்கவேண்டுமென அமைந்தது. மாதவியின் மடல்கள் திரும்பவும் கோவலனைப் பெற அவள் செய்த முயற்சிகளாகும். புகார் நகரிலேயே கோவலன் இருந்திருப் பானுகில் மீண்டும் மாதவியை யடைந்து கண்ணகியின் துன்பத்துக்கு எல்லையில்லாதபடி நடந்திருக்கக் கூடும். மதுரைச் செலவின் போது வழிநடைத் துன்பத்தினிடையே இணைந்து சென்ற இன்பம் கண்ணகிக்குப் புகார் நகரில் கிடைத்திருக்காது. மாதவியின் நோக்கத்தை அவள் மடல் கள் தெள்ளத் தெளியத் தெரிவிக்கின்றன. கைப் புண் பார்க்கக் கண்ணுடி வேண்டுமா? கண்ணகியின் நல் வாழ்வைத் தொடர்ந்து பறித்துத் தான் வாழ மாதவி தன் முடங்கல்கள் வழி முயன்ருள்; தோல்வியுற்ருள்.

# படைப்பு-ஒரு நீக்ரோ உபதேசம்

அமெரிக்க நீக்ரோ ஆசிரியர் ஜேம்ஸ் வெல்டன் ஜான்சன்[1] 1871 ஆம் ஆண்டு ஜூன் மாதம் பதினேழாம் நாள் ஜாக்ஸன்வில்[2] என்ற இடத்தில் பிறந்தார். 1938 ஆம் ஆண்டு ஜூன் மாதம் இருபத்தாரும் நாள் மறைந்தார். 1894 ஆம் ஆண்டு அட்லாண்டா பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்று பிளாரிடா[3] வழக்குரைஞர் கழகத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்ட முதல் நீக்ரோ ஆவார். 1897 ஆம் ஆண்டு முதல் 1901 ஆம் ஆண்டு வரை தன் பிறந்த ஊரிலேயே வழக்குரைஞராகத் தொழில்புரிந்தார். உடன் பிறந்தார் ஜான் ரோசமாண்டுடன்.[4] இசைக் கூடங்களுக்காக இசைப்பாக்கள் எழுதியும் மக்கள் மனத்தைக் கவர்ந்த பல பாட்டுக்கள் பாடியும் உள்ளார். 1906 ஆம் ஆண்டு வெனிசூலாவிலுள்ள புவர்ட்டோ காபெல்லோ[5] என்ற ஊரில் அமெரிக்க உதவித் தூதராக நியமிக்கப்பட்டார். வெள்ளையரல்லாத மக்களின் முன்னேற்றத்துக்குப் பாடுபட்ட தேசீயக் கழகத்தை நிறுவி யவர்களில் ஜான்சனும் ஒருவராவர். 1916 ஆம் ஆண்டு முதல் 1920 ஆம் ஆண்டு வரை அக்கழகத்தின் ஆக்க வேலை அமைச்சராகவும் 1920 ஆம் ஆண்டு முதல் 1930 ஆம் ஆண்டு வரை கழக ஆட்சி அமைச்சராகவும் பணி புரிந்தார். நீக்ரோவர்களுக்கு அவர் செய்த பணிக்காக 1925 ஆம் ஆண்டு ஸ்பிங்கார்ன் பதக்கத்தைப்[6] பெற்றார். பிஸ்க் பல்கலைக் கழகத்தில் 1930 ஆம் ஆண்டு முதல் படைப்பிலக் கியப் பேராசிரியராக வேலை செய்து வந்தார்.[7] ஜான்

சனுடைய உரைநடை நூல்களிலும் செய்யுள் நூல்களிலும் 'முன்னாள் கறுப்பனின் சொந்த வரலாறு'[8] என்ற நூலும் 'ஐம்பது ஆண்டுகளும் மற்றப் பாடல்களும்'[9] என்ற நூலும் குறிப்பிடத் தக்கவை. 'அமெரிக்க நீக்ரோவர் கவிதை நூல்'[10] என்பதன் தொகுப்பாசிரியராக ஜான்ரோசமாண்ட் ஜான்சனுடன் ஜேம்ஸ் வெல்டன் ஜான்சன் பணிபுரிந்தார்.[11]

'படைப்பு—ஒரு நீக்ரோ உபதேசம்'[12] என்ற வசன கவிதையொன்று அவருடைய படைப்புக்களில் பொக்கெனப் பொறுக்கத் தக்க ஒன்றாய்—கேட்போர் மனத்தில் எண்ணத் திரைகளை எழுப்பவல்ல தென்றலாய்—உவகைக் கடலைப் பொங்கச் செய்யும் ஒளி நிலவாய்—கருத்துலகின் கண்கள் பார்க்க முடியாதபடி கவிந்து நிற்கும் இருளைப் போக்கும் கதிர்மணியாய் விளங்குகிறது. உலகைப் படைத்த கடவுள் அங்கு நடமாட மனிதனையும் படைத்த விந்தையை விரிவாகப் பேசுகிறது ஜான்சனுடைய பாடல். வெளியென்பது அளவிலடங்காதது. எண்ணின் எல்லைக்கு அப்பாற்பட்டது. 'விண்ணகத் தேவரும் நண்ணவு மாட்டா விழுப்பொரு'ளாகிய இறைவன் வெளியில் தன் கூத்தை நிகழ்த்துகின்றான் என்பதன் பொருள் என்ன? வெளியென்பது இறைவன் சமைத்த கூத்தாட்டரங்கம். வெளியிலாடும் கடவுளும் அளவிட முடியாதவன் என்று சொல்லவும் வேண்டுமோ? இறைவன் ஒருத்தன். தனிமையென்பது அவனையும் கூட வாட்டிவிட்டது போலும்! 'அங்கிங்கெனாதபடி எங்கும்' இருள் கவிந்திருந்ததைக் கண்ட கடவுள் வெளியிலிறங்கி இவ்விருளுக்கும் ஒரு மாற்று வேண்டும் என நினைத்து முறுவல் செய்தான். அதனின்றும் ஒளி பிறக்கவே இருள் தானே ஒருபுறம் ஒதுங்கி நின்றது. இறைவன் மகிழ்ந்தான். அம் மகிழ்ச்சியில் ஒளியைப் பற்றிப் பந்தாய்ச் சுருட்டிக் கதிரவனைப் படைத்தான். படைத்த ஞாயிற்றை மேலே விண்ணில் வைத்தான் கடவுளும். வெயிலவனைச் செய்யும் போது சிந்திய ஒளியை

எடுத்துத் திங்களையும் விண்மீன்களையும் புனைந்து இரவில் உலவ விட்டான். பின் இருளுக்கும் ஒளிக்கும் நடுவே உலகை எறிந்து 'இது நன்று' என்றான் கடவுள். இரு மருங்கும் இருளும் ஒளியும் கவரி வீச, தலையைச் சுற்றித் தார கைக் கொத்துக்கள் மின்ன. நிலப்பரப்பில் கடவுள் நடந்தான், காலடி பதிந்த இடங்கள் பள்ளத்தாக்குகளாயும் உயர்ந்த பகுதிகள் மலைகளாயும் மாறின. உலகை மீண்டும் இறைவன் உற்று நோக்கினான். வெப்பம் நிறைந்த பொட்டல்காடு. இறைவன் எச்சிலை உமிழ்ந்தான். எழுகடல்கள் எழுந்தன. இவ்வாறு தொடர்ந்து நடந்தன இறைவன் படைப்புக்கள். முடிவு என்ன வென்பதைக் கவிஞரின் பாடலைப் படித்துத் தெரித்து கொள்ளுதல் நன்று.

உலகம் உயர்ந்தோர் மாட்டே. எப்பகுதியில் வாழ்ந் தாலும், எந்நிறத்தவராயினும், எக்குடியில் பிறந்தாலும், எந்நிலையிலிருந்தாலும், உயர்ந்தோர் உள்ளம் இயங்குவ தென்னவோ ஒரே தன்மையில் தான். கற்பனையில் கூட ஒற்றுமையைக் காண முடிகிறது. பல பெயர்கள் கொண்ட கடவுள் உலகைப் படைக்கவில்லை என்று சொல்லும் சமயத் தினரும் உண்டு. ஆனால் உலகின் சமயங்களுள் பெரும் பாலானவை உலகம் கடவுளின் படைப்பே என்று முழங்குகின்றன. 'உலகியற்றியான்' (குறள், 1062) என்று திருவள்ளுவர் எவ்வித ஐயப்பாட்டிற்கிடமின்றிக் கடவுளைக் குறிப்பிடுகிறார். கடவுளின் உலகப் படைப்பு விஞ்ஞான வாதத்துக் குகந்ததா என்பது இங்கு வேண்டப் படாதது. கவிதைகள், கதைகள், நம்பிக்கைகள் என்பவை களை விஞ்ஞானச் சோதனைக் கூடத்துக்குள் புகுத்தி அலசிப் பார்க்க முடியாது. கற்பனை மனத்தின் தங்கு தடையற்ற இயக்கம். அதை யாரும் கட்டுப் படுத்த முடியாது. அமெரிக்க நீக்ரோ கவிஞர் இறைவன் படைப்பைப் பற்றிய தன் பாடலில் புகுத்தியுள்ள கற்பனையும் கருத்துவளமும் எந்நாட்டவரும் உரிமை கொண்டாடும் அளவுக்கு அவரை உயர்த்தியுள்ளன. நினைத்துப் பார்க்க வொண்ணாதவை

களையும் நினைக்கச் செய்யும் வல்லமை படைத்தவர் சொல் லே ருழவரன்ருே!

அக்குறமகளை மணந்த அச்சிறு முருகன் அடியார்க் கெளியன். ஆனுல் வானுற ஓங்கி நிற்கும் மலைகளைப் பந்தாடுபவன்; ஏழ்கடல்களையும் வற்ற வைப்பவன். அவனுல் ஆகாத தொன்றுண்டோ? குமரகுருபரர் முத்துக் குமாரசாமி பிள்ளைத்தமிழில் முருகனுடைய பிள்ளை விளையாட் டொன்றைப் பாடுகிருர். எட்டுத் திசைகளிலுமுள்ள யானை களைப் பிடித்து அவன் அவற்றை ஒன்ருேடொன்று மோத விடுகிருன்; ஆகாய மண்டலத்தோடு சூரிய மண்டலத்தை அவன் வளைத்து இணைக்கிருன்; தன் திருத்தந்தையார் வில்லாகக் கொண்ட மேருமலையைத் தண்டாயுதமாகக் கொண்டு திரிகூட மலையுடன் சாடவிடுகிருன்; வலிமையுள்ள யானையைக் கொண்டு மேக படலத்தினின்றும் நீரை முகந்து மேல் கடலினைக் கீழ் கடலினுள் புகவிடுகின்ருன். இவ்வாறு எட்டுத் திக்குகளிலும் சேனுதிபதிக் கடவுள் விளையாடு கின்ருன். கற்பனை எவ்வாறெல்லாமோ புகுந்து விளையாடு கின்றது. குமரகுருபரர் பாடுகின்ருர் :

*கைக்கெட்டு மெட்டுக் களிற்றைப் பிடித்தக்*
*களிற்ருேடு முட்டவிட்டுக்*
*ககனவட் டத்தினெடு பரிதிவட் டத்தைவளை*
*திகிரிவட் டத்திலிட்டு*
*முக்கட் டிருத்தாதை கோதண்ட மெனவைத்த*
*வேதண்ட மாதண்டமா*
*மூதண்ட கூடந்திரி கூடத் தொடுஞ்சாடி*
*மூரிக் கடாசலமவன்*
*மெய்க்கிட்ட சட்டைக்கு நேரிட் டிடப்பட்ட*
*மேகபட லத்துமொண்டு*
*மேல்கட லினைப்பெருங் கீழ்கடல் புகப்பெய்து*
*விளையாட்டு வீரர்களொடுந்*

*திக்கெட்டும் விளையாடு சேனு பதிக்கடவுள்*
*செங்கீரை யாடியருளே*
*செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள*
*செங்கீரை யாடியருளே.*

படைக்கும் உலகைப் பந்தாடுவது படைப்போனுக்கு எளிது தானே! படைப் பென்பதே இறைவன் கையில் கலையாய் மிளிர்ந்தது. இருளுக்கு எதிராய் ஒளியைப் புகுத்தி, சுடுகாடாய் கிடந்த நிலப்பரப்பில் மலைகளையும் பள்ளத்தாக்குகளையும் ஆறுகளையும் உண்டாக்கி, ஊர்வன, நடப்பன, பறப்பன என்ற உயிரினங்களுக்கு வாழ்வளித்து, இன்னும் எத்தனையோ திருவிளையாடல்கள் புரிந்து இறுதியில் இவையனைத்தையும் ஆட்டிப் படைக்கும் ஒருவனையும் கடவுள் படைத்தான். கவிஞர் வாய்ச் சொல்லிலே கவினுற அமைந்துள்ளது அவரது 'படைப்பு—ஒரு நீக்ரோ உபதேசம்' என்ற கவிதையில்.

*கடவுள் புறத்தே வெளியில் எட்டெடுத்து வைத்துச்*
*சுற்றிலும் நோக்கினன்.*
*'ஈதென்ன தனிமை?*
*எனக்கென உலகம் ஒன்று உண்டாக்குவேன்,'*
*எனச் சொன்னன்.*

*கடவுளின் கண்கள் கண்ட இடமெங்கும்*
*நீக்கமற நிறைந்து நின்றது இருள்.*
*ஆங்கேயோர் நாரத்தைச் சதுப்பினிலே*
*நூறு நள்ளிரைவையும் நொறுக்கும் கறுப்பாம்*
*அவ்விருள்.*

*முனைவன் அதுபோழ்து முறுவல் செய்தான்.*
*ஒளி பிறந்து*
*ஒருபுறம் இருள் சுருண்டது;*
*மறுபுறம் தகத்தகாயமாய் நின்றது ஒளி.*
*"இது நன்று", என்று இயம்பினன் கடவுளும்.*

பின்னர் எட்டிப்பிடித்துக் கைகளில் எடுத்தான் கடவுள் அவ்வொளியை.
கற்றையாம் அவ்வொளியினைக் கைகளில் சுருட்டிக்
கதிரவனைப் படைத்தான் கடவுள்.
வெந்தழலைக் கக்கி விண்ணிலே
உலவவிட்டான் அப்பரிதியை.
ஞாயிற்றைச் செய்தபின், மிஞ்சிநின்ற ஒளியினை
ஒன்ருய்த் திரட்டி, ஒரு பந்தாய்ச் சுருட்டி,
இருள்மீது எறிந்து,
இரவிலே தொங்கவிட்டான் திங்களையும் உடுக்களையும்.
அதன் பின்னே கீழே,
ஒளிக்கும் இருளுக்கும் நடுவில்;
உலகத்தை எறிந்து ஊடாடவிட்டு,
"இது நன்று", என்று இயம்பினுன் கடவுளும்.

இறைவனே பின்னர் இறங்கிவந்தான் கீழே.
வலப்புறம் ஞாயிறு;
இடப்புறம் திங்கள்;
தலையைச் சுற்றித் தாரகைக் கொத்து;
மாணடிக் கீழே மண்டிணி ஞாலம்.
நடந்தான் கடவுளும். நடந்தவழி
காலடிபட்டுப் பதிந்தன பள்ளத்தாக்குகள்;
துருத்திக்கொண்டு மேலெழுந்தன மலைகள்.
பின்னர்ச் சற்றே நின்று நோக்கினுன்.
தரையிலே புழுதியும் வெம்மையும் தான்.
எனவே உலகத்தின் ஒருபுறம் ஒதுங்கி
எச்சில் உமிழ்ந்தான்; எழுகடல் எழுந்தது;
கண்களை இமைத்தான்; மின்னியது மின்னல்;
கைகளைத் தட்ட இடிகள் இடித்தன;
தரைக்கு மேல் நின்ற நீர் தரைக்கு வந்தது;
தண்மை தரும் நீர் கீழிறங்கியது;
பசும்புல் தலை காட்டிற்று;
சின்னஞ்சிறு சிவப்பு மலர்கள் சிரித்தன;

வானுற ஓங்கி வளர்ந்தது தேவதாரு;
தேக்கு மரங்கள் நீட்டி நின்றன கிளைகளை;
குழிகளில் தேங்கி நின்றன ஏரிகள்;
கடலுக்கு விரைந்தன ஆறுகள்.
இறைவன் இதழ்கள் அரும்பின.
வானவில் தோன்றி அவன்
தோளைச் சுற்றித் தொங்கியது.

பிறகு கடவுள் தன் தோள்பட்டையை உயர்த்திக்
கடலுக்கு மேலும் தரைக்கு மேலும்
கையை ஆட்டி 'வருகவே! வருகவே!' என்று
சொன்னான்.

கடவுள் கையைக் கீழே போடுமுன்,
மீன்களும் கோழிகளும்,
விலங்குகளும் பறவைகளும்,
ஆறுகளிலும் கடல்களிலும் நீந்தின;
காடுகளிலும் தோட்டங்களிலும் அலைந்தன;
சிறகுகளினால் காற்றை அசைத்தன.
"இது நன்று", என்று இயம்பினான் கடவுளும்.

தான் படைத்த எல்லாவற்றையும்
சுற்றிக் கடவுள் நடந்தான்.
அவையனைத்தையும் கூர்ந்து பார்த்தான்.
தான் படைத்த காய்கதிர்ச் செல்வனைக் கண்டான்;
தண்ணொளி தரும் வெண்ணிலவைக் கண்டான்;
விண்மீன்களைக் கண்டான்;
உயிரினங்களுடன் கூடிய
தன்னுடைய உலகத்தைப் பார்த்தான்.
"இன்னும் நான் தனியனே", என்று கடவுள்
சொன்னான்.

பிறகு கடவுள் ஒரு குன்றின் ஓரத்தில் உட்கார்ந்தான்.
அங்கு அவனால் சிந்திக்க முடிந்தது.
ஆழ்ந்து அகன்ற ஆற்றங்கரையில் அமர்ந்து

ஒரு கையை மற்றொரு கையில் புதைத்து
நினைத்து நினைத்துப் பார்த்தான்.
"நான் என்னை மனிதனுக்கிக் கொள்வேன்"
என்ற நினைவில் முடிந்தது அச்சிந்தனை.

ஆற்றின் படுகையிலிருந்து
கடவுள் களிமண்ணைத் தோண்டி எடுத்து
ஆற்றின் கரையருகில்
தன் வடிவைக் குறுக்கி மண்டியிட்டான்.
அந்தோ! வலிமை படைத்த பெருமான்
சூரியன் என்ற சுடர் விளக்கேற்றி
வானவீதியில் வலம் வரச்செய்த வள்ளல்!
இரவின் மூலை முடுக்கெல்லாம்
விண்மீன்களைச் சிதறிய இறைவன்!

உலகை உள்ளங்கையில்
உருண்டையாய் உருட்டிய மாதேவன்!
குழந்தையைக் கொஞ்சக் குனியும் தாய்போலப்
புழுதியில் மண்டியிட்டுக்
களிமண் உருண்டையைப் பிசைந்து பிசைந்து
தன்னையொத்த உருவம் சமைத்தான்.
சமைத்துப் பின் ஊதினன் அதனுள் உயிராம் மூச்சை.
வாழும் உயிராய் வந்த மனிதன் கதை இதுவே.
ஆமென்! ஆமென்!

## குறிப்புகள்

1. ஜேம்ஸ் வெல்டன் ஜான்சன் - James Weldon Johnson
2. ஜாக்ஸன் வில் – Jacksonville, Fla.
3. பிளாரிடா - Florida
4. ஜான் ரோசமாண்ட் - John Roasamond
5. புவர்ட்டோ காபெல்லோ - Puerto Cabello

6. Sbringarn Medal
7. படைப்பிலக்கியப் பேராசிரியர் பிஸ்க் பல்கலைக் கழகம் - Professor of Creative Literature at Fisk University
8. 'முன்னாள் கறுப்பனின் சொந்த வரலாறு' - The Autobiography of an Ex-coloured Man
9. ஐம்பது ஆண்டுகளும் மற்றப் பாடல்களும் - Fifty Years and Other Poems
10. அமெரிக்க நீக்ரோவர் கவிதை நூல் - The Book of American Negro Poetry
11. Encyclopedia Americana
12. படைப்பு-ஒரு நீக்ரோ உபதேசம் - The Creation-A Negro Sermon

# ஆங்கிலப் பாவில் தமிழ் இலக்கியப் பாடல்கள்

"சாகும் மக்களின் மொழியை ஒருவேளை சாகவிடலாம். ஆனால் தமிழ் இனத்தைச் சாகும் இனம் என்று சொல்ல முடியாது. கடவுள் காப்பாராக! தமிழர்கள் தம் மொழியைப் பற்றி நாணுறுவதை விட்டுவிட வேண்டும்."[1] இவ்வறிவுரையை—அறவுரையை வழங்கியவர் ஜார்ஜ் உக்ளு போப் என்ற அறிஞர். அவர் 1820 ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் இருபத்து நான்காம் நாள் நோவா ஸ்காஷியாவுடன் வாணிபம் செய்து கொண்டிருந்த ஜான் போப் என்ற ஸ்காட்டிஷ் வணிகருடைய மகனாய்ப் பிறந்தார். வெஸ்லியப் பாதிரியாராய்த் தமிழ்நாட்டுக்கு வந்த ஜார்ஜ் உக்ளு போப் தமிழை நன்கறிந்த புலவர்களிடம் துறைபோகக் கற்றுப் புலமை பெற்றார். 1841 ஆம் ஆண்டு சாயர்புரத்தில் கிறிஸ்துவ சமயப் பரப்புப் பணியில் ஈடுபட்டார். 1843 ஆம் ஆண்டு அவ்வூரில் அதே பணியில் ஈடுபடுவர்களுக்கான பயிற்சி நிலையம் ஒன்றை நிறுவி அதைத் திறம்பட நடத்தினார். பின்னர் அது கல்லூரி யாயிற்று. பெரிய புலவர் என்பதோடன்றி மாணவர்களை நல்ல கட்டுப் பாடுடன் வளரச் செய்தார். மந்தமான மாணவனையும் ஊக்குவித்துப் பிற மாணவர்களுக்கொப்ப உயர வழி செய்து கொடுத்தார். "சீரிய உணவு, சீரிய ஒழுக்கம், சீரிய பிரம்படி"[2] என்பதைத் தாம் ஆசிரியராக இருந்த பொழுது அவர் கடைப்பிடித்து நடந்து வந்தார். தஞ்சாவூர்,

ஒற்றைக்கல் மந்து என்ற உதகமண்டலம், பங்களூர் ஆகிய இடங்களில் வாழ்ந்து 1880 ஆம் ஆண்டு இங்கிலாந்துக்குச் சென்று ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் தமிழ் மொழிப் பேராசிரியராய்ப் பணியாற்றினர். அவர் எழுதிய நூல் கள் பல. இயேசு நாதரின் ''மலை மேலாற்றிய சொற் பொழி''வை திராவிட மொழிகள் நான்கிலும் மொழி பெயர்த் தாரென்றால் அவருடைய பன்மொழிப் புலமையை என் னென்று சொல்வது? லத்தீன் மொழியிலும் அவருக்குப் புலமை இருந்தது. 'யார், எவர்' என்ற ஓர் அடங்கல் புத்தகத்தில் 'திரு. போப்பின் பொழுது போக்கு தமிழாகும்'[8] என்று எழுதப்பட்டுள்ளது. போப்பின் புலமை யொருபுற மிருக்க, பொழுது போக்காகவும் அவர் தமிழைப் படித்தார் என்றால் அவருடைய முழுவாழ்வும் தமிழுக்கு ஒதுக்கப் பட்டது என்பது தானே பொருந்தும்.

போப்பைக் கடவுளின் மனிதர் என்பது உண்மையை யொட்டியதாகும். எனவே தான் போப்பையர் என்று மக்கள் போற்றினர்கள்.

*''பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்*
*ஐயர் யாத்தர் கரணம் என்ப,''*

என்பது தொல்காப்பியச் சூத்திரம். தமிழகச் சான் ரோரை—நெறிவகுத்தவரை—ஐயர் என்று சொல்வதுதானே பொருந்தும். இறைபணியுடன் தமிழ்ப்பணியை இணைத்துத் தமிழுக்குச் செய்த இவ்வாங்கிலப் பெருமகனரின் தொண்டு தமிழ் மொழியை உலக இலக்கிய அரங்கில் ஓர் உயரிடம் பெறப் பெரிதும் துணை செய்தது. இலக்கியம், கலை, தத்துவம்—இன்னும் எத்தனையோ—இவையனைத்தும் தமிழ் மொழியை வளம் செய்கின்றன என்பதை எடுத்துக் காட்ட உலக அறிஞர்களின் கண்களை மறைத்த கட்படாத்தை அறுத்தெறிந்த ஐயரின் சீரிய பணிக்கு அறிவுலகம் தலை வணங்கி நிற்கிறது.

போப்பையர் நூல்கள் பெரும்பாலும் ஆங்கிலத்தில் எழுதப்பட்டன. ஐயருடைய சிறந்த பணிகள் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் பணியாற்றிய பொழுது எழுந்தன. உலகப் புகழ்பெற்ற திருக்குறள், திருவாசகம், நாலடியார் ஆகிய நூல்கள் முழுவதையும் புறப்பொருள் வெண்பாமாலையின் சில பகுதிகளையும் போப்பையர் மொழி பெயர்த்தார். திருக்குறள், திருவாசகம் மொழிபெயர்ப்பு நூல்களில் காணப்படும் முன்னுரைகளும், விளக்கவுரைகளும், சொல்லடைவுகளும் ஐயரின் புலமையைப் பறைசாற்றுகின்றன. மேற்கோள்கள் காட்டும் பொழுது தமிழ்நூல்களிலிருந்து மட்டுமின்றி ஷேக்ஸ்பியர், டென்னிசன் போன்ற ஆங்கிலக் கவிஞர்களின் நூல்களிலிருந்தும் தம் நூல்களில் மேற்கோள்களைப் பெய்துள்ளார். இம்முறை தமிழ் மொழியின் இலக்கிய வளத்தை வெளி நாட்டார் அறிந்து கொள்ளப் பெரிதும் உதவியது. போப்பையர் காலத்துக்குப் பின் திருக்குறள், திருவாசகம் என்பவைகளின் ஆங்கில மொழிபெயர்ப்புகள் பல வந்துள்ளன. எத்தனைதான் அவை அரச நடை போட்டு நடந்தாலும் போப்பையரின் நூல்களின் மலையுச்சிகளை அண்ணாந்து பார்க்கலாமே யொழிய அடைதல் முடியாது. ஆங்கிலத்தில் காணமுடியாத அருஞ் சொல்லாட்சியை அவர் தமிழில் கண்டார். தமிழ்நாட்டுத் தோட்டங்களில் மாமரங்கள் பூத்து நிற்பது வரவிருக்கும் வளத்தைக் கட்டியங்கூறி நிற்கும். கொஞ்ச காலம் கழித்துச் சென்று கூர்ந்து நோக்கினல் மாம் பிஞ்சுகளைக் காணமுடியும். மீண்டும் கால இடைவெளியுடன் சென்ருல் விம்மிப் புடைத்துத் தொங்கும் மாங்காய்களைப் பார்க்கலாம். மாங்காய்கள் பின்னர் மாங்கனிகளாகின்றன.

''ஆங்கிலம் அறியா வளத்தைத் தமிழில் காணலாம். பூத்தபின் பிஞ்சு. திரட்சியுற்று முழுமை பெறுதது காய். பழுத்தது கனி,''[4] என்று போப்பையர் சொல்கிருர். ஆங்கிலத்தில் 'டெண்டர் மாங்கோ' என்றும், 'அன்ரைப் மாங்கோ' என்றும் 'ரைப்மாங்கோ'[5] என்றும் சொல்லித்

தான் அவதிப்பட முடியும். இதை நன்குணர்ந்த போப்பை யர் தமிழின் நிறைக்குத் தலை வணங்கி நின்றார்.

'தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் தோன்றாமை நன்று,'

என்ற தமிழ்மறைக் கேற்பப் போப்பையர் தோற்றம் புகழொடு மண்டிக் கிடந்தது. அவருடைய திறமான புல மைக்குத் திருக்குறள், திருவாசகம் மொழி பெயர்ப்புகள் சான்று பகர்ந்து நின்றாலும் புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலை ஆகிய மொழி பெயர்ப்புகள் தமிழ் நாகரிகத் தொன்மையைச் சரிவர மதிப்பீடு செய்ய உதவும் கருவூலங் களாகும். போப்பையரின் இலக்கியப் பணியை ஒரு சிறு கட்டுரையில் தொட்டுத்தான் காட்டலாமேயன்றி முற்றும் காட்டமுடியாது. திருக்குறளின் பெருமையையும் திருவள்ளு வரின் சிறப்பையும் கூறப்போந்த போப்பையர் பிறநாட்டு அறிஞர் காட்டிய புகழ் மாலையையும் மறந்தாரில்லை. கிரௌல் என்ற ஜெர்மானிய அறிஞர் திருக்குறளை 'வெள்ளிப் பேழை யில் அமைத்த தங்க மாம்பழம்'[6] என்று சொன்னார். அதை உலக முழுவதும் பரப்பியவர் போப்பையர்.

திருவள்ளுவருக்குத் தம் ஆங்கில மொழி பெயர்ப்பில் போப்பையர் ஒரு பாமாலை சூட்டி மகிழ்ந்தார். தமிழில் நான்கு வகைப் பாவினங்கள் உண்டு. அவையாவன வஞ் சிப்பா, கலிப்பா, ஆசிரியப்பா, வெண்பா. அதே போன்று ஆங்கிலத்தில் 'சான்னெட்'(Sonnet) என்ற ஒரு வகைப்பா உண்டு.ஐரோப்பாவிலிருந்து அப் பாவகை ஆங்கில மொழிக்கு வந்தது. ஆங்கிலப் பெரும் புலவர் 'சான்னெட்'டுக்கு அடி மையாகாத புலவனே இல்லையெனலாம். ஷேக்ஸ்பியர், மில்ட்டன், கீட்ஸ், வேர்ட்ஸ்வொர்த் என்ற புலவர்களையும் சான்னெட் என்ற மங்கையின் மோடி கிறங்கச் செய்தது. தமிழ் மொழியில் பாடல்கள் அடிகளின் தொடக்கத்தில் எதுகை பெறும். 'சான்னெட்' பதினான்கு வரிகளாலமைந்த பாடல். முதல் எட்டு வரிகளை ஒரு பிரிவாகவும் ஈற்று ஆறு

வரிகளை மற்றொரு பிரிவாகவும் கொள்வது மரபு. ஐரோப்பாவில் முதலெட்டு வரிகளின் ஈற்று எதுகை, அ, ஆ, ஆ, அ; அ, ஆ, ஆ, அ; இ, ஈ, உ; இ, ஈ, உ; என்ற வாய்பாடுக்கேற்ப அமைந்தது. பின்னர் இப்பதினான்கு வரிகளும், 'அ, ஆ, அ, ஆ; இ, ஈ, இ, ஈ; உ, ஊ, உ, ஊ, எ, ஏ' என்ற வாய்பாடுக்கேற்ப ஈற்றில் எதுகை பெற்றன. போப்பையர் நூல்களில் மூன்று 'சான்னெட்' டுகளைக் காண்கின்றோம். அவைகளில் ஒன்று திருவள்ளுவருக்குச் சூட்டிய பாமாலையாகும். 'உலகப் பொது மகனின் புலவன்'' என்ற தலைப்பில் எழுந்த பாடல் அது. அந்த 'சான்னெட்' ஐரோப்பாவில் வழங்கியதைப் பின்பற்றி, 'அ, ஆ, ஆ, அ; அ, ஆ, ஆ, அ; இ, ஈ, உ; இ, ஈ, உ' என்ற வாய்பாட்டில் அமைந்தது. மற்ற இரண்டு 'சான்னெட்' டுகளும் புறநானூற்றுப் பாடல்களின் மொழிபெயர்ப்பாகும். இவைகளில் ஒன்று கணியன் பூங்குன்றனின் பாடல் (புறம் 192) 'மலர்கள் நிறைந்த மலையின் பாடகன்'' என்று அவர் பெயரையே ஆங்கிலத்தில் போப்பையர் மொழி பெயர்த்துள்ளார். பதின்மூன்று வரிகளுள்ளடங்கிய கணியன் பூங்குன்றன் பாடலைப் பதினான்கு வரிகளடங்கிய 'சான்னெட்' டாக போப்பையர் மொழி பெயர்த்தார். இந்த சான்னெட் ஐரோப்பிய வாய்பாடுக்கொப்ப அமைந்துள்ளது. மூன்றாவது 'சான்னெட்' பதினான்கு வரிகளுள்ள கழைதின் யானையார் என்ற புலவரின் ஓரி புகழைப்பாடும் பாடலின் மொழி பெயர்ப்பு. (புறம் 204). 'கருப்பங்கழிகளைத் தின்னும் யானைக்கு உரியவர்'' என்று அவர் பெயரைப் போப்பையர் குறிப்பிடுகிறார். 'கடலும் சிற்றருவியும்' என்ற தலைப்பில் இப்பாடல் எழுதப்பட்டுள்ளது. இந்த 'சான்னெட்டில் 'அ, அ, ஆ, ஆ; இ, இ, ஈ, ஈ, உ, உ, ஊ, ஊ, எ, எ' என்ற வாய்பாட்டுக்கேற்ப தாம் விரும்பிய வகையில் அமைத்திருக்கிறார்.

''தமிழ்ப் புலமை வறுமைக்கு நேர்பாதை. நமது இந்திய அரசோ, பல்கலைக் கழகங்களோ தமிழிலக்கியத்தின் மதிப்பை உணரவில்லை. எனவே தென்னிந்திய இலக்கியப்

படைப்புக்களைப் பயில்வார் கடலுக்குள் மூழ்கிக்கிடக்கும் முத்துக்களைத் தேடுவாரையொப்பர்,'[10] என்பவை போப் பையர் பொன் மொழிகள். முத்துக்களை முத்துக்களாகவே அளிக்க வேண்டும் என்ற குறிக்கோளை உடையவராதலால் ஆங்கில 'சான்னெட்'டுகள் என்ற உருவத்தில் தமிழ் இலக்கியப் படைப்புக்களை வழங்கிய போப்பையரின் பெருந்தகைமைதான் என்னே!

### குறிப்புகள்

1. "The speech of a dying people may, perhaps, be allowed to die. But this cannot be said of the Tamil race. Heaven forbid!......Let the Tamilians cease to be ashamed of their vernacular."—G. U. Pope.
2. "Good food, good teaching, good caning."—G. U. Pope.
3. Mr. Pope's recreation is Tamil.
4. "Tamil has a wealth of words which English lacks; thus in its first stage new from the blossom, the apple is a பிஞ்சு; developed but still immature it is காய்; when fully ripe it is கனி.;—G. U. Pope.
5. Tender mango, unripe mango and ripe mango.
6. "An apple of gold in a network of silver,"
7. Bard of Universal Man.
8. Singer of the flowery hill.
9. Owner of the elephant that chews the sugar cane.
10. "Tamil scholarship is a direct road to poverty, Neither does our Indian Government nor do our universities fully recognise the value of Tamil literature; and so those who spend their lives in the study of the great south Indian classics must resemble men seeking for pearls under waters."—G. U. Pope.

# வரதராசன் நூல்கள்

புகழ்பெற்ற ஆங்கில நாடகாசிரியர் ஜார்ஜ் பெர்னார்ட்ஷா மு. வரதராசனுக்குப் பிடித்தமான ஆசிரியர்களுள் ஒருவராவர். 'அறிஞர் பெர்னார்ட்ஷா' என்ற தலைப்பில் அளவில் சிறிய வரலாறு ஒன்றை வரதராசன் எழுதியுள்ளார். ஆய்வாளர்கள் தாங்கள் புறக்கணிக்கப்பட்டு விட்டதாகக் கருதாதிருக்க உதவும் வகையில் 'செயின்ட் ஜோன்' என்ற நாடகத்துக்கு வரைந்த முன்னுரையில் ஜார்ஜ் பெர்னார்ட்ஷா பின் வருமாறு எழுதுகிறார்: ''ஐரோப்பிய—அமெரிக்கத் தலை நகரங்களிலிருந்து வெளியாகும் பத்திரிகைகளில் நாடகம் பற்றி வரையப்படும் மதிப்பீடுகளில் பத்துக்கு ஒன்பது பகுதிகள் அந் நாடகத்தின் குழம்பிய பொழிப்புரைகளேயாகும். என்னைப் பற்றிய வீண் கண்டனம் பற்றி எனக்கு மனக்கசப்பு ஏதுமில்லை. கணக்குத் தெரியாத மனிதர்களைக் காணாத எயின்ஸ்டீனைப் போன்று நானும் அவர்களை இனிமேலும் கண்டுகொள்ள மாட்டேன். நுழைவுக் கட்டணம் செலுத்தி நாடக சாலைக்குள் செல்பவர்க்காகவே இலக்கிய மணம் கமழும் வகையில் நான் எழுதுகிறேன். ஏனெனில், இன்ப துன்பச் சூழல்களில் முடியும் உயர்தனிச் சிறப்பு வாய்ந்த நாடகத்தை அவ்வவற்றிற்காகவே அவர்கள் விரும்பிக் காண்கின்றனர். அவ்வத் துறையில் சிறந்து நலமுற அமைந்த அமைப்புக்காகவே அதைக் கண்டு களித்து வீடு சேரக் கடைசி ரயில் வண்டியையோ பேருந்துவையோ தவற விடக் கூடாதே என்ற கவலையில் தம்விருப்பத்துக்கு

மாருக அவர்கள் செல்கின்றுர்கள். எட்டு அல்லது எட்டரை மணிக்கு இரவு உண்டி நேரம் என்றுல் முதல் அரை மணி நேர ஆட்டம் கழிந்துவிடும். எனவே, காலங் கழித்து வராமல் ஓரிடத்தைப் பெற நாடகசாலைக்கு வெளியே உதறும் குளிரில் 'கியூ' வரிசையில் மணிக்கணக்காக அவர்கள் கால் கடுக்க நிற்கின்றனர்.'' பெர்ஞர்ட் ஷாவின் கூற்று ஒரு வகையில் வரதராசனுடைய நூல்களுக்கும் பொருந்தும் என்பதைப் பின்னர் பார்க்கலாம்.

வரதராசனுடைய நூல்கள் கீழ்க் கண்ட பிரிவுகளில் அடங்கும்: (1) சிறுவர் இலக்கியம்; (2) சங்க இலக்கியம் பற்றிய கட்டுரைகள்; (3) பிற கட்டுரைகள்; (4) மொழியியல்; (5) இலக்கிய ஆராய்ச்சி; (6) நாடகங்கள்; (7) நெடுங்கதைகளும் சிறுகதைகளும்; (8) திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்—திருக்குறள் தெளிவுரை; (9) வாழ்க்கை வரலாறு; (10) தமிழ் இலக்கிய வரலாறு; (11) சிலப்பதிகார ஆசிரியர்—பாத்திரங்கள் பற்றிய நூல்கள். வரதராசனுடைய நூல்கள் எவ்வகையைச் சார்ந்தன வாயினும் சங்க இலக்கியம் பெருமளவு அவரை ஈர்த்துள்ளதைக் காணலாம். 'சங்க இலக்கியம்' என்ற தொடரில் தொல்காப்பியம், திருக்குறள், சிலப்பதிகாரம் என்ற நூல்களையும் இணைத்துக் கொண்டால் ஆராய்ச்சிக்கு ஆதரவாயிருக்கும். சங்க இலக்கியம் வரதராசனைப் பெருமளவு கவர்ந்தன வென்றுல் பிற நூல்கள் தம்முட் புகாதவாறு இரும்புத் திரையிட்டு அவர் மனத்தை மறைத்தார் என்று கொள்ளுதல் பொருந்தாது. இலக்கிய ஆராய்ச்சிக்கு மேலை நாட்டு நூல்கள் அவர்க்குப் பெரிதும் உதவின. தமிழின் பால் அவர் கொண்ட அன்பும் பற்றும் ஓங்கி உயர்ந்து நின்றது. தமிழ்ப் பண்பாட்டின் சிறப்பை விளக்கி, தமிழ் இலக்கிய நூல்களின் அருமையையும் பெருமையையும் பலரும் உணர—அறியச் செய்வதிலே அவர் ஈடுபட்டார். இம் முயற்சியில் அவர் வெற்றியும் கண்டார். இலக்கியப் பயிற்சியிலும் காய்தல்—உவத்தல் இல்லா மனப்பான்மை

ஆ—15

இன்றியமையாதது. எனினும், ஆசிரியன் தகுதி மங்கும் வகையில்—அவன் புலமைக்குக் களங்கம் ஏற்படும் முறையில் ஆய்வு அமைதல் கூடாது. அத்தகைய ஆய்வு பயனில்லாதது. ஷேக்ஸ்பீயரின் ஆய்வாளர்களைப் பற்றி காலரிட்ஜ் எழுதுவதாவது: ''ஷேக்ஸ்பீயரைப் பற்றி ஆய்வில் அன்பு கலந்த வணக்கம் மிளிரும் ஆய்வே உண்மையானது என்று உறுதியாகச் சொல்லலாம். தலை தாழ்த்தி வணங்காது வில்லியம் ஷேக்ஸ்பீயரின் பெயரை நாவில் தவழவிடும் ஆங்கிலேயன் ஆய்வாளன் என்ற தகுதி பெற அருகதையற்றவன்.''[1] வரதராசன் காலரிட்ஜ் காட்டிய வழியில் நடந்தார் என்று கொள்ளலாம். தமிழ் இலக்கியத்தில் ஆழ்ந்து தோய்ந்து தன்னை இழந்தவர் வரதராசன். அவருடைய நூல்களைப் படிப்போர்க்கு இந்த உண்மை விளங்கும். ''அதனுடைய கவிதை உருவில் தமிழ் கிரேக்கத்தினும் செம்மையானது; துல்லியமானதும் கூட. பிற இலக்கியத் தொடர்புகளோடும் அதனுடைய இருவடிவங்களிலும் லத்தீனைக் காட்டிலும் அளவில் விஞ்சி நிற்கிறது,''[2] என்று வின்ஸ்லோ தம்முடைய தமிழ்-ஆங்கில அகராதியின் முன்னுரையில் எழுதுகிறார். எனவே, பிறமொழியினரொருவரைக் காட்டிலும் தமிழ் மொழியின் இலக்கியச் செல்வத்தைத் தாய்மொழியாக நுகர்ந்து வரதராசன் அனுபவித்ததில் வியப்பொன்றுமில்லை.

மொழியை ஒரு வகையில் நாகரிக வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் அளக்கும் கருவி எனக் கொள்ளலாம். பேசும் மக்களின் அறிவாற்றலை அம்மொழியின் இலக்கியம் இயம்பி நிற்கிறது. 'இலக்கிய மரபு' என்ற நூலில், ''தமிழிலக்கியம் மூவாயிரம் ஆண்டுகளாக இருந்து வரும் மரபுகளை உடையது எனலாம். ஏனெனில், இன்று உள்ள பழைய இலக்கண நூலாகிய தொல்காப்பியம் இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முற்பட்டது. அந்நூல் இலக்கிய மரபுகளைப் பற்றிக் கூறியுள்ளது.

*நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்*
*பாடல் சான்ற புலனெறி வழக்கம்,*

(தொல்காப்பியம், பொருள், அகத்திணையியல், 53)

என்று தொல்காப்பியனார் கூறியது இலக்கிய மரபையே ஆகும்,

*மரபுநிலை திரிதல் செய்யுட்கு இல்லை*
*மரபுவழிப் பட்ட சொல்லி னான*
*மரபுநிலை திரியின் பிறிதுபிறி தாகும்,*

(தொல்காப்பியம், பொருள், மரபியல், 91,92)

என்ற விதிகளால் இலக்கியத்திற்கு மரபு இன்றியமை யாதது என்ற கருத்தை வலியுறுத்தினார்,"[4] என்று வரத ராசன் எழுதுகிறார்.

பொதுவாகத் தமிழ் இலக்கிய நூல்களும் சிறப்பாகச் சங்க நூல்களும் தொல்காப்பியமும், குறள் உள்ளிட்ட பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் சிலப்பதிகாரமும் இன்னபிறவும் இல்லையேல் இந்திய நாகரிகம் நூற்றுக்கு நூறு ஆரிய நாகரிகம் என்று உலகம் எடைபோட்டிருக்கும் என்பதை அறிஞர்கள் மறக்கலாகாது. இந்திய நாகரிகமும் பண்பாடும் ஒரு கூட்டுக் கலவையே. கடந்த காலத்தில் உலக அறிஞர்கள் இந்தியாவைப் பற்றிய ஆராய்ச்சியில் தமிழ் இலக்கியத்துக்கு உரிய இடத்தை வழங்கவில்லை. எதற்கெடுத்தாலும் தமிழிலக்கிய நூல்கள் பிறிதொன்றி லிருந்து கருக்கொண்டு உருப்பெற்றவை என்று பேசிவந்தார் கள். ஆனல் அண்மையில் மேலை நாட்டுப் புலவர்கள் பேச்சுக் களிலும் எழுத்துக்களிலும்—ஏன், நம் நாட்டு அறிஞர்களி டையேயும் மாறுதலைக் காண்கின்றோம். தமிழிலக்கியம் இரவல் இல்லை; பொன்னை மறைத்த புழுதியை மழை அடித் தொதுக்கிப் பொலிவுறச் செய்வது போன்று தமிழ் இலக்கியத் தின் தனித்தன்மையை அவர்கள் சிந்தனை கண்டு கொண்டு

விட்டது. ஏன், நம் நாட்டு அறிஞர்கள் கூட தமிழ் இலக்கிய நூல்கள் உலக அரங்கில் வீற்றிருக்கும் உரிமை பெற்றவை என்று சொல்லத் தொடங்கி விட்டார்கள். ஆம், சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை! தமிழ் இலக்கியம் பற்றிய மதிப்பீட்டில் மாறுதல் ஏற்பட வரதராசனுடைய நூல்கள் துணை புரிந்தன.

''கடலுக்குள் நாலாயிரம் ஆண்டுகள்'' என்ற தம்முடைய நூலில் பிலிப் டியோல் எழுதுவதாவது: ''மத்திய தரைப் பகுதியில் வாழ்க்கை எவ்வாறிருந்தது என்பதை நினைவு கூர்ந்து அம்மரபுகளைப் போற்றிவரும் இத்தமிழர்கள் திராவிடர்களாவர்—ஆரியர்களுக்கு முற்பட்டவர்கள். சிறப்புக் குன்றாத மிகப் பழமையான இலக்கியத்தைக் கொண்டவர்கள். 1600 பாடல்கள் கொண்ட தொகுதி அவ்விலக்கியத்துக்கு அடித்தளம். மேற்கிலிருந்து கடல் வழியாக வந்த மனிதர்களுக்கு இத் தமிழர்கள் சூட்டிய பெயர் அயோனியர்—யோனர், யோனகர், யவனர் என்பதாகும். கி.மு. நாலாவது—ஒருவேளை கி.மு. ஆறுவது நூற்றாண்டிலிருந்து கூட இப்பட்டத்தை அவர்கள் கையாண்டிருக்கலாம். தமிழ் நாகரிகம் அராபிய நாகரிகத்தைக் காட்டினும் தொன்மையானதில்லை என்றாலும், அதை ஒத்த தொன்மையுடையது. இவ்விருமக்களில் எவருடைய கொடை மிகுதி என்று ஒப்பீடு செய்தால் தமிழர் மிக உயர்ந்து நிற்பர். அவர்களுடைய அரசருள் ஒருவனான பாண்டியா அகஸ்டஸ் அரச சபைக்கு ஒரு தூது அனுப்பினான். கடல் வழிகளைக் கலக்கித் துருவி அறிந்தவர்களாதலால் ஒரே காலத்தில் மேலை நாட்டு நாகரிகமும் சீன நாகரிகமும் பற்றிய அறிவு படைத்தவர்களாயிருந்தனர்.''[4]

முனைந்த ஆராய்ச்சி நிறைந்து நிற்கும் இந்நாளில் பல துறைகளிலும் அறிஞர்கள் ஆராய்ச்சி மேற்கொள்கிறார்கள். வரதராசனுடைய நூல்களும் விரிந்து பரந்தவைகளாகும். ஆசிரியத் தொழிலை மேற்கொண்டவராதலாலும் புலமையுள்ளவராதலாலும் அவர் இலக்கியத் திறனாய்வு நூல்களை

எழுதினர். அவருடைய 'டாக்டர்' பட்டப் படிப்புக்கான ஆய்வுரை 'பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை' என்பதாகும். மாணுக்கர்களிடத்திலும் மக்கள் மனத்திலும் தமிழ் இலக்கிய நூல்களையும் சிறப்பாகச் சங்க இலக்கியத்தையும் தொல்காப்பியத்தையும் சிலப்பதிகாரத்தையும் பயிலும் ஆர்வத்தைத் தூண்டிவிட்டார். அவர் காட்டிய பாதையில் இன்று பலர் செல்கிருர்கள். சங்க இலக்கியத்தில் தோய்ந்து அதைக் குடைந்து துருவி, பகுத்துப் பார்க்கின்றவர் பலர்க்கும் வரதராசன் பீடுநடை போட்டுக் காட்டினுர். இலக்கியக் காட்சிகள், தமிழ் நெஞ்சம், புலவர் கண்ணீர், நடை வண்டி, கொங்குதேர் வாழ்க்கை, முல்லைத்திணை, குறுந்தொகைச் செல்வம், நெடுந்தொகைச் செல்வம், ஓவச்செய்தி என்பவை அவருடைய நூல்களிற் சில. குறிப்பாக ஓவச் செய்தி அவருடைய புலமைக்கு ஓர் ஒளிவிளக்காய்—எடுத்துக் காட்டாய் அமைந்துள்ளது. பெரியதும் சிறியதுமான எண்பதுக்கும் மேற்பட்ட நூல்களின் ஆசிரியரான வரதராசன் ஓவச்செய்தியுடன் ஒன்றி இணைந்து நிற்பதைப் புலவர் பெருமக்கள் காண்கின்றனர்.

ஓவச் செய்தி பாலைபாடிய பெருங்கடுங்கோவின் (அகநானூறு, 5) பாடலுக்கு வரதராசன் வரைந்த புதிய விளக்கமாகும். தலைவன் பொருள் ஈட்டுவான் வேண்டி தலைவியையும் குழந்தையையும் பிரிந்து செல்லத் திட்டமிடுகிருன். பிரிய விருக்கும் வேளையில் தலைவி தள்ளாடித் தடுமாறி, இதழ்களில் முறுவலைப் புகுத்தி, பாலை வழியில் தலைவனை எதிர்நோக்கி நிற்கும் இன்னல்களை நினைத்து ஏங்கி, தலைவன் முன்னம் சொன்ன 'பிரியேன்' என்ற வாக்குறுதி மறதியை உள்ளி, கண்களை நீர் திரையிட்டு மறைக்க, அகமே தவழும் பிரிவு மறுதலையை முகம் உறுதி செய்ய, ஓவியப் பாவையாய் நின்று, மார்புடன் மதலையை இறுக அணைத்து, வெம்மைப் பெருமூச்செறிந்து, குழந்தையின் தலையின் கண் கொண்டைக் கண்ணியை மோப்பவும் அந்நறுமலர் மாலை வாடியது. இக் காட்சியைக் கண்ணுற்ற கணவன் பயணத்

தைத் துறந்து பிரிதலைத் தவிர்க்கிறான். இதுவே பாடலுக்கு இதுகாறும் நிலவிய விளக்கம். சங்கப் பாடல்களிலிருந்து பல மேற்கோள்கள் காட்டி வரதராசன் இப்பாடலுக்கு ஒரு புதிய விளக்கம் கொடுத்தார். பொருள் ஈட்டும் நோக்கத்துடன் பயணம் மேற்கொள்ள இருந்த தலைவன் தலைவி ஒப்புதல் மறுத்தாள் என்பதற்காக அதைத் துறக்கவில்லை; பிரிவு அவளுக்கு உடன்பாடன்று; அகத்தை முகம் காட்ட அவள் ஓவியமாய் நின்றாள் என்பதாலும் அல்ல. ''இவனை என்று காண்பேன் இனி?'' என்ற தலைவியின் முகத்தில் படர்ந்த ஏக்கமே அவனைத் தாக்கியது. அத்தாக்குதலின் விளைவே தலைவனின் பயணத்துறவு. பெருங்கடுங்கோவின் பாடலைச் சொல்லுக்குச் சொல் ஆராய்ந்து தாம் சொல்லும் வாதத்துக்கு உறுதுணையாய்ச் சங்க இலக்கியத்திலிருந்து மேற்கோள்கள் காட்டி, படிப்படியாய் ஒரு சட்டநிபுணர் தம் வழக்கை வாதிப்பது போல் வரதராசன் தம் விளக்கத்துக்கு ஆக்கம் தேடுவது அறிவுடையோர்க்கு விருந்தாகும். அவருடைய வாதம் ஏற்புடைத்தாயினும் அல்லவாயினும் ஒரு நெறி முறைப்படி சங்க இலக்கிய அமைப்பைப் பகுத்து வகுத்துக் காட்டும் வரதராசனின் அறிவுத்திறன் ஒளி சிந்துகிறது. சங்கப் பாடல்களின் தரத்தையும் உயர்வையும் தங்கத்தை மாற்றுப்பார்க்க உரைகல்லில் உறைத்துப் பார்ப்பது போல் அவர் கையாளும் உத்திகள் கலைவண்ணம் நிரம்பி வழிகின்றன. அவருடைய புத்தகங்களுள் ஓவச்செய்தி ஊன்றிப் படிக்க வேண்டிய ஒன்றாகும். வரதராசன் எழுதுகிறார்: ''வாழ்க்கை அனுபவத்தால் வாழ்க்கையின் வரையறைகளைத் தெளிந்து, உணர்ந்த புதிய புதிய உணர்வுகளைப் பாடிய பாக்களின் தொகுதியே பண்டைத் தமிழ் இலக்கியம். ஆதலின், சங்க நூல்களைக் கற்பவர், வாழ்க்கையின் உண்மைகளை மறவாமல் ஆராய்ந்து காணவேண்டும். வாழ்க்கையைப் பற்றிய தெளிவு பெறாதவரும் சங்க இலக்கியத்தைக் கற்று அந்தத் தெளிவுபெற முடியும். வாழ்க்கையால் இலக்கியக் கல்வியும், இலக்கியக் கல்வியால் வாழ்க்கையும் திருந்தி வளம்பெற முடியும் என்ற உண்மையை இங்குக்

காணலாம். இது மட்டும் அன்று; ஒரே வகையான தூய உயர்ந்த அமைப்பு, சங்க இலக்கியம் முழுவதும் ஊடுருவி நிற்பதால், ஒரு பாட்டைக் கற்பவர்க்கு ஏதேனும் ஐயம் எழுந்தால், மற்றப் பாட்டுக்களின் கருத்துக்கள் முன்வந்து துணை செய்யும்; ஐயம் போக்கும்; உண்மை உணர்த்தும்,''[5]

வரதராசனுடைய நூல்கள் தமிழ் இலக்கியத்தைப் பயிலவும் தமிழ்ப் பண்பாட்டைப் போற்றவும் வரும் இளைய தலைமுறையினரிடம் எழுச்சிக் கருவிகளாயமைந்தன. தமிழ் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட இலக்கியத் தொடர்புள்ள மொழி. இந்நெடுங்கால உயிர்த்துடிப்பின் மறைபொருள் என்ன? தமிழ் இலக்கியம் உலகப் பொதுமையை உயிர்நாடியாகக் கொண்டது என்பது கேள்விக்கு விடையாகும். சங்க இலக்கியமும் பொதுவாக நீதி நூல்களும் சிறப்பாகத் திருக்குறளும் மனித இனம் முழுமைக்கும் பொதுவான மாணிக்கங்களாகும். உலகம் முழுவதிலுமுள்ள நூல்களுள் ஒரே ஒரு நூலைத்தான் ஒருவன் வைத்துக் கொள்ள முடியும் என்ற நிலையில் தமிழர்கள் நாடும் நூல் திருக்குறளாகத் தானிருக்க முடியும். வரதராசனுடைய நூல்களில், வெள்ளிப் பேழையில் அமைத்த தங்க மாம்பழ'மாகிய திருக்குறளிலிருந்து மேற்கோள்கள் ஏராளம். ''அறிஞர் உலகத்திலே பகவத்கீதைக்கு அடுத்தபடியாக அதிகமாகப் படிக்கப்பட்டு ஆராயப்படும் நூல் திருக்குறள் தான்''[6] என்று கி. சந்திர சேகரன் எழுதுகிறார். வரதராசனுடைய 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' பொதுமக்கள் மட்டுமின்றி ஆராய்ச்சியாளரும் பயன் பெறத் தக்க நூல். அவருடைய 'திருக்குறள் தெளிவுரை' பல நூறுயிரம் படிகள் அச்சாகி விற்கப்பட்டுள்ளன வென்றால் தமிழுக்கும் திருக்குறள் ஓதும் உலகப் பொதுமைக்கும் வரதராசன் ஆற்றிய பணியை என்னென்று சொல்வது? 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' என்ற நூலின் முகவுரையில் ''பகவத் கீதையைப் பற்றிக் காந்தியடிகள் எழுதும் போது இந்த நூலை மூளை கொண்டு கற்காமல் இதயம் கொண்டு உணரவேண்டும்

என்று குறித்துள்ளார். திருக்குறளையும் அவ்வாறே ஓதி உணர வேண்டும் என்னும் அவா என்னுள் இருந்து வருகின்றது. அதன் தூண்டுதலால் இத்தகைய முயற்சியில் ஈடுபட்டுள்ளேன்,'' என்று வரதராசன் எழுதுகிறார்.[7] இந்நூலுக்கு அணிந்துரை நல்கிய திரு.வி. கலியாணசுந்தர முதலியார், ''இந்நூல் ஒரு நன்னூல்; புதுமைப் பொதுநூல் உலகம் ஒரு குலமாகத் துணை செய்யும் நூல்; இதனை உதவிய வரதராசனார் வாழ்க,''[8] என்று வாழ்த்தினார்.

இந்நூலில் வரதராசன் எழுதுவதாவது: ''திருவள்ளுவர் நாகரிகம் என்ற சொல்லைக் குறிப்பிடும் போது மனப் பண்பாட்டையே கருதுகின்றார்; உண்பதிலும், உடுப்பதிலும், உறையுள் அமைப்பதிலும் பிறவற்றிலும் பெற்றுள்ள மாறுதல்களையே முன்னேற்றம் என்றெண்ணி அவற்றையே நாகரிகம் என்று பெரும்பாலோர் போற்றுகின்றார்கள். ஆனால் திருவள்ளுவரும் மற்றச் சான்றோர்களும் புறவாழ்வில் நிகழும் மாறுதல்களை நாகரிகமாகக் கருதவில்லை. அகவாழ்வில் ஏற்படும் நல்ல பண்புகளையே-நெஞ்சின் உயர்நிலைகளையே-அவர்கள் நாகரிகத்தின் கூறுகளாகக் கொள்கின்றார்கள். திருவள்ளுவரின் கருத்துப்படி உயர் வகையான மாடி வீடுகளில் வாழ்வது நாகரிகம் அன்று; தாம் மாடி வீட்டில் வாழ்ந்தாலும் பொத்தல் குடிசைகளில் உள்ள மக்களோடு பழகி, பழகிய காரணத்தால் கண்ணோட்டம் உடையவர்களாக வாழ்வதே நாகரிகம். அறுசுவை உணவு உண்டு களிப்பது நாகரிகம் அன்று; தம்மொடு பயின்றவர்கள் உப்பில்லாக் கூழ் குடிப்பவர்களாயினும் அவர்களைத் தம்போல் மதித்து உள்ளம் உருகி இயைவதே நாகரிகம். இந்தப் பண்பு எல்லா மக்களிடத்திலும் ஓரளவு அமைந்திருக்கின்றது. ஆனால் புற வாழ்க்கையின் போக்கு இந்த நெஞ்சப் பண்பாகிய நாகரிகத்தை வளரவொட்டாமல் நெருக்கி அடக்குகின்றது.''[9]

இதழ்கள் வழி, கடந்த நாற்பதாண்டுகளாகத் தமிழ் நாட்டில் நாவல்களும் சிறுகதைகளும் படிக்கப் படுகின்றன.

முதியோரான பின் கல்வி கற்றவர், பொழுது போக்குவதைத் தொழிலாகக் கொண்ட சோம்பேறிப் பணக்காரர், வீட்டிலடைபட்டுக் கிடக்கும் பெண்கள் இவைகளை விரும்பிப் படித்தனர். பிறமொழிகளில் பரவியிருந்த அளவுக்குப் படைப்பிலக்கியம்-நாவல்களும் சிறு கதைகளும்-தமிழில் இந்த நூற்றுண்டுத் தொடக்கத்தில் இல்லை. இவை தமிழில் காலந் தாழ்த்தி வந்தவையே. என்றுலும், வரவேற்கத் தக்கவையே. வரதராசன் தம் கதைகளைப் பெரும்பாலும் இதழ்கள் வழி யில்லாமல் நேராகவே வழங்கினுர். இவ்வகையில், அவர் ஒரு விதிவிலக்கு. மக்கள் மனமென்னும் கடலில் தமது நாவல்களை-நாவாய்களைத் துணிந்து இறக்கி அவை கடலலைகளைச் சமாளிப்பதைக் கண்டு இத்துறையிலும் வரதராசன் இறங்கி நீந்தினுர். தமிழ் அறிஞர் உலகத்தில் அரங்கேறிய வரதராசன் படைப்பிலக்கியப் பலகை ஏறி அங்கும் இனிது அமர்ந்தார். கற்றேர் வரதராசன் நூல்களை நாடினர். மாணுக்கர் உலகத் தும்பிகள் வரதராசன் நூல் மலர்களின் மதுவைக் குடித்துப் போதையுற்றன; போதமுற்றன. கொச்சை மொழியையும் அவியல் மொழியையும் அகற்றித் தேன் சிந்தும் தமிழில் அவர் தம் கதைகளை வடித்தார். புரியாத 'பண்டித' நடையுமன்று அவர் கதைகளின் உரை நடை. அவருடைய கதைப் பாத்திரங்கள் இனிய, எளிய தமிழ் பேசுகிருர்கள்; அவர்களிற் சிலர் தமிழ் இலக்கிய நூல்களிலிருந்தெல்லாம் மேற்கோள்கள் காட்டிப் பேசுகிருர்கள். இங்குதான், தொடக்கத்தில் பெர்ஞர்ட்ஷா இலக்கிய மணம் கமழும் வகையில் எழுதியதை நினைவுகூர்தல் வேண்டும். அறிஞர் குழாமும் சமூக ஏணியின் மேற்தட்டில் நிற்போரும் வரதராசன் நூல்களைப் படிப்பதற்கு 'கியூ' வரிசையில் நின்றுர்கள். பொதுமக்கள் இனிய தமிழ் நடையில் இலக்கண வழுவின்றி எழுதப்படும் நூல்களை நாடமாட்டார் என்ற கருத்துக்கு 'வேட்டுவைக்கப்பட்டு' அக்கருத்து நொறுங்கிச் சிதறியது. வரதராசன் சில குறிக்கோள்களை நினைவிலிருத்தி எழுதியவர். அவருடைய கதைப் பாத்திரங்கள் திருவள்ளுவர், அப்பர், தாயுமானவர், இராமலிங்கர் என்ற பெரியார்

களின் பொன்மொழிகளை எடுத்துச் சொல்லி நீதி புகட்டுகிறார்கள். வரதராசனுடைய நாவல்களிற் சில அவருடைய மாணாக்கர்களின் முன்னுரைகளுடன் வெளிவந்தன. நாவல்களில் அவர் படைத்த பாத்திரங்கள் நெஞ்சில் நீண்டகாலம் நிற்கின்றனர். அகல் விளக்கில் தொடக்கத்தில் பளிச்சிட்டு நின்ற சந்திரன் என்ற பித்தளை விளக்கு மங்கி, சுட்டமண்ணாலாகிய வேலய்யன் என்ற அகல் விளக்கு ஒளிவிடலாயிற்று. கயமை எதிர்காலத்தவர்க்கு இன்றையச் சமுதாயத்தில் நிலவும் கேடுகளை எடுத்துரைக்கும் நூலாய் விளங்கும். ஆணவர் மறக்கக்கூடாத பாத்திரம். சமுதாயத்தில் நடமாடும் ஆணவர்களைப் பற்றி நண்பர்களை எச்சரிக்க வேண்டும். ஈரமில்லா-நெறியில்லா-திட்டமிட்டுத் தீமை செய்யும் கயவர்கள்-ஆணவர்கள் சமுதாயத்தில் உளர். வரதராசன் தம் வாசகர்களை ஏமாந்து-உறங்கிவிடாது உசுப்பிவிடுகிறார். பழியஞ்சாப் பணக்காரன் ஒருவன் ஒரு பாவமும் அறியாத நல்லவனைச் சிறைபுக வைப்பதையும் நெகிழ்ச்சியில்லாத-ஆனால் களங்கமற்ற மனைவி கணவன் குடும்பத்தைத் துறந்து போவதற்குக் கருவியாயமைவதையும் மண் குடிசை படம் பிடித்துக்காட்டுகிறது. ஒருவரும் காணாது உலவும் உருவ மறைப்பு ஆராய்ச்சியில் மெய்கண்டார் ஈடுபட்டு வெற்றி பெற்றார் என்பதை மையமாகக் கொண்டு கதையின் கணிசமான பகுதி அமைகிறது. ஹெச்.ஜி. வெல்ஸ் படைத்த-புகழ் வாய்ந்த, 'பார்க்க முடியா மனிதன்*' என்ற விஞ்ஞான நவீனத்தை நினைப்பூட்டுகிறது. விழுமிய விஞ்ஞானியும் வியக்கும் வகையில் வெல்ஸ் எழுதிய அப்புத்தகம் அறிஞர் உலகில் ஒரு புரட்சியையே உண்டாக்கிவிட்டது எனலாம். இக்கருப் பொருளைக் கையாண்ட வரதராசன் எத்துணை வெற்றி கண்டார் என்று கணக்கிடுவது வாதத்துக்குரியது. வரதராசனுடைய நாவல்கள் தொடக்கம் முதல் இறுதிவரை படிப்போர் மனத்தைக் கௌவி நிற்கின்றன; வாழ்க்கைப் பாதையில் ஏற்படும் தடுமாற்றத்தைத் தவிர்க்க உதவும் நீதிகள் கற்பிப்பனவாய் உள. தமிழில் முதன் முறையாகப் பேராசிரியர் ஒருவர்

---

*Invisible Man

நாவல்கள் எழுதத் தொடங்கி அத்துறைக்கே மக்களிடம் நன்மதிப்பைப் பெற்றுக் கொடுத்தார் என்று சொல்லலாம். அதன் விளைவாய்க் கல்விக் கோயில்களின் வாயில்கள் திறக்கப்பட்டு நாவலாசிரியர் சிறு கதை எழுத்தாளர் ஆகியோருடைய படைப்புக்கள் சிறகடித்துக் கொண்டு புலவர்களிடையிலும் மாணக்கர்களிடையிலும் பறக்கலாயின. சில திறனய்வாளர்கள் தாம் பெற்ற புதியநிதி கண்டு மகிழ்ச்சிப் பெருக்கில் திளைக்கலாயினர். அவைகளில் எத்தனை, எது காறும் வாழும் என்பது காலதேவன் கையில் உளது. இத்துறையில் வரதராசன் ஈடுபாடு தமிழ்ப் படைப்பிலக்கியத்துக்கு ஓர் எழுச்சியை உதவியது.

ஆசிரியன் தன்னுடைய நூல்கள் வழி வாழ்கிருன். அவனுடைய நூல்களே அவனுக்குச் சிறந்த நினைவுச் சின்னம். ஆசிரியன் ஒருவனுக்குப் புலமையிருக்கலாம்; எழுத்தில் ஆழம் இருக்காது. எழுத்தில் ஆழமிருக்கலாம்; தெளிவிராது. புலமை, ஆழம், தெளிவு இருந்தும் முறைப்படக் கோர்வையுடன் சொல்லும் திறன் படைத்தவனுயிருக்க மாட்டான். வரதராசனிடம் புலமை இருந்தது; அவர் எழுத்து ஆழமுடைத்து; கலங்காத் தெளிவு அவர் பால் இருந்தது; முரணில்லாது கோர்வையுடன் எழுதும் ஆற்றல் படைத்தவர். அவருடைய மொழியியல் நூல்களைத் தவிர்த்துப் பிற நூல்கள் நல்லொழுக்கத்தைப் புகட்டும் குறிக்கோள் கொண்டவையாகும். அறத்துக்கு இலக்கணம் கூறும் இரண்டு குறட்பாக்கள் உள. குறள் வகுத்த வழியை நம்பி வாழ்ந்த வரதராசனுக்கு அவை நியூமென் என்ற பெரியார் சொல்லிய 'வழி காட்டும் இன்ப விளக்காய்'† இலங்கின வெனலாம்.

*மனத்துக்கண் மாசிலனுதல் அனைத்தறன்*
*ஆகுல நீர பிற.* (குறள், 34)

*அழுக்காறு அவாவெகுளி இன்னுச்சொல் நான்கும்*
*இழுக்கா இயன்ற தறம்.* (குறள், 35)

† Lead Kindly light.

## குறிப்புகள்

1. "Assuredly that criticism of Shakespeare will alone be genial which is reverential. The Englishman, who without reverence, can utter the name of William Shakespeare, stands disqualified for the office of critic."

—*S. T. Coleridge.*

2. Winslow : Comprehensive Tamil and English Dictionary (1862).

3. மு. வரதராசன் : இலக்கிய மரபு (பக்கம் 174), 1960.

4. "These Tamils who perhaps preserve in their traditions a memory of what life was like in the Mediterranean were Dravidians, 'pre-Aryans.' They have a very old literature of no mean importance. Its basis is a collection of 1,600 poems, from which we learn that the name given by the Tamils to the men of the sea who came out of the West was 'Ionians'-Yona, Yonaka, Yavana. This appellation they used from the 4th and even perhaps the 6th Century B. C. The Tamil civilization was quite as old as if, not older than that of the Arabs. If it were possible to estimate the extent of the debt owed by each to other there is little doubt that the Tamils would prove to be by far the bigger creditors. One of their kings, Pandya had sent an embassy to Augustus. They had known at one and the same time the civilization of the West and the civiilzat'on of China, thanks to their familiarity with th sea." (Phillippe Diole : 4,000 *Years Under the Sea*)

5. மு. வரதராசன் : ஓவச் செய்தி (பக்கங்கள் 33-34) 1963.

6. K. Chandrasekharan in Book Review in *Triveni* (July-September 1974).

7. மு. வரதராசன் : திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், பக்கம் 23, 1962.

8. ஷை. பக்கம் 20

9. ஷை. பக்கங்கள் 143-144.

# "இதயமலர்கள்"-மதிப்புரை

"இதய மலர்கள்" வண்ணமலர்கள் மட்டுமல்ல; வாசம் வீசும் சொர்ண மலர்கள்; தேன் துளிக்கும் எண்ண மலர்கள். சிந்தைக்கினிய செவிக்கினிய பாடல்கள். மெட்டியின் ஓசை மங்கையின் வருகையைக் கட்டியம் கூறுகிறது; உடன் தொடர்ந்து மெல்லிசைக் கொலுசு பேசுகிறது. அங்கை வளை ஒலிக்கிறது. "மார்படைத்த கோடு பளீர் பளீரென" வெண் டாமரை மலர்ந்ததென, மங்கையும் 'இட்ட அடிநோவ எடுத்த அடி கொப்புளிக்கத்' தென்றலென வருகிறுள். 'இதயமலர்களை' நுகரும் போது இத்தகைய எண்ணங்கள் தோன்றுகின்றன.

ஆங்கிலக் கவிஞன் காலரிட்ஜ் உறங்கிக் கொண்டிருந் தான். உறங்கும் பொழுது கனவொன்று கண்டான். அடி பெருத்த மரமொன்றைக் கண்டான். அதில் எழுதப்பட்டி ருந்த கவிதையைப் படித்தான். துயில் நீங்கியதும் அக்கவி தையை எழுதத் தொடங்கினுன். அப்பொழுது யாரோ வந்து கதவைத் தட்டவே சிந்தனைச் சங்கிலி அறுந்து போயிற்று. கவிதையும் பாதியில் நின்றுவிட்டது.

கவிஞன் நனவுலகில் வாழ்ந்தாலும் கனவுலகில் சஞ் சரிப்பவன். முழுமையும் மாசு நீங்கிய மதியைக் காண முடி யாது. அதே போலக் குறைவற்ற நிறைவையும் மக்களி டையே காணமுடியது. கற்பனையுலகில் தான்-கனவுலகில் தான்-கவிஞன் தன் குறிக்கோளைக் காணமுடியும்.

"எனது மனம் கொண்டது போல்
எழிலு ருவாய் நில்லடி
கனவுப் பெண்ணாய்க் கவிதைப் பெண்ணாய்க்
கனிந்து மனம் நில்லடி."

"மங்கியதோர் நிலவினிலே கனவு" கண்டு தானே அழகென்னும் தெய்வத்தைக் கண்டார் பாரதி. மனம் கட்டும் கோட்டையினை அளவுச் சங்கிலி கொண்டு கணக்கிட முடியாது. எனவேதான்,

"எனது மனம் கொண்டது போல்
எழில் உருவாய் நில்லடி,"

என்று கவிஞர் சொல்லுகின்றார் போலும்.

புற அழகு மட்டும் போதாது என்பதை வலியுறுத்தவே,

"கனவுப் பெண்ணாய்க் கவிதைப் பெண்ணாய்க்
கனிந்து மனம் நில்லடி."

என்றுமுடிக்கின்றார் கவிஞர்.

"அழகுப் பொருள் நின்று நிலைத்த இன்பம்" என்பார் ஆங்கிலக் கவி கீட்ஸ். ஆனால் அழகும் அழியக் கூடியதே. கணந்தோறும் அழகு படைக்கப்பட்டு அழிக்கப்படுகிறது. இது இயற்கையின் நியதி. அழகு நிகழ்காலத்துக்குரியது. இன்றைய அழகுப்பொருள் எதிர்காலத்தில் எழில் ஒழிந்து இறந்தகாலப் பொருளாகிவிடுகிறது. இளமையின் வளமை என்றும் இருக்காது. அழகுக்கு இலக்கணம் வகுக்கின்றது போல் அமைந்திருக்கின்றன இரண்டு வரிகள்:

"அழகின் அழகு உருவில் இல்லை-
அழகைக் காண்போர் அகத்தில் உளது."

மயக்கம் தரும் புறஅழகு அழிந்து போய்விடும்; இல்லையெனில் அது அழகில்லை என்பது சுந்தரவின் கருத்து.

*"அழியும் அழகு; அழியாதாயின்*
*அழிந்தே போகும் அழகின் பெருமை,"*

இவை சிந்தனைக் குரிய வரிகள்.

வீணை ஒரு மெல்லிசைக் கருவி. வீணையை மீட்டி இசை கூட்டிஞல் நெகிழா இதயமும் நெகிழும். "குழலும் வீணையும் யாழும் என்றினையன குழைய', என்பான் கம்பன். வீணையி லிருந்து எழும் இன்னிசை நாதம் தன் அரவணைப்பில் அனைத்துலகையுமே ஈர்த்துக் கொள்ளும்; மாசில் வீணையை மீட்டிட வேண்டும். மெல்லென மீட்டி நல்லிசை ஈட்டிட வேண்டும். வானவில்லினை நாட்டியது போன்று இன்னிசை பெருமிதமாய் எட்டி நடைபோடும் வண்ணம் அதைக் கூட்டிட வேண்டும். வீணையை விண்ணுக்கு உயர்த்தி வான வில்லினைக் கட்டித்தழுவும் நிலையை வேண்டுகிற சுந்தாவின் சொற்சித்திரம்-அசைந்தாடி இசை நாட்டுகின்றது.

*"நல்லதோர் வீணையை நேசமாய்த் தழுவியே*
*மெல்லென மீட்டிட வேண்டும்.*
*மெல்லென மீட்டியே மோகனம் மேவிட*
*நல்லிசை ஈட்டிட வேண்டும்.*
*நல்லிசை ஈட்டியே நேரிலே வானக*
*வில்லினை நாட்டிட வேண்டும்.*
*வில்லினை நாட்டியே எண்ணத்தை இன்னிசை*
*வெல்லவே கூட்டிட வேண்டும்."*

"டி. கே. சி" என்ற மூன்று எழுத்துக்கள் திருக்குற்று லத்தில் வாழ்ந்த தமிழறிஞர் சிதம்பரநாத முதலியாரைக் குறிக்கும். டாக்டர் ஜான்சன் போன்று பேசும் திறமை பெற்றவர். தமிழ் நாட்டில் தமிழை உலாவரும்படி செய்தவர். தமிழிலக்கியத்தைப் பற்றித் தமிழன் பெருமைப்படும்படி செய்தவர். "டி. கே. சி" தமிழிலக்கியத்தில் திளைத்துப் பேசும் பொழுது ஒரு சொல் அடிக்கடி அடிபடும். 'தத்துவம்' என்பதே அச்சொல். அவரையே ஒரு தத்துவம் என்று

சொன்னால் அது மிகையன்று, அவர் ஓர் இலக்கியப் பூங்கா. அப்பூங்காவில் மலர்ந்தவர் சுந்தா. தம் ஆசிரியப் பெருந்தகைக்கு அஞ்சலி செய்யும் வண்ணம் சுந்தா எழுப்பியுள்ள நினைவுக் கோயில் எவ்வளவு அருமையாய்ப் பாடலில் உருப் பெறுகின்றது'.

*''செந்தமிழ்க் கொண்டல் அவர்*
*தில்லிக்கு வந்திருந்தார்;*
*வந்த கொண்டல் உருமாற்றி*
*வைத்திட்டார் இந்நகரை.''*

*''தமிழ்மாரி பெய்ததிலே*
*தில்லி எல்லாம் தமிழ் வெள்ளம்;*
*யமுனை நதி பொருநை என*
*இனம் மாறி ஓடியது.''*

'இதய மலர்களின் இருமலர்களின் மறுமணம் நம்மை அருகில் சென்று நுகரத் தூண்டுகிறது. தாயன்பு பற்றியும் காந்தி பற்றியும் எழுந்துள்ள பாடல்கள் உருக்கமாய் அமைந்துள்ளன. தாயன்புக்கு ஈடேது? ''தாயோடு அறுசுவை போம்'', என்று சொல்வர். தாயோடு அன்பல்லவா போய் விடுகிறது. தாயுள்ளம் காட்டும் பரிவை யாரே காட்ட முடியும்?

*ஓர் அருமைப் பிள்ளை என்று உலகமே நான் என்று*
*சீருடனே கொண்டாடிச் சீராட்டிப் பேணுகையில்*
*அன்புக்கு அன்பு செய்யத் தெரியாமல் இருந்தேனே!*
*நன்றி இல்லாக் கல்லன்... ... ...*
*நான் இழந்தது என்னவென்று நாளாக ஆகத்தான்*
*நான் உணர்ந்தேன், நிழலருமை வெயிலிலே என்பது*
*போல்,''*

என்ற வரிகள், தனயன் கடமை தவறியதை மட்டுமின்றி தாயன்புக்கு இன்னும் ஏங்கும் உள்ளத்தையும் அல்லவா தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டுகின்றன.

காந்திக்கு அணிகலன் பணிவு. மேருவென அவர் உயர்ந்து நின்றதும் அப் பணிவினால் தான். பணியை ஊன்று கோலாகக் கொண்டு பணிவைக் கவசமாய்க் கொண்ட காந்திமகான் விண்ணுலகை மண்ணுலகில் மக்களிடையே கண்டார். மனிதன் மனிதனாய் வாழ்வதற்காக அவர் மடிந்தார். இயேசுநாதரைப் போல்—அப்பரைப் போல்—இன்னல்களைப் புன்முறுவலுடன் ஏற்றுக் கொண்டார். ''அருமையில் எளிய அழகே போற்றி'' என்று இறைவனை வணங்குகின்றார் மாணிக்கவாசகர். காந்தி மகான் ஏழைக்குத் தோழனாய், எளியர்க்கு அன்பனாய், கடையராய்ப் பிறந்து, கடையராய் வாழ்ந்து, கடையராய் மடியும் மக்களின் உறுதுணையாய் நின்றார். மண்ணிற் கிடந்தாலும் பொன்மின்னும்;அது போலத் தான் காந்தியும். 'அருகன் அல்லேன்' என்ற சுந்தாவின் காந்தி புகழ் தமிழ்ப் பண்பாடு என்ற வித்தில் முளைத்தது; சிந்தையில், சொல்லில் செய்கையில் சாந்தம் இல்லை; எனவே காந்திமுனி புகழ் பாடத் தகுதியில்லை; மக்களிடம் அன்பு காட்டவில்லை; அவர்கட்காக ஆற்றிய தொண்டோ இல்லை; அரிய மானிடப் பிறவியின் பெருமையோ தெரியவில்லை; எனவே ஏந்தலினை ஏற்றுதற்குத் தகுதியில்லை. நல்ல பணியில் ஈடுபடாவிட்டாலும் பாவங்கள் செய்யாமலாவது இருந்திருக்கலாம். செய்த பாவங்கள் எத்தனையோ! இறைவனை எப்போதும் சிந்தித்ததே இல்லை. எனவே, அண்ணல் புகழ் பாடுதற்குத் தகுதி இல்லை. இவ்வாறெல்லாம் சுந்தாவின் காந்தி புகழை உரை நடையிற் சொன்னாலும் ஓவியம் பேசுமோ? அவர் பாடலே இசைக்கட்டும்.

*''உடன் இருந்தும் உள்ளத்தைத் தேடவில்லை*
*உடன் இருந்தும் உள்ளத்தால் நாடவில்லை*
*உடன் இருந்தும் உள்ளன்பு கூடவில்லை—அதனால்*
*கடவுளனைக் கூப்புதற்கு அருகன் அல்லேன்.''*

'இதய மலர்'க் குவியலிலே பொக்கெனப் பொறுக்கத் தக்க மலர் இது.

'எப்படி அழகி' என்ற பாடல் நகைச்சுவைப் பாடல் களில் இடம் பெற்றுள்ளது, 'கலைகள்—இலக்கியம்' என்ற தலைப்பில் இடம் பெறக் கூடியது.

*கனியோ, கரும்போ, மானோ, மயிலோ?*
*வனிதா மணி இவள்... ...*
*ஓயிலாள் இவள் ஒரு ஓவியப் பெண்ணோ?*
*குயிலாள் இவள் ஒரு காவியப் பெண்ணோ?*

காப்பியம் ஒன்றில் வரும் வரிகளின் நிழல் படுகின்றதை னோக்க முடிகின்றதா?

'திருக் குற்றாலக் குறவஞ்சி'யில் திரிகூட நாதர் மீது காதல் கொண்ட வசந்தவல்லி பந்தாடுவதைக் திரிகூட ராசப்பக் கவிராயர் வர்ணிக்கிறார். அவள் பந்தாடும் வேகத் தைப் பார்த்தால் எது முந்தி வேலை செய்கிறது என்று சொல்ல முடியவில்லை—மனமா, கண்ணா, கையா?

*"இந்திரையோ? இவள் சுந்தரியோ?*
*தெய்வ ரம்பையோ?*
*மோகினியோ? மன*
*முந்தியதோ? விழி முந்தியதோ? கர*
*முந்தியதோ? எனவே*

* * *

*பைந்தொடி நாரி வசந்தவல்லி வொய்யாரி பொற்*
*பந்து கொண்டாடினளே."*

தறியில் அமர்ந்து வேலை செய்யும் நெசவுத் தொழிலாளி துணி நெய்கிறான். கால்களும், கைகளும் கண்களும் வேலை செய்கின்றன. நெட்டிழையைத் துணியாக்கும் குறுக்கிழை சென்டிலுள்ள நூற்கண்டின் மூலம் அங்குமிங்கும் ஓடுகிறது. எது முந்தி வேலை செய்கிறது? தறிப் பாட்டில், நாமே அதைக் காணும்படி சுந்தர செய்திருக்கிறார்.

*"கண்டும் சென்டும் ஓடி ஆடுது.*
*ஊடும் பாவும் பாவும் ஊடும்*
*கூடிப் பின்னித் தறியில் ஒடுது.*
*கண்கள் முந்தியோ எண்கள் முந்தியோ*
*கால்கள் முந்தியோ நூல்கள் முந்தியோ..."*

சொற்கள் என்ற உதிரிப்பூக்களை, மதி முந்தியதோ, சொல் முந்தியதோ, எல் முந்தியதோ, எழில் முந்தியதோ எனக் கவிஞன் தொடுத்துக் கட்டுகிறான் பாமாலையை.

கவிதை என்பது புதுப்புனல். வடக்கில் இமயமெனில் தெற்கில் பொதியில். பொதியில் தந்த எங்கள் பாண்டியர் தம் பொற்கொடி—சுடர்க்கொடி—குலக்கொடி—பொருனை என்னும் பாவை, வைகாசி—ஆனி மாதங்களில் திரை விலக்கி முகம் காட்டுகிறாள்.

*"மஞ்சு தவழ் சோலையிலே மயிலாடக் குயில்பாட—*
*மட மங்கை*
*எழிலரசி மான் விழியாள் தேன்மொழியாள்"*

பாணி கொட்டி நகைக்கின்றாள். அவளுடைய சிரிப்பொலி சுந்தாவின் பாடல்களாய் உருப் பெற்றுள்ளன.

நூல் இதய மலர்கள்
ஆசிரியர் : சுந்தா.

# ஈந்து சிவந்தது சீதக்காதி இரு கரமே

சேது நாட்டில் ஒரு வள்ளல் வாழ்ந்தார். அவர் பற்றிய புகழுரையொன்று தென்பாண்டி நாட்டில் மக்கள் நாவில் தவழ்கிறது, 'செத்தும் கொடுத்தான் சீதக்காதி' என்பதுவே அப்புகழுரை. தமிழ்ப் புலவர்கட்குத் தாயனைய சீதக்காதி சாக்காடு என்ற போர்வை தழுவ உறங்கிக் கொண்டிருந்தார். வள்ளலிடம் பரிசில் பெற விரைந்து வந்த புலவரொருவர்க்கு சீதக்காதி இறந்துவிட்ட செய்தி பேரிடியெனக் காதில் விழுந்தது.

*பூமா திருந்தென் புவிமா திருந்தெனிப் பூதலத்தில்*
*நாமா திருந்தென்ன நாமிருந் தென்னநன் னுவலர்க்குக்*
*கோமா னழகமர் மால்சீதக் காதி கொடைமிகுந்த*
*சீமா னிறந்திட்ட போதே புலமையுஞ் செத்ததுவே.*

சீதக்காதி இறந்தபோது படிக்காசுப் புலவர் பாடிய கையறு நிலைப் பாடலாகும் இது. புலவர் அரற்றல் கேட்டதுமே மோதிரமணிந்த சீதக்காதியின் கை வெளிவர மோதிரத்தைப் பரிசிலாகப் புலவர் பெற்றார். 'செத்தும் கொடுத்தான் சீதக்காதி' கதை ஒரு புறமிருக்க வள்ளல் சீதக்காதியின் தமிழன்பையும் புலவரைப் போற்றிய பெருந்தன்மையையும் இம்மூன்று சொற்களாலாகிய புகழுரையும் சாகாவரம் பெற்றுலவுகிறது.

சீதக்காதி வள்ளல் சேது நாட்டை கி. பி. 1674 ஆம் ஆண்டு முதல் 1710 ஆம் ஆண்டு வரை அரசு புரிந்த கிழவன் சேதுபதி என்ற விஜய ரகுநாதத் தேவர் காலத்தவர் என்றும் அவருடைய நண்பர் என்றும் தெரிகிறது. அரசனால் வழங்கப்பட்ட விசய ரகுநாதப் பெரிய தம்பி என்ற சிறப்புப் பெயரையும் சீதக்காதி கொண்டிருந்தார் என்று செய்தக்காதி நொண்டி நாடகத்திலிருந்து அறிந்து கொள்ளலாம்.

*விருது மன்னியர் கண்டன் காயலில்*
*விசயரகுநாதப் பெரிய தம்பி*
*கருதலர் திறையளக்கும் வாயிலைக்*
*கண்டேன் மனங்களி கொண்டேனே.*†

செய்தக் காதிறு மரக்காயர் என்ற பெயர் செய்தக்காதி என்றாகி சீதக்காதி என்று மருவி வழங்கலாயிற்று. மருவிய பெயரே வள்ளலுக்கு நிலைத்துவிட்டது. 'மரக்கல அரையர்'- அதாவது மரக்கலங்கள் பலவற்றிற்கு உடைமையாளர் 'மரக் கலராயர்' என்றாகி 'மரக்காயர்' என்று மருவி வழங்கலா யிற்று. பல மரக்கலங்களைப் பெருங்கடலில் போகவிட்டு வாணிபத்தில் தழைத்தவர் மரக்காயர் எனப்பட்டார். சீதக் காதி மரக்காயர் அத்தகைய வணிக மன்னர்.

தனிப்பாடல்களில் சீதக்காதியின் சிறப்பைக் கூறுபவை படிக்காசுப் புலவராலும் நமச்சிவாயப் புலவராலும் பாடப்பட் டவை. முன்னவரின் பாடல்கள் கவிநயம் நிரம்பி உள்ளத்தை நெகிழவைக்கின்றன. புலவரைப் போற்றிய புரவலர் சீதக்காதி என்பது படிக்காசுப் புலவர் பாடல்களில் பெரிதும் வலியுறுத்தப்படுகிறது.

*"மைப்போ தகமும் வளநாடுஞ் செந்தமிழ் வாணர்க்கருள்*
*கைப்போ தகமனை யான்சீதக் காதி,"*

என்று நமச்சிவாயப் புலவர் சொல்வார். செந்தமிழ்வாணர் களும் பாணர்களும்சீதக்காதியின் முன் சென்று சிறப்புப் பெறுவாராயினர்.

---

†டாக்டர் நயினார்; சீதக்காதிவள்ளல், சென்னை-1953.

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரன்றே! கார் தட்டியதால் சேது நாட்டில் பஞ்சம் வந்தது. கார் எட்டினும் தட்டினும் அவலநிலைக்கிலக்காகின்றனர் சேதுக் கரை மக்கள். புயல் வந்து தன் கொடிய விளையாட்டைக் காண்பிப்பதும் புயல் (மேகம்) வாராது பஞ்சம் தலை காண்பிப்பதும் அப்பகுதியின் உரிமை போலும்! சீதக்காதி வாழ்ந்த காலத்திலும் பஞ்சம் வந்தது. கொடிய இன்னலுக்கான மக்களுக்குச் சோறு வழங்கித் தமிழ் மொழிக்கு ஒரு சொற்கோவையை வழங்கக் கருவியானார் சீதக்காதி:

*ஓர்தட்டி லேபொன்னு மோர்தட்டி லேநெல்லு மொக்கவிற்குங்*
*கார்தட் டியபஞ்ச காலத்தி லேதங்கள் காரியப்பேர்*
*ஆர்தட் டினுந்தட்டு வாராம லேயன்ன தானத்துக்கு*
*மார்தட் டியதுரை மால்சீதக் காதி வரோதயனே*

எவ்வளவுதான் மின்னும் பொன்னுக்கு மதிப்பிருந்தாலும் அது உண்ணும் பொருளல்லவே! பஞ்சம் வந்து மக்கள் உணவுக்கு 'ஆலா'ப் பறக்கையிலே பொன்னை வைத்துக் கொண்டு என்ன செய்வது? சமன் செய்து சீர்தூக்கும் கோலில் ஒரு தட்டில் பொன்னை வைத்து அடுத்த தட்டில் நெல்லை வைத்து நிறை செய்யும் காலம் வந்து விடுகிறது. அக்காலத்தில் உணவுக்காக மக்கள் ஏந்தி நிற்கும் தட்டு எதிலும் தட்டு (தடை) ஏதும் இல்லாமல் உணவு வழங்கப்பட்ட சிறப்பை மார்தட்டி—நெஞ்சில் அடித்துச் சொல்லத்தக்க பெருமையுடையவரன்றே சீதக்காதிவள்ளல். 'தட்டு' வராமல் செஞ்சொற்றமிழைக் கொஞ்சி விளையாடச் செய்கிறார் புலவர்.

புல்லர் தம்பொருளை வேசிக்கும் பிறர்காணாது சந்துகளில் நடக்கும் கீழோர்க்கும் வேசிக்கு வேலை செய்யுந் தாசிக்கும் விரையம் செய்வர்,

"சீதக்காதி தயாநிதியே!
நேசித்து வந்த கவிராசர் தங்கட்கு நித்தநித்தம்
பூசிக்கு நின்கைப் பொருளொன்றுமே,"

என்று படிக்காசுப் புலவர் பாடுகிறார்.

பிறந்து இறக்கின்றனர் சிலர்; உலகில் வந்த சுவடு தெரியாமல் மறைகின்றனர். எட்டி பழுத்துக் கிடக்கின்றது; சீந்துவாரற்றுக் கிடக்கின்றது. எவருக்கென்ன பயன்?

"நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சுமரம் பழுத் தற்று," (1008)

என்பது தமிழ் மறை.

உணவாகக் கனி தந்ததுவும் பழமரத்தை எல்லோரும் நாடிச் செல்வர். 'செம்பொன் பிடி பிடியாய் ஓயாமலீபவன் சீதக்காதி ஒருவன்' 'கோமானழகமர் மால்சீதக்காதி'— 'தேவேந்திரனெனுங் கண்ணுக்கினிய துரை சீதக்காதி'— 'தேட்டாளன் காயற்றுரை சீதக்காதி'— இறந்திட்டபோது புலமை செத்தது; மண்ணுக்குள்ளே யொளித்ததும் புலவர் முகம் வாடியது; சமாதிக்குழி புகுந்து புகழ்க்கம்பம் நாட்டிய சீதக்காதி இறந்து போய்விட்டதால் தமிழ் நாவலரை ஓட்டாண்டியாக்கி அவர்கள் தம் வாயில் ஒரு பிடி மண் போட்டான். புலவர் புலம்புகிறார்.

மறந்தாகிலும்அரைக் காசுங் கொடாமட மாந்தர் மண்மேல்
இறந்தாவ தென்ன இருந்தாவ தென்ன இறந்துவிண் போய்ச்
சிறந்தாளுங் காயற் றுரைசீதக் காதி திரும்பிவந்து
பிறந்தா லொழியப் புலவோர் தமக்குப் பிழைப்பில்லையே.

கழுநீர் முறுகிச் சிவக்கும். சூரியகாந்தி காய்ந்து சிவக்கின்றது. ஒளிவீசும் பெண்களின் கண்கள் சிவக்கின்றன கொழுநரோடு விளையாடி. பாவாணர் நெஞ்சங்கள் ஆழங் காண முடியா தொன்னூல்களை ஆய்ந்து சிவக்கின்றன. கொடுத்துச் சிவந்தன சீதக்காதியின் கைகள். சீதக்காதியின்

கொடை வளத்தை ஒரு பாடலைக் கொண்டு நிலை நாட்டு கிறார் படிக்காசுப் புலவர்.

*காய்ந்து சிவந்தது சூரியகாந்தி கலவியிலே*
*தோய்ந்து சிவந்தது மின்னார் நெடுங்கண் தொலைவில்*
*பன்னூல்*
*ஆய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்சம் அனுதினமும்*
*ஈந்து சிவந்தது மால்சீதக் காதி யிருகரமே.*

ஆயிரக்கணக்கான தனிப்பாடல்கள் தமிழில் உள. இலக்கிய நயம் தவிர, வரலாற்றுச் செய்திகளை வழங்கும் கருவூலமாயும் அப்பாடல்கள் விளங்குகின்றன. வள்ளல் சீதக்காதி வாழ்ந்த காலத்தில் பாவாணர் பலரிருந்தனர். அவர்க்கு அள்ளி அள்ளிக் கொடுத்துச் சிவந்த சீக்காதியின் கைகளைக் காணப்பேறு பெற்ற மக்களும் வாழ்த்தினர் மழையில்லாமையால் கொடிய பஞ்சம் ஒரு தடவை வந்தது. நெல்லும் பொன்னும் ஒக்க – எடைக்கு எடை—விற்றன என்பது பஞ்சத்தின் கொடுமையைத் தெரிவிக்கிறது. சமூகத் தில் வேசியரும் அவர் பால் தூது செல்வோரும் வேசியர்க்கு வேலை செய்யும் தாசியரும் இருந்தனர்.

# சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றாண்டுக் காப்பியமா?

சிலப்பதிக்காரக் காலத்தை விருப்பு வெறுப்பின்றி ஆராய்வதாகச் சொல்லிக் கொண்டு ஒரு கல்லூரித் தமிழாசிரியர் புத்தகம் ஒன்றை வெளியிட்டார். 'சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றாண்டுக் காப்பியம்' என்பது புத்தகத்தின் தலைப்பு. அதுமட்டுமல்ல; சிலப்பதிகாரம் ஒரு கற்பனைக் கதை என்பதுவும் அவர் கூற்று. ஐயரவர்கள் சிலப்பதிகாரம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்ததென்பர். இ. மு. சுப்பிரமணிய பிள்ளையின் கருத்து சிலம்பில் காணும் காலக்குறிப்பையொட்டி கி. பி. 144. மு. இராகவையங்கார் செங்குட்டுவன் காலம் ஐந்தாம் நூற்றாண்டு என்பர். சாமிக் கண்ணுப்பிள்ளை மதுரை எரிந்தது கி. பி. 757 ஆம் ஆண்டு என்று சொல்வர். வையாபுரிப்பிள்ளை சிலப்பதிகாரம் எட்டாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டது என்ற கருத்துத் தெரிவித்துள்ளார். உண்மை காணவேண்டும் என்ற அவாவினால் உந்தப்பட்டுச் சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்ற முடிவுக்கு வந்தார் குறிப்பிட்ட ஆசிரியர்.

உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்தல் என்ற சொற்றொடர் கண்ணகியைக் குறிப்பதன்று. பட்டினி படாரியரான பத்மாவதி இயக்கி என்னும் சமண தெய்வத்தின்

உயர்வை அறியச் செய்ய வேண்டும் என்பது சிலப்பதிகார ஆசிரியரின் அவா. உரைசால் பத்தினி என்பது பத்மாவதியையே குறிக்கும். சேரநாட்டில் வழங்கிய கர்ணபரம்பரைக் கதையை கண்ணகி கதையாகக் கற்பனை செய்து பத்தினியின் (கண்ணகி) வழி பட்டினி பத்மாவதி புகழ்பாடினுர் என்பது ஆசிரியர் வாதம். இளங்கோ என்பது சிலப்பதிகார ஆசிரியரின் பெயரா? யார் சொன்னது? குஞ்ஞிக்குட்டன் என்பவன்தான் இளங்கோ. செங்குட்டுவன் அண்ணனென்றும் இளங்கோ தம்பி என்றும் சொல்லிப் பெருந்தவறு செய்து விட்டார் அரும்பதவுரையாசிரியர் என்று நம் நூலாசியர் கண் கலங்குகிருர். சான்று இல்லையென்கிருர். எனின், இளங்கோ தமையன் என்பதற்குச் சான்றிருக்கிறதா? இவ்வாசிரியர் கூற்றின்படி இராசேந்திர சோழன் கங்கை நீரைக் கொண்டு வந்ததை "தம் கற்பனைத் திறத்தால் கண்ணகிக்குப் படிமம் எடுக்கச் செங்குட்டுவன் இமயத்திற்குச் சென்று கல்லெடுத்து, கங்கையில் நீராட்டி, தம்மையெதிர்த்த வட வாரிய அரசர்களையெல்லாம் வென்று திரும்பியதாக இளங்கோவடிகள் மாற்றியமைத்தார்."[1] உண்மைச் சமணரான இளங்கோ சேர நாடு சோழப்பேரரசால் அடைந்த இன்னல்களுக்கு அவரைத் தண்டிப்பான் வேண்டி காப்பியத்தின் மூலம் சேரனை நன்னயம் செய்தவனுக்கி, செங்குட்டுவனைப் பெருமையடையச் செய்வதன் மூலம் இறவாத புகழினைத் தன் மூதாதையாம் கடல் பிறகோட்டியக் குட்டுவனுக்குக் கொடுத்து விடுகிருர். நந்நயம் (சோழன் மேல் வஞ்சம் தீர்ப்பதற்கு) செய்வதற்குத்தான் இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் யாத்தார் என்ருல் அஃது உண்மையிழந்த கூற்ருகாது. இவ்வாறு நூலாசிரியர் உண்மையைத் தேடியலைகிருர். இளங்கோவடிகள் தம் காப்பியத்தில் பயில்கின்ற பெயர்கள் பெரும்பாலும் இயற் பெயர்களன்று, மரபு அடிப்படையில் எழுந்தவை அல்லது கற்பனைப் பெயர்கள். சிலப்பதிகாரத்தைக் கற்பனைக் கதையாக எழுதினமையால் அவர் இயற் பெயரைச் சுட்டாமல் சென்ருர் என்பதுதான் உண்மை. இதுவும் புத்தக ஆசிரி

யரின் வாதம். 'பஃறுளியாற்றுடன் பன் மலையடுக்கத்துக் குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள' என்று இளங்கோவடிகள் கூறுவதும் கற்பனையே. தென்பாண்டி நாட்டுக்கல்வெட்டில் காணும் 'பறளியாறே' பஃறுளியாறு. குமரிக்கோடு என்பதற்குக் குமரி என்னும் ஊர் என்று பொருள் கூறுவதே பொருந்தும். 'தொடியோள் பௌவம்' என்று இளங்கோ குமரியைக் கடலாகக் கூறியிருக்க, அக்கடலை ஆருக மாற்றிய பெருமை அடியார்க்கு நல்லாரையே சாரும் என அடியார்க்கு நல்லாரைச் சாடுகிறுர் புத்தக ஆசிரியர். தாம் வாழ்ந்த காலத்தின் தமிழெல்லைகளை இளங்கோ குறிப்பிடும் போது நெடியோன் குன்றமும் தொடியோள்பௌவமும் தமிழ்வரம் பறுத்த தண்புனனன்றுடு' என்கிறுர். பஃறுளியாறும் குமரிக்கோடும் கடல் கொள்ளப்பட்ட பின்னர் உள்ள குமரியைக் கடலலைகள் தழுவும் 'தொடியோள் பௌவம்' என்ற இளங்கோவடிகள் கருத்தை மனத்தில் இரும்புத்திரையிட்டு மறைக்கிறுர் 'சிலப்பதிகாரம் பதினேராம் நூற்ருண்டுக் காப்பியம்' என்ற நூலின் ஆசிரியர். புறநானூற்று ஆருவது பாடலில் காணப்படும் 'தெனு அதுருகெழு குமரியின் தெற்கும்' என்றவரியில் 'குமரி' என்பது குமரியாற்றைக் குறிக்கவில்லையென்று வைத்துக் கொண்டாலும் புறநானூற்று ஒன்பதாவது பாடலில் குறிப்பிடப்படும் 'நந்நீர்ப் பஃறுளி'யை எங்கு கொண்டு தள்ளுவது? 'பஃறுளி' 'பறுளி' யாகிப் பின் 'பறளி'யாகி மேலும் 'பறலை'யாகிய செப்பேட்டுப் பறலை தானே! புறநானூற்றுப் பஃறுளியை புத்தக ஆசிரியர் ஒதுக்கிவிட்டது எது குறித்தோ?

வஞ்சிக் காண்டத்தில் மறைந்துள்ள வரலாற்று உண்மைகள், வரலாற்றுச் சான்றுகள், நிகழ்ச்சிகள், சிலப்பதிகார வஞ்சி, சிலப்பதிகார மதுரை, சிலம்பில் வரலாற்றுப் பாத்திரங்கள், சிலப்பதிகார இளங்கோவடிகள், சிலம்பில் யாப்பமைதி, பழக்கவழக்கங்கள், சிலப்பதிகாரமும் கலைகளும் என்ற பல தலைப்புகளில், ஆசிரியர் 'சிலப்பதிகாரம் பதினேராம் நூற்ருண்டுக் காப்பியம்' என்ற நூலில் எழுதி

யுள்ளார். அவருடைய கருத்துக்கள் சிலவற்றைப் பார்த்தோம்.[2] அனைத்தையும் பார்க்கவில்லை. ஆசிரியரின் உழைப்பு வியக்கத்தக்கது. அவருடைய நூலறிவும் மகிழத்தக்கது. எனினும், உண்மை காணும் முயற்சி குட்டையைக் குழப்புவதாகும். சீரிய வழியில் இவ்வாராய்ச்சித் திறன் பயன்பட்டால் நலன் பயப்பதாகும். 'சிலப்பதிகாரமும் கலைகளும்' என்ற பகுதியை ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோற்றைப் பதம் பார்ப்பது என்ற அடிப்படையில் சற்று உற்று நோக்குவதே இக்கட்டுரை.

'சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றாண்டுக் காப்பியம்' என்ற நூலின் சில பகுதிகள் கீழ் வருமாறு: ''நாட்டியம் ஆடுவதற்கு இன்றியமையாத நாட்டிய அரங்கினையும் அந்நூல் (சிலப்பதிகாரம்) நன்கு விளக்கிக் கூறியுள்ளது. நாட்டியம் பற்றியெழுந்த மிகப் பழமையான வடநூல் பரத முனிவரின் நாட்டிய சாஸ்திரம் ஆகும். மதிவாணனார் நாடகத் தமிழ் நூலும், டாக்டர் சாமிநாத ஐயரவர்கள் மேற்கோளாகக் காட்டியுள்ள 'சுத்தானந்தப் பிரகாச'மென்னும் பரத நூலும், வடமொழியிலெழுந்த நாட்டிய சாஸ்திரத்தைத் தழுவியதாகவோ, அன்றி, அந்நூலிலிருந்து பகுதிகளை நேரடியாகவோ எடுத்துக் கொண்டவையாகவோ காணப்படுகின்றன. இது அடியார்க்கு நல்லார் அந்நூலிலிருந்து எடுத்தாண்டுள்ள சான்றுகளிலிருந்தும், ஐயரவர்கள் மேற்கோளாகக் காட்டியுள்ள சுத்தாநந்தப் பிரகாசமென்னும் நூலின் பகுதிகள் சிலப்பதிகாரத்தில் காணப்படுவதினின்றும் அறியலாம். மாதவி நாட்டியம் ஆடிய அரங்கம் பற்றிய விளக்கங்கள் சிலப்பதிகாரத்தில் உள்ளன. அரங்கின் நீளம் அகலம் போன்றவற்றை, அரும்பதவுரையாசிரியர், அடியார்க்கு நல்லார் போன்றோர் விளக்கமாகக் கூறியுள்ளனர். நாட்டிய அரங்கமானது ஏழு கோல் அகலம், எட்டுக்கோல் நீளம், ஒரு கோல் உயரங் கொண்டு அரங்கின் பலகையினின்றும் உத்தரப் பலகைக்கு நாற்கோல் உயரம் கொண்டதாக இருக்க வேண்டும் என்று இளங்கோவடிகள் கூறி

யுள்ளார். (சிலம்பு: 1: 3: 95: 113) இவ்வளவை முறை அவருக்கு முன்னால் வாழ்ந்த பெயர் தெரியாத ஆசிரியர் எழுதிய 'சுத்தானந்தப் பிரகாசத்தில்' கூறியிருப்பதை இளங்கோவடிகள் அப்படியே தம் காப்பியத்தில் எடுத்தாண்டிருப்பது இங்கு நோக்கத்தக்கது. **ஆரியக் கூத்து வகைகள் தென்னாட்டில் நன்கு பரவிய ஏழு, எட்டு நூற்றாண்டுகளில், அல்லது அதற்கும் பின்னர்த்தான் மதிவாணனார் நாடகத் தமிழ் நூல், பரதசேனாபதியம், சுத்தானந்தப் பிரகாசம் ஆகிய பரத நூல்கள் இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவாகின்றது. சமணமுனிவரான இளங்கோவடிகள் நாட்டியம், நாடகம், இசை, இன்னியம், அரசியல், போர், சோதிடம் ஆகியவற்றையெல்லாம், தம் நூலில் மிக லாகவமாகக் கையாண்டுள்ளார். அதற்குக் காரணம், அவர் அத்துறைகளிலெல்லாம் நேரடி அனுபவம் பெற்றவர் என்பதன்று. மாறாக அத்துறைகளைப் பற்றி விளக்க எழுந்துள்ள நூல்களையெல்லாம் அவர் கற்று, அவற்றில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார் என்பதேயாகும். 'நாட்டிய நன்னூல் நன்கு கடைப் பிடித்து' (அரங்கேற்று காதை, வரி 40) என்று கூறுவதனால், அவர் வடமொழி நாட்டிய சாஸ்திரத்தையேனும் அல்லது அதை இயற்றப்பட்ட தமிழ்ப் பரத நூலையேனும் குறித்திருக்கலாம். 'சுத்தானந்தப் பிரகாசம்' போன்ற நூற்கள், நாட்டிய சாஸ்திரம் தமிழகத்தில் நன்கு பரப்பப்பட்ட பல்லவர் காலத்திற்குப் பின்னால் தோன்றியிருக்க வேண்டும். அதன் பகுதிகளை அப்படியே பயன்படுத்தியிருக்கும் சிலம்பு பிற்காலத்தது என்பது கண்கூடு. சிறப்பாகச் சுத்தானந்தப் பிரகாச நூலிலிருந்து ஒரு பகுதியை அப்படியே இளங்கோ சிலம்பில் பயன்படுத்தியிருக்கிற காரணத்தால் சிலப்பதிகாரம் சுத்தானந்தப் பிரகாசம் எழுந்த காலத்திற்கும் பின்னர் எழுந்தது என்பதும் தெரியலாம்."[8]

மேற்கண்ட கூற்றுக்களை ஆராயு முன்பு பின்னாலெழுந்த நாட்டிய நூல்களுக்கு முன்னோடியான நாட்டிய சாஸ்திரத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளுதல் பயன்தரும். பரதமுனி

என்பவரால் நாட்டிய சாஸ்திரம் இயற்றப்பட்டதென்பர் 'பரதன்' என்பவர் தான் அதன் ஆசிரியர் என்று சொல்லி விட முடியாது. பரத நாட்டிய சாஸ்திரத்திலே அதைப் பற்றியொன்றுமில்லை. பெரும்பான்மையான புராணங்களில் அவர் பற்றிய எவ்விதக் குறிப்பும் இல்லை; இராமாயணத்தி லும் மகாபாரதத்திலும் அவ்வாறே. 'நடிகன்' என்று பொருள் கொண்ட 'பரத' என்ற சொல் பரதசாஸ்திரம் அல்லது நாட் டிய சாஸ்திரம் (கூத்த நூல்) என்ற நூலுக்காகத் தோற்று விக்கப்பட்ட பெயர் என்று தோன்றுகிறது. நாட்டிய சாஸ் திரம் தனி ஒருவரால் இயற்றப்பட்டதன்று என்று அறிஞர்கள் கருதுகின்றனர். இப்பொழுதுள்ள நிலையையடையு முன்பு பலரால் இடைச் செருகல்கள் கையாளப்பட்டன என்பதுவும் அறிஞர் கருத்து. நாட்டிய சாஸ்திரம் காளிதாசன் காலத் துக்கு முந்தியது. பாசனுடைய காலத்துக்கு ஒரு நூற்ருண்டு முந்தியது என்று கொண்டால் 'நாட்டிய சாஸ்திர'த்தின் காலம் கி.பி.இரண்டாவது நூற்ருண்டு என்று கொள்ளலாம்.* கி. பி. மூன்ருவது நூற்ருண்டு என்று கொண்டாலும் பெரிய தொரு இடைவெளியில்லை. 'என்று மற்றையோர் சொல்வர்', 'பிறிதொருவர் கூற்றுப்படி' என்ற சொல்லாட்சி நாட்டிய சாஸ்திரத்தில் காணப்படுகிறது. எனவே நாட்டியம் பற்றிய பல நூல்கள் முன்பேயிருந்திருக்க வேண்டும் என்பதில் ஐய மில்லை. 'விதிமாண் கொள்கை' (அரங்கேற்றுகாதை, வரி 15), 'நாட்டிய நன்னூல்' (ஷை வரிகள் 41, 158) 'நூனெறி மரபின்' (ஷை 99) என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுவதிலி ருந்து ஆடல் பற்றிய பல நூல்கள் சிலப்பதிகாரக் காலத்தி லும் அதற்கு முன்பும் வழக்கிலிருந்திருக்க வேண்டும்.

சிலப்பதிகாரத்தில் அரங்கு பற்றிச் சொல்லப்பட்டிருக் கிறது. நூலோர் வகுத்த இயல்பினின்றும் பிறழாதபடி நிலக் குற்றங்கள் இல்லாத இடத்தை அரங்கம் அமைக்கப் பொறுக்க வேண்டும். புண்ணிய மலைப்பகுதிகளிலே நெடி தாக ஓங்கி வளர்ந்த கண்ணுக்குக் கண் ஒரு சாண் நீள முள்ள மூங்கிலை நூல்களிற் சொல்லியபடி பெருவிரல் இரு

பத்து நான்கு விரல் கொண்ட அளவுக்கு அரங்கம் அமைக்க அளக்கும் கோலாக நறுக்கிக் கொள்ள வேண்டும். அரங்கத்தின் அகலம் எழுகோலாகவும் நீளம் எட்டுக் கோலாகவும் குறட்டின் உயரம் ஒரு கோலாகவும் இருக்க வேண்டும். கீழே அரங்கத்தின் பலகைக்கும் மேலே உத்தரத்தின் பலகைக்கும் இடையே உள்ள உயரம் நாலு கோல். உள்ளே புகவும் வெளியே செல்லவும் இரு வாயில்கள் அமைக்க வேண்டும். அரங்கத்து வைக்கப்பட்ட தூண்களின் நிழல் படாதபடி சிறப்பமைந்த நிலைவிளக்கை நிறுத்தவேண்டும். ஒரு முக எழினி, பொருமுக எழினி, கரந்து வரல் எழினி என்ற மூன்று திரைச் சீலைகளையும் செயற் பாட்டுடனே பொருத்த வேண்டும். அரங்கம் வேலைப் பாடமைந்த சித்திர விதானத்தையும் கொண்டது.

நாட்டிய சாஸ்திரம் குறிப்பிடும் மனிதர்க்கான அரங்கு அமைப்புப் பற்றியும் காண்போம் மேடு பள்ளமில்லாத, உறுதியான, சரியாத, கரிசல் அல்லது வெண்மையான தரையில் அரங்கம் அமைக்கப்பட வேண்டும். அளப்பதற்குப் பஞ்சு அல்லது கம்பளி நூலோ 'முஞ்சை'ப் புல்லாலான கயிறோ அல்லது ஏதாவது மரத்தின் பட்டையோ பயன் படுத்த வேண்டும். அளப்பதற்குச் சிலப்பதிகாரத்தில் மூங்கிற் கழிபயன் படுத்தப்பட்டது. நாட்டிய சாஸ்திரத்தில் பஞ்சு அல்லது கம்பளி நூலும் பயன்படுத்தப்படலாம் என்று சொல்லப்படுகிறது. காலத்தால் ஏற்பட்ட வளர்ச்சியை இது காட்டுகிறது. நாட்டிய சாஸ்திரம் கூறும் தரைப்படத்தை நோக்குவோம். 64 கை நீளம் நெடுக்கிலும் 32 கை நீளம் குறுக்கிலும் அளவுள்ள நிலத்தை அரங்கத்துக்கு ஒதுக்க வேண்டும். நெட்டுவாக்கில் அதை ஒரே அளவுள்ள இரு கூறுகளாக அதாவது 32 கை நீளம் கொண்டதாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். முன்னுலுள்ள 32 கையளவு நீளமும் 16 கையளவு அகலமுமுள்ள பகுதி பார்வையாளர்கள் அமரும் ரங்க மண்டலம். பின்னுலுள்ள பகுதியை மீண்டும் ஒரே அளவுள்ள இரு கூறுகளாகப் பிரிக்க வேண்டும். அவை

ஒவ்வொன்றும் 16 கையளவு நீளமும் (குறுக்கில்) 8 கையளவு அகலமும் (நெட்டு வாக்கில்) இருக்கும். அவ்விரு கூறுகளில் முன்பகுதி அரங்கம்; பின் பகுதி ஒப்பனை செய்யுமிடம். ரங்க சீர்ஷம் என்ற அரங்கத்தில் ஒப்பனை செய்யுமிடத்துக்கு முன்னால் மூன்று மேடைகள் இருக்கும். இரு பக்கமுமுள்ள மேடைகளுக்கு 'மத்தவாரிணி' என்று பெயர். நடுவிலுள்ள மேடை 'ரங்க பீடம்'. பொதுவாக அனைத்தையும் சேர்த்து அரங்கம் என்றாலும் ரங்க பீடத்துக்குச் சிறப்பு மிகுதி. நடுவிலுள்ள ரங்கபீடத்துக்கும் இருமருங்கிலும் உள்ள மத்தவாரிணிகளுக்கும் இடையில் ஒப்பனை செய்யுமிடத்தோடு இணையும் இரு வாயில்கள் இருக்கின்றன. ஒன்று நுழைவாயில்; மற்றொன்று திரும்பிச் செல்வதற்குரியது. ரங்கபீடத்தின் மேற் பகுதியில் விதானம் உண்டு. இரு வாயில்களை மறைத்து இரண்டு திரைச்சீலைகள் உள.[5] சிலப்பதிகாரத்தில் மூன்று வகையான திரைச்சீலைகள் குறிக்கப் படுகின்றன. அவை யாவன: பொருமுக எழினி, ஒரு முக எழினி; கரந்துவரல் எழினி. மேலிருந்து கீழே விழும் 'கரந்து வரல் எழினி' நாட்டிய சாஸ்திரத்தில் இடம் பெறவில்லை. திரைச்சீலைகளில் மிகுதியான கரந்துவரல் எழினி சிலப்பதிகார அரங்கத்தின் சிறப்பு. சிலப்பதிகார அரங்கத்தையும் நாட்டிய சாஸ்திர அரங்கத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் காலத்தால் ஏற்பட்ட வளர்ச்சியைப் பின் சொல்லப்பட்ட அரங்கத்தில் காணலாம். சிலப்பதிகார ஆடல் மகள் வலது காலை வைத்து மிதித்தேறி நுழைவாயில் வழி அரங்கத்துக்கு வருகிறாள். அரங்கம் 8 கோல் நீளம், 7 கோல் அகலம், 4 கோல் உயரம் என்ற அளவுகளைக் கொண்டது. தரைக்கு மேல் 1 கோல் உயரத்தில் அரங்கம் இருக்கிறது. நாட்டிய சாஸ்திர அரங்கத்தில் ஒப்பனை செய்யுமிடம், பாடகர்களும் இசைக்கருவியாளர்களும் அமர்ந்திருக்கும் மத்தவாரிணி, ரங்கபீடம், பார்வையாளர்கள் அமரும் ரங்கமண்டலம் என்ற முன்னேற்றமடைந்த கலை மண்டபத்தைக் காண்கின்றோம். நானூறு பேர் உட்காரக் கூடிய நாடக சாலையாகும் ரங்கமண்டலம்.[6]

அரும்பதவுரையாசிரியரது காலம் கி. பி. பதின்மூன்றும் நூற்றுண்டு. அடியார்க்கு நல்லார் வாழ்ந்தகாலம் கி. பி. பதினுன்காம் நூற்றுண்டு. 'சிலப்பதிகாரப் பதினென்றும் நூற்றுண்டின்' ஆசிரியரே இவ்வாறு அவர்களது காலத்தைக் குறிப்பிட்டுள்ளார். ''இந்நூல் (சிலப்பதிகாரம்) செய்யப்படும் பொழுதிருந்த இசைத்தமிழ் நாடகத்தமிழ் நூல்கள் பலவும் இவர் காலத்து இறந்து போனமையால், இவர் அவ்விசை நாடகப் பகுதிகட்கு இசை நுணுக்கம், இந்திரகாளியம், பஞ்சமரபு, பரதசேனுபதீயம், மதிவாணர் நாடகத் தமிழ் நூல் என்னும் ஐந்து நூல்களையுமே மேற்கோளாகக் கொண்டனர்,''' என்று உ. வே. சாமிநாத ஐயரவர்கள் தாம் பதிப்பித்த சிலப்பதிகாரத்தில் 'அடியார்க்குநல்லார் வரலாறு' என்ற தலைப்பின் கீழ் எழுதுகிருர். சிலப்பதிகாரத்தின் மூன்ருவதான அரங்கேற்று காதையில் 95 முதல் 107 வரையுள்ள வரிகள் 'சுத்தானந்தப் பிரகாசம்' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டது என்பது வெள்ளிடை,'' என்று புத்தக ஆசிரியர் உறுதியாகச் சொல்கிருர். சிலப்பதிகாரம் பதினேராம் நூற்றுண்டுக் காப்பியம் என்ருல் அதற்கு முன்பு ஓரிரு நூற்றுண்டுகளுக்குக் முன்பாகவோ அல்லது சில நூற்றுண்டுகட்கு முந்தின காலத்து நூலாகவோ 'சுத்தானந்தப் பிரகாசம்' இருந்திருக்கவேண்டும். அடியார்க்கு நல்லார் அழிந்து போன நூல்களின் பட்டியலிலாவது அவர் கையாண்ட நூல்களின் பட்டியலிலாவது சுத்தானந்தப் பிரகாசம் இடம் பெறவில்லை. எனவே சுத்தானந்தப் பிரகாசம் அடியார்க்கு நல்லார் காலத்துக்கும் பிற்பட்ட காலத்து நூலாயிருக்கவேண்டும்.

மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தில் கையெழுத்தில் இருக்கும் சுத்தானந்தப் பிரகாசம் தமிழ், வடமொழி கலந்த நூல். வடமொழி சுலோகங்கள் கிரந்த எழுத்தில் இடம் பெறுகின்றன.

ஆஸ்தான பூஜையின் இலக்கணம் பற்றிய தொடக்கத்திலுள்ள பகுதி பின் வருமாறு:

"அது எப்படி என்றால், யாதொரு நர்த்தகனானவன், பாத்திரமானவள் நிருத்தம் செய்யத் தக்கதான ஸபையில் வந்த உடனே ஸபையை ரக்ஷித்துக் கொண்டிருக்கிற தேவதைகளைப் பூஜை செய்து சந்தோஷமாக்கிப் பின்பு பரத லக்ஷணங்களைப் படித்துக்காட்டி நிருத்தம் செய்ய வேண்டியிருக்கும். ஆகையால் ஆஸ்தான பூஜையைச் சொல்கிறேன்.

முதலில் விக்னேச்வரனையும், பின்பு ஸுப்ரஹ்மண்யரையும், க்ஷேத்ரபாலரையும், சாஸ்தாவையும், துர்க்கையையும்,

*ப்ராஹ்மீ மாஹேஸ்வரி சைவ கௌமாரிவைஷ்ணவி ததா*
*வாராஹீ சைவ மாஹேந்த்ரீ சாமுண்டா: ஸப்த மாதா:*

என்ற ஸப்த மாதாக்களையும் அஷ்டதிக் பாலகர்களையும், பின்பு ரங்கத்தை ரக்ஷித்துக் கொண்டிருக்கிற தேவதைகள் இருபத்துநான்கு பேர்கள் உண்டு. அவர்கள் யாரோ வென்றால்,

நான்கு திக்குகளுக்கும் கர்த்தாக்களான நான்கு தேவதைகளும், ஏழு தேவதைகளும் நவரஸங்களுக்கும் கர்த்தாக்களான ஒன்பது தேவதைகளும், நான்கு திக்குகளிலும் நிற்கிற நான்கு பூதகணங்களும், இந்த நாற்பத்து நான்கு தேவதைகளுக்கும், அவரவர்களுக்கு அனுக்கிரஹித்திருக்கிற மஹோபதேசங்களினாலும், கந்த புஷ்ப தூப தீப நைவேத்யங்களினாலும் அர்ச்சித்து நிருத்தம் செய்யக் கடவது, இப்படியே ஆஸ்தான பூஜையின் லக்ஷணம்."[8]

இத்தமிழ் நடையுள்ள சுத்தானந்தப் பிரகாசத்திலிருந்து இளங்கோவடிகள் அரங்கம் பற்றிய வரிகளை அப்படியே எடுத்துக் கையாண்டார் என்று கொள்ள முடியுமா?

*"ராஜநாராயணனே லளிதப் பிரிய மென்னப்*
*பேசுவன மாலியே பேராக—*

*தீபகமே லோதிகமே செந்தேழு மாத்திரைக்குத்*
*தாபமீ தென்றுரைத்தான்,"* [9]

என்பதுவும் சுத்தானந்தப் பிரகாசத்தில் காணப்படுகிறது. மற்றொன்றையும் காணலாம்.

*"அணிந்தானந்த ரூபங்கொண்டே ஏகதாளம்*
*செங்காட்டங் குடியெல்லா*
*மானந்த மானந்தஞ் சிறுத்தொண்டர் மடமெல்லா*
*மானந்த மானந்தம் பண்காட்டி நடந்தோ ரானந்த*
*மானந்தம், பாணிக்குள் நடந்தது மானந்தமே."* [10]

கீழை நாட்டு நூல் வரிசை (Madras Government Oriental Series) யில் 1953 ஆம் ஆண்டு பரதசித்தாந்தம் என்ற நூல் வெளிவந்தது. 'சுத்தானந்தப் பிரகாசம்' என்பதற்கு வேறு பெயர் 'பரத சித்தாந்தம்' என்று அந்த நூலைப் பார்த்தால் தெரியும். உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தில் உள்ள சுத்தானந்தப் பிரகாசத்துக்கும் பரதசித்தாந்தத்திற்கும் உள்ள மாறுபாடு முன்னதில் வடமொழிப் பகுதிகள் கிரந்த எழுத்தில் இருக்கவும் பின் சொல்லப்பட்டதில் தேவநாகரி எழுத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதைத் தவிர இவ்விரண்டு வேறு பெயர்கள் கொண்டுள்ள ஒரே நூலில் மாறுதல் இல்லையென்றே சொல்லலாம். அரங்கம் பற்றிய சிலப்பதிகார அரங்கேற்று காதையில் காணும் வரிகளை சிலப்பதிகார ஆசிரியர் கடன் வாங்கினர் என்று புத்தக ஆசிரியர் ஓயாது சொல்லிக் கொண்டிருக்கிறரல்லவா?

*தெய்வ மால்வரைத் திருமுனியருள*
*வெய்திய சாபத் திந்திர சிறுவனொடு*
*தலைக்கோற் றானத்துச் சாப நீங்கிய*
*மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிர்*

என்று சிலப்பதிகார வரிகளின் விரிவை சுத்தானந்தப் பிரகாசத்தில்

*வானவர் கோமான் வானிடை இருந்து*

*   *   *

*மலைப்பருஞ் சாப நீங்கினர் மனையே.*

என்ற வரிகளிற்காணலாம்.

சுத்தானந்தப் பிரகாசத்தில் நட்டுவனைப் பற்றிய பாடல்.

*நவபாத்திரத்தில் நளவ விட்டனவே கட்டளையாம்*
*அவமின்றி ஆடுதலா லடுவாகும் ஜகமீது*
*வட்டமதனல் மிகத்தவ வுண்டானல் நல்ல*
*நட்டுவனே எனவாம் நட்டுவன் குணம்.* [11]

'தலைக்கோலாசானென்பது நாட்டுவனை' என்று அரும்பதவுரையாசிரியர் குறிப்பிடுகின்றார். 'நட்டுவன்' என்ற சொல் சிலப்பதிகாரத்தில் இடம் பெறவில்லை. பதின்மூன்றும் நூற்றாண்டில் வாழ்ந்த அரும்பதவுரையாசிரியரைப் பின்பற்றி இச் சொல்லை சுத்தானந்தப் பிரகாசம் கையாண்டிருக்கலாமோ!

பரதசித்தாந்தமும் சுத்தானந்தப் பிரகாசமும் ஒரே நூலைக் குறிக்கும் என்று முன்பே சொன்னோம். பரதசித்தாந்தத்தைப் பதிப்பித்த சாம்பமூர்த்தி சொல்வதாவது: "பரத ஸித்தாந்தம் என்னும் இந்த கிரந்தம் தமிழில் நாட்டியத்தைப் பற்றிக் கூறும் ஒரு நூலாகும். ஸம்ஸ்கிருத சுலோகங்கள் இதனுள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இந்த நூலை இயற்றியவரைப் பற்றி ஒன்றும் நமக்குத் தெரியவில்லை. அவர் எழுதும் பாஷையிலிருந்தும், நாட்டிய ஆரம்பத்தில் சாஸ்தா பூஜை செய்ய வேண்டுமென்று அவர் கூறுவதிலிருந்தும் அவர் கேரள நாட்டைச் சேர்ந்தவரெனத் தெரிய வருகிறது. 'அவனிட' போன்ற பிரயோகங்களிலிருந்து அவருடைய தாய் மொழி மலையாளம் என்பது ஊர்ஜிதமாகின்றது. ஸுளாதி ஸப்த தாளங்களையும் தாள தசப் பிராணங்களையும் அவர் குறிப்பிடுவதிலிருந்து, அவர் கி. பி. 16 ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் இருந்திருக்க முடியாதெனக் கூறலாம்.

பரதமுனி விளக்கியுள்ள நாட்டிய சாஸ்திரத்தின் மர்மங்களை விளக்குவதற்காக இந்தக் கிரந்தம் எழுதப்பட்ட போதிலும் தாள ஸம்பந்தமான விஷயங்கள் இந்தக் கிரந்தத்தில் பெரும் பாலும் காணப்படுகின்றன. நாட்டிய நூல்களில் பொது வாகக் காணப்படும் சில விஷயங்கள் இந்தக் கிரந்தத்தில் காணப்படவில்லை. நாயகா—நாயகி பேதங்களை உதாரண மாகக் கூறலாம். இவ்விதமான விஷயங்களைப் பற்றிக் கூறி யுள்ள பாகங்கள் இந்தப் பிரதியிலிருந்து ஒரு வேளை காணமற் போயிருக்கலாம். இந்நூலைப் பற்றிய பிரதி ஒன்றே யுளது. ஆதலினால் வேறு பிரதிகளைப் பார்த்து, இதிலுள்ள பிழை களைத் திருத்தவும், விடுபட்ட பாகங்களைப் பூர்த்தி செய்யுவும் இயலாது போயிற்று. இந்நூல் வழக்கம் போல் ஆரம்பிக்கப் படவில்லை. சிலவிடங்களில் விஷயங்களும் தொடர்ச்சி யாகக் கொடுக்கப்படவில்லை. தாளங்களைப் பற்றிய விஷயங் களும் நாட்டியத்தைப் பற்றிய விஷயங்களும் சில விடங் களில் கலந்தே வருகின்றன.''[12]

சுத்தானந்தப் பிரகாசத்தில் அரங்கம் பற்றிய அதே பகுதியில் கீழ்க்கண்ட பாடல்களும் இடம் பெறுகின்றன.

அம்பத்தோ ரங்குலமே அம்பத்தோ ரக்ஷரமாம்
செம்பது பீடத்தின் தேவதைகள்—சொம்புடனே
நந்தியின் விக்கிரகம் நாவிரண்டு சத்தியுட
னிந்திரனே டெண்ணப் படும்.[13]

அகரமுத லன்பத்தோ ரக்ஷரமேல் நின்று
சிகர முடிவானோர் சேவிக்க—நிகரில்லா
ஆதியக மார்க்கத்தி னுைபொரு ளத்தனையும்
நீதியுட னுடின னின்று.[14]

இப்பாடல்களினுசிரியரிடமிருந்து இளங்கோவடிகள் அரங்கம் பற்றிய வரிகளைக் கடன் வாங்கியிருப்பாரா என்பதை அறிஞர் பெருமக்கள் சிந்திக்க வேண்டும்.

. 'பலிகோண வம்பல யாபார் மீதில், புஷ்பாஞ்சலி கொண்ட புஷ்பத்தைப் போற்றி, வலியவே தாவியே வாழச்

சிறந்த சத்தசாகரஞ்சூழப், பூமாதேவி யேந்திஞய் நீயே' என்றும் 'கொந்து பந்து முகாரி நல்லிசை கோகிலப் பிரிய தாளமே' என்றும், 'அரியசங்கரா பரணவிசை முதல் ஆதி தாளம் நடக்கவே'[15] என்றும் காணப்படும் சுத்தானந்தப் பிரகாசத்திலிருந்து சிலப்பதிகாரம் தமிழ் நடை வரைய ஒளி பெற்றது என்ற கூற்றை ஆராய்ச்சியாளர் சீர் தூக்கிப் பார்க்க வேண்டும்.

சிலப்பதிகாரத்தில் சொல்லப்படும் இசைக்கருவிகளையும் காரைக்காலம்மையாரின் மூத்த திருப்பதிகங்களில் குறிப் பிடப்பட்ட இசைக் கருவிகளையும் அரும்பதவுரையாசிரியர், அடியார்க்கு நல்லார் உரைகளில் கூறப்பட்ட இசைக் கருவி களையும் ஒத்திட்டுப் பார்த்தால் படிப்படியான வளர்ச்சியைக் கண்டு கொள்ளலாம். தண்ணுமை சங்க நூல்களில் இடம் பெறுகிறது. முழவும் தண்ணுமையும் சிலப்பதிகாரத்தில் இடம் பெறுகின்றன. காரைக்காலம்மையார் மூத்த திருப் பதிகங்களில் சொல்லப்படும் குடமுழா சிலம்பில் இடம் பெறவில்லை. இக் குடமுழா மிகப்புகழ் பெற்ற தோற் கருவி யாகப் பிற்காலத்தில் கருதப்பட்டது. சிலப்பதிகாரத்தின் தொன்மைக்குப் பல சொல்லக் கூடும்.

சிலப்பதிகாரத்தில் கலையைப் பற்றி ஆராயும் போது உரையாசிரியர்கள் காலத்தில் வளர்ச்சியுற்ற கலை வளத்தை யும் அவர்கள் கலையறிவையும் சேர்த்துப் போட்டுக் குழப்பக் கூடாது. இதைப் பெரும்பாலும் 'சிலப்பதிகாரம் பதினேராம் நூற்ருண்டுக் காப்பிய' ஆசிரியர் கையாள்கிருர். ஐயர வர்கள் ஆராய்ச்சியாளர்க்குப் பயன்படுமாறு கொடுத்த சுத்தானந்தப் பிரகாசம் பற்றிய அடிக்குறிப்புகளை பற்றிக் கொண்டு பதினெரும் நூற்ருண்டுக்கு முன்னர் இருந்திருக்க முடியாது என்ற சுத்தானந்தப் பிரகாசத்திலிருந்து இளங் கோவடிகள் அரங்கம் பற்றிய பகுதியைக் கடன் வாங்கினுர் என்று சொல்வதை ஏற்றுக் கொள்ள இயலுமா? சுத்தானந் தப் பிரகாசம் முழு நூலையும் இசைப் பேராசிரியர் சாம்ப மூர்த்தி பதிப்பித்த பரத சித்தாந்தம் என்ற சுத்தானந்தப்

பிரகாசத்தையும் புத்தக ஆசிரியர் அறியவில்லை. சுத்தானந் தப் பிரகாசத்திலிருந்து சிலப்பதிகாரம் கடன் வாங்கி ஒளி பெற்றது என்ற பொய்க்கூற்று அறிந்தோ அறியாமலோ 'சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றாண்டுக் காப்பியத்'தில் இடம் பெற்று விட்டது. இம்மாதிரிக் கூற்றுக்கள் எத் தனையோ? சுத்தானந்தப் பிரகாசத்திலிருந்து அரங்கம் பற்றிய வரிகளை, உள்ளது உள்ளவாறே இளங்கோவடிகள் எடுத்துக் கொண்டார் என்பது 'சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றாண்டுக் காப்பியம்' என்ற நூலின் ஆசிரியர் செ. கோவிந்தனின் முற்ற முடிந்த கருத்து. இசைப் பேராசிரியர் சாம்பமூர்த்தியின் கருத்துப்படி பரத சித்தாந்தம், அதாவது சுத்தானந்தப் பிரகாச ஆசிரியர் பதினாரும் நூற்றாண்டுக்கு முன்பிருந்திருக்க முடியாது. நல்ல கருப்பொருள் கிடைத்திருப்பதால் 'சிலப்பதிகாரம் பதினாறும் நூற்றாண்டுக் காப்பியம்' என்பது பற்றிய ஆராய்ச்சி கூட எழலாம்.

### குறிப்புகள்

1, 2, 3. செ. கோவிந்தன் : சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றாண்டுக் காப்பியம்:

4 & 6. Introduction to the Natyasastra ascribed to Bharata Muni - Manmohan Ghosh

5. The Natyasastra ascribed to Bharata Muni.

7. சிலப்பதிகாரம், உ. வே. சாமிநாதையர் பதிப்பு. 1927.

8. (1) சுத்தானந்தப் பிரகாசம். (சுத்.பி) மகா மகோபாத்தி யாய உ. வே. சாமிநாதையர் நூல் நிலையப்படி.

(2) பரத சித்தாந்தம் (ப.சி.)பதிப்பாசிரியர்: பேராசிரியர் P. சாம்பமூர்த்தி, (பக்கங்கள் 8-9)

9. ,, (1) ,, (2) பக்கம் 47.

10. ,, (1) ,, (2) பக்கம் 124.

11. ,, (1) ,, (2) பக்கம் 18.

12. பரத சித்தாந்தம்—பேராசிரியர் P. சாம்பமூர்த்தியின் முன்னுரை.

13 சுத். பி (1) (2) ப. சி பக். 89,90.

14. ,, (1) ,, (2) ,, பக்கம் 93.

15. ,, (1) ,, (2) ,, பக்கம் 94.

### பயன்பட்ட நூல்களும் கட்டுரைகளும்

1. செ. கோவிந்தன் : சிலப்பதிகாரம் பதினோராம் நூற்றுண்டுக் காப்பியம்.

2. சிலப்பதிகாரம். உ. வே. சாமிநாதையர் பதிப்பு, சென்னை. 1927.

3. The Natyasastra ascribed to Bharata Muni. Translated into English by Manmohan Ghosh. Calcutta-1951.

4. சுத்தானந்தப் பிரகாசம் - மகா மகோபாத்தியாய உ. வே. சாமிநாதையர் நூல் நிலையப்படி.

5. Bharata Siddhantam- (Tamil & Sanskrit) Edited with Introduction by Prof. P. Sambamurti. Madras Government Oriental Series No. LXXXIV. Government Oriental Manuscripts Library, Madras. 1953.

6. B.V. Narayanaswamy Naidu and two others: Tandava Lakshanam.

7. க. சி. கமலையா : மாதவி அரங்கேறினள்.

8. K. C. Kamaliah : Matavi's Maiden Dance Performance. (Paper presented at the Eighth Conference-Seminar of the All India University Tamil Teachers.)

# வாரும் வாரும் வடிவேல் முருகரே

திருச்சிற்றம்பலத்தில் தூய நடம் புரியும் ஆடல் அரசனுக்கு இராமலிங்கர் சொன்மாலை சூட்டுகிறார். அவ் அலங்கலை இசைந்து அணிய வேண்டுமென்று அடிகள் வேண்டுகிறார். 'சிறுமொழி என்றிகழாது சேர்த்து மகிழ்ந்தருள்' என்றும், 'தாழ்மொழி தரித்து மகிழ்ந்தருள்' என்றும், 'புன்மொழி என்றிகழாதே புனைந்து மகிழ்ந்தருள்' என்றும், 'என் பிதற்றும் அணிந்தருளே' என்றும் இறைவனை இறைஞ்சுகிறார். மன்றுள் ஆடும் அரசன் 'என் அகத்தினிலும் புறத்தினிலும் சோதி அருள் உருவாய்த் திரிந்து திரிந்தருள்கின்ற பொருள்' என்று மனமகிழ்கின்றார் அடிகள். அம்பலத்தாடும் ஆனந்த நடமிடும் செஞ்சடைக் கடவுள் இனித்திடும் தெள்ளமுது. எதைக் காட்டினும் இனித்திடும்? முக்கனியைத் தனித்தனி பிழிந்து வடித்து, பிறகு அவை மூன்றையும் கூட்டி, சர்க்கரையும் கற்கண்டுப் பொடியும் கலந்து, கொம்புத் தேன் பெய்து, ஆவின் பாலும் தெங்கின் பாலும் ஊற்றிப் பருப்பை விரவி, நறுநெய் சேர்த்து. அளைந்து, பின் இளஞ் சூட்டில் வைத்து இறக்கிய சுவைக் கட்டி எவ்வாறிருக்கும்? நினைக்கும் போதே நாவில் நீர் ஊறுகிறது. அதனிலும் இனிக்கும் அமுதன்றோ இறைவன்! செஞ்சொற்றமிழில் இராமலிங்கர் இசைக்கும் பாடல்கள் 'ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கு'கின்றன.

கடும் வெயிலில் உழைத்த ஒருவன் மரத்தைத் தேடுகிறான் சிறிது அயர. கிளைகள் அடர்ந்து நெருங்கி வெயிலே

தெரியாமல் குளிர்ச்சியாயிருந்தால் அவனுக்கிதமாயிருக் கிறது அந்நிழல். 'கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர்தரு' என்று இறைவனைப் போற்று கிறார் இராமலிங்கர். குளிர்தரு மட்டுமில்லை. அதுதரும் நிழல் அவன், அந்நிழலில் கனிந்த கனி அவன். எத்தனை தான் நீருக்குச் சுவையில்லை யென்றாலும் ஊற்றுநீர் அலைந்து திரிந்து வருபவனுக்கு உடல் குளிர—உள்ளங் குளிர உதவு கிறது. 'ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் அந்நாள் ஊற்றுப் பெருக்கால்' உலகே பயன் பெறுகிறது. பாலாற்றுப் படுகை யில் நீரோடுவதை இக்காலத்தில் பார்ப்பதென்பது கார்த் திகைப் பிறை காணத்துடிப்பது போலத்தான். கார்த் திகைப் பிறையையாவது வான்மழை பொய்த்த காலத்தில் காணமுடியும். பாலாற்றில் நீரோடப் பார்க்க முடியாது. ஆனால் அதன் படுகையைத் தோண்டி அங்கு கிடைக்கும் நீரைப் பாலாய்ப் பருகும் மக்களை—பாலாற்றங்கரை வாழும் மக்களைக் கேட்டால் தெரியும் பாலாற்று மணல் ஊற்றைப் பற்றி. 'ஓடையிலே ஊறுகின்ற தீஞ்சுவைத் தண்ணீர்' என்று தெய்வ நடத்தரசை இராமலிங்கர் ஏத்துகிறார். பாலை வனத்தில் எங்கும் மணல்தான். நீரே கிடையாது. பல நாள்கள் பயணத்தின் பிறகு நீரூற்றுகள் ஆங்காங்கே தென் படும். குளிர்தரும் நிழலுடன் மரங்களுள்ள அவ்விடங்களில் தங்கி மீண்டும் பயணிகள் பயணத்தைத் தொடங்குவர் 'பாலைவனக்கப்பல்கள்' என்று சொல்லப்படும் ஒட்டகத்தின் மேலேறி. தீஞ்சுவைத் தண்ணீருடன் அங்கு மலர்ந்து மணம் வீசுகிறது மலர். அத்தகைய மலர் இறைவன். கோவலனும் கண்ணகியும் மதுரைச் செலவின் போது மதுரையை நெருங்கி விட்டார்கள். மதுரைத் தெருக்களில் தென்றல் சந்தன மணத்தைத் தாங்கிச் செல்லும். 'தென்றல் வரும் பொழு தெல்லாம் செழுஞ் சாந்தின் மணம் நாறும் செல்வ வீதி' என்று வாயாரப் புகழ்வார் வில்லிபுத்தூரார். 'புலவர் செந்நாப் பொருந்திய நிவப்பிற், பொதியிற்றென்றல் போலா தீங்கு மதுரைத் தென்றல் வந்தது காணீர்' என்று சிலம்பு தென்றலைப் பற்றிப் பேசும், மேடையிலே வீசுகின்ற மெல்லியு

பூங்காற்று அவன்; அம்மென்காற்றில் விளைசுகமும் அவன்; சுகத்தால் பெறும் பயனும் அவன் அம்மெல்லிய பூங்காற்ருகிய தென்றல் எனவரும் இறைவனைச் சொல் அலங்கல் அணிய வேண்டுகிருர் இராமலிங்கர். 'கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர்தருவே' என்று தொடங்கும் இராமலிங்க சுவாமிகளின் திரு அருட்பா இசை மேதைகளால் பல இராகக் கலவையால் பாடக்கேட்டு உருகாதார் எவர்?

சிறுமிகள் கும்மியடித்துப் பாடுதல் செவிக்கும் சிந்தைக்கும் இன்பமூட்டும் கண்ணுக்கினிய காட்சி. சிலப்பதிகாரக் காலம் முதல் இன்றுவரை, குரவை, கழங்காடல், அம்மானை, பந்தாடல் போன்ற பெண்கள் ஆடிப்பாடும் பாடல்கள் தொடர்ந்து மக்களிடை வழங்கி வருகின்றன. நீல மயில் மேலேறிவரும்முருகன் புகழ்பாடும் பாடல்கள் என்ருல் அவை மேலும்மெருகு பெறுகின்றன.'சீர்திகழ் மயில் மேலே— இளஞ் செஞ்சுடர் தோன்றுந் திறம் போலே' முருகன் கூர்வடிவேல் கொண்டு வருங் கோலத்தைப் பார்க்கக் கோதையர்களை அழைக்கிருர்கள் கும்மியடிக்கும் பெண்கள். 'அவன் ஆனந்தமான அமுதன்; பரமானந்த நாட்டுக்கரசன்; தானந்தமில்லாச் சதுரன்' என்று கும்மியடிக்கின்றனர் சிறுமிகள் என்று பாடுவர் இராமலிங்கர். தானந்தமில்லாச் சதானந்தத்துச்சிமேல் ஆனந்த நடம் புரிவான் அம்பலத்தரசன் என்று திருமூலர் சொல்வாரன்ருே.

*குறவர் குடிசை நுழைந்தாண்டி—அந்தக்*
*கோமாட்டி எச்சில் விழைந்தாண்டி*
*துறவர் வணங்கும் புகழாண்டி—அவன்*
*தோற்றத்தைப் பாடி அடியுங்கடி.*

'மாமயில் ஏறி வருவாண்டி', 'பன்னிரு தோள்கள் உடையாண்டி', 'வேங்கைமரமாகி நின்ருண்டி', என்றெல்லாம் முருகனைக் கொண்டாடும் இராமலிங்கர், 'வேத முடி சொல்லும் நாதனடி', 'தத்துவத்துள்ளே அடங்காண்டி,'

*"ஒன்றிரண் டான உளவாண்டி—அந்த*
*ஒன்றிரண் டாகா அளவாண்டி*
*மின்திரண் டன்ன வடிவாண்டி—அந்த*
*மேலவன் சீர்த்தியைப் பாடுங்கடி."*

என்ற சிந்தனையைக் கிளறும் சொற்களையும் உதிர்க்கின்றார். இறைவன் ஒளிமயமானவன்றோ!

திருப்பள்ளியெழுச்சியும் திருப்பாவை - திருவெம்பாவையும் சைவ—வைணவத் திருமுறை—பிரபந்தங்களில் சிறந்து விளங்குகின்றன. அவற்றைப் பின்பற்றி எழுந்தனவே வடமொழியில் இடம் பெற்றுள்ள 'சுப்பிரபாதங்கள்'. இராமலிங்க சுவாமிகள் 'சண்முகர் வருகை' என்ற சிந்தில் பொழுது புலர்ந்து விட்டதால் வரவேண்டும் என முருகனை வேண்டுகிறார். பொழுது புலர்ந்து பொற்கோழியும் கூவி விட்டது. அருணனுதித்து அன்பர்கள் கூடி நிற்கின்றனர் முருகன் வருகை நோக்கி. 'காகம் கரைந்தது காலையும் ஆயிற்று, என்று விண்ணப்பித்துக் கொள்கிறார் அடிகள். இன்றும் தென்னாட்டுக் கோயில்களில் தெய்வத் திருவுருவங்களுக்கு மஞ்சனமாட்டுவது சிறப்புப் புனித நிகழ்ச்சிகளாம்.

*மாலை கொணர்ந்தனர் மஞ்சனம் போந்தது*
*மாமயில் வீரரே வாரும்*
*தீமையில் தீரரேவாரும்.*

இறைவன் நன்றுடையான், தீயதொன்றில்லான். 'தீமையில்' என்று அழுத்தம் கொடுக்கிறார் இராமலிங்கர். பாடல்களைப் படிப்பதினும் கேட்கும்போது உண்டாகும் இன்பமே தனி. சிலவற்றைப் பாடிக் கேட்டபின்னர் தேடியலைகிறோம் அப்பாடல்கள் உள்ள நூல்களை நாடி. அவ்வகையில் சேர்ந்தவை இராமலிங்கரின் சண்முகர் வருகை என்ற சிந்துப் பாடல்கள்.

வாரும் வாரும் தெய்வ வடிவேல் முருகரே
வள்ளி மணாளரே வாரும்
புள்ளி மயிலோரே வாரும்.

சேவல் ஒலித்தது சின்னம் பிடித்தனர்
தேவர்கள் தேவரே வாரும்
மூவர் முதல்வரே வாரும்.

இப்பாடல்களைக் கேளாத செவி என்ன செவி?

# தாயன்புக்கேங்கி நிற்கும் சேய்

'தேன்புக்க தண்பணை சூழ் தில்லைச் சிற்றம் பலத்து' நடமிடும் கூத்தப் பெருமானுடைய அடியார் இராமலிங்கர்/ சைவம் போற்றிய பெரியார். என்றாலும் சமரச சன் மார்க்கம் அவருக்குகந்ததே. அவர்க்கு முன் வழிகாட்டி யாய் வாழ்ந்த தாயுமானவரும் சைவம் போற்றியவர். என்றாலும் பிற சமயங்களோடு பாலமிணைத்தவர் எனலாம். 'சைவசமயமே சமயம்' எனத்தேற்றேகாரம் கொடுத்துப் பேசு கிறார். சமயங்களைப் பற்றிச் சொல்லும்போது 'சைவ முத லாம் அளவில் சமயம்' என்று சைவ சமயத்துக்கு முதலிடம் கொடுக்கிறார். சைவத்தைச் சிக்கெனப் பிடித்தவரெனி னும் 'அத்துவிதம்' அவரை ஈர்த்துப் பற்றியதை அவர் பாடல்களிற் தெளிவுறக் காணலாம்.

*ஆக்கையெனும் இடிகரையை மெய் யென்ற பாவி நான்*
*அத்துவித வாஞ்சையாதல்*
*அரிய கொம்பில் தேனை முடவன் இச்சித்தபடி*

என்று தாயுமானவர் பாடுகிறார். பொய்யான உடம்புக்குத் தமிழில் 'மெய்'யென்று பெயர் தந்தனர் உடம்பென்னும் இடி கரையை, அதாவது 'மெய்'யைப் பொய்யென்றெண்ணாது மெய்யென்றெண்ணும் எனக்கு அத்துவிதத்தின்பால் வாஞ்சை கொள்வது முடவன் கொம்புத்தேனுக்காசை வைத்தது போலிருக்கிறது என்கிறார் தாயுமானவர்.

புரியாத சமயக் கருத்துக்களைப் புரியுமொழியிற் பேச வல்லவர் தாயுமானவர். எல்லா நிலை மக்களும் பேசும் பழகு

மொழியிற் கருத்துக்களை வழங்குவதில் தாயுமானவர் சிறப்புப் பெற்றவர். ஆயிரம் காகங்கள் கூடியிருந்தாலும் ஒரு கல்லை யெறிந்தால் அனைத்தும் சிதறிப் பறந்தோடும். அதே போலத் தான் இறைவனுடைய கருணை வெள்ளத்தருளை நாடினவர் முன் வினைகள்.

*காகமானது கோடி கூடுகின்றாலுமொரு*
*கல்லின் முன்னெதிர் நிற்குமோ?*
*கர்மமானது கோடி முன்னே செய்தாலு நின்*
*கருணைப்ர வாக அருளைத்*
*தாகமாய் நாடினரை வாதிக்க வல்லதோ?*

காய்த்துப் பழுத்துக் குலுங்கும் மரங்களைக் கடந்து செல்பவன் கல்லையெடுத்து வீசுகிறான். தின்னக்காயோ கனியோ கிடைக்கிறது. அதே போலத்தான் எல்லாமாய் விளங்கும் கடவுளை நாடிச் செல்பவன். பூவரசமர மீது கல்லெறிந்தால் அவன் பெறுவது என்ன? 'காயாத மரமீது கல் வேறு செல்லுமோ?' என்று வினவெழுப்புகிறார் தாயுமானவர்.

பம்பரம் ஆட்டாத பிள்ளை இருக்க முடியுமோ? சிறுவயதில் கண்டதோ பயின்றதோ வாழ்நாள் முழுதும் நிற்கும். பம்பரத்தின் ஆட்டம் அசைவில் மோன நிலையைக் கற்பிக்கும்.

*'சாட்டையிற் பம்பர சாலம் போல் எலாம்*
*ஆட்டுவான் இறை'* என்பார் தாயுமானவர்.

பம்பரம் ஆடும்போது அழகாயிருக்கிறது. சற்று நேராக நின்றாடிப், பின் சாய்ந்தாடி, ஒய்ந்து சாய்கிறது பம்பரம். 'உனைத் தேடித்தேடி ஓய்ந்து விட்டேனே' என்று இறைவனிடம் தாயுமானவர் முறையிடுகிறார்.

*ஆடி ஓய் பம்பரம் போல் ஆசையுடன் எங்கும் உனைத்*
*தேடி ஓய்கின்றேன் என் செய் பராபரமே.*

மக்களிடை வழங்கும் பழமொழிகளைத் தாயுமானவர் எடுத்தாள்கிறார்.

*'பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை*
*பெருப் பேதையறிவாளோ'*

என்று சேய் பெற்ற தாயின் அருமையையும் பிள்ளையருமை அறியாத மலடியின் புன்மையையும் தாயுமானவர் விளக்குவார். தந்தையை இழந்த குழந்தை பரிவு பெறுவதினும் தாயிழந்த மதலை தனி அன்பு பெறும். 'அன்னையிலாச் சேய் போல் அலக்கணுற்றேன்' என்று தாய்போல் நெஞ்சில் நிறையும் இறைவனுடன் தம் நிலையை உணர்த்துகிறார் தாயுமானவர்.

துரும்பு அற்பமெனினும் அனைவரையும் கவர்ந்த ஒன்று. 'துறவிக்கு வேந்தன் துரும்பு' என்ற பழமொழியை அறியாதார் யார்? ஒன்றுக்கும் உதவாதவன் துரும்பெனப்படுவான். 'அறியா வெறுந் துரும்பனேன் என்னினுங் கைவிடுதல் நீதியோ' என்று பரதெய்வத்தைத் தாயுமானவர் வினவுகிறார். 'சிறு துரும்பும் பல் குத்த உதவும்' என்ற பழமொழியும் வழக்கில் உள்ளது. 'துரும்பனெனினும் இறையாகிய உன் புகழ் பாடவல்லேன்' என்பதைக் கொண்டு தம்மைத் துரும்பாகத் தாயுமானவர் கருதினர் போலும். பெரும் மரக் கலங்களெல்லாம் கடலில் தவிக்கின்ற போது ஒரு சிறு துரும்பு படும் பாட்டைச் சொல்ல முடியுமா?

*ஆழித் துரும்பெனவே அங்குமிங்கும் உன்னடிமை*
*பாழில் திரிவதென்ன பாவம் பராபரமே,*

என்று தாயுமானவர் ஏங்குகிறார்.

தேள் கொட்டின குரங்கின் நிலையை மக்கள் பேசும் பொழுது குறிப்பதுண்டு. மனத்தைக் குரங்குக்கு ஒப்பிடுகிறார். ஓரிடத்திலிருப்பதென்பது குரங்குக்குப் பிடிக்காது. அதிலும் தேள் கொட்டிவிட்டால் சொல்லவே வேண்டாம்.

எதைக் கண்டு தேள் கொட்டின குரங்கு போல் மனம் துள்ளு கிறது என்று தாயுமானவர் கேட்கிறார்

*கொள்ளித் தேள் கொட்டிக் குதிக்கின்ற பேய்க்குரங்காய்*
*கள்ள மனந் துள்ளுவதென் கண்டோ பராபரமே.*

மனம் இறக்க வேண்டும். அதாவது நான், எனது என்றிடும் புலைச்செருக்கு ஒழிய வேண்டும். என்னதான் சித்தி பெற்றாலும் மனத்தை யொடுக்கினாலொழிய வழியில்லை. எனவே தான்.

*சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்*
*மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே.*

என்று பாடுகிறார்.

விளக்கமானது என்று சொல்வதற்கு 'உள்ளங்கை நெல்லிக் கனிபோல்' என்று சொல்வது வழக்கு. வேதாகமங் களின் காட்சி அத்தகையது என்கிறார் தாயுமானவர். 'கைத் தலம் விளங்குமொரு நெல்லியங்கனியெனக் கண்ட வேதாக மத்தின் காட்சி' என்கிறார்.

சமயகுரவர் நால்வரிடமும் மற்றும் தமிழ் நாட்டில் இறைவன் புகழ் பாடிய பெரியாரிடமும் அன்பு கொண்டவர் தாயுமானவர்; தலைவணங்கிப் போற்றுகிறார். 'வெம்பந்தந் தீர்த்துலகாள் வேந்தன் திருஞான சம்பந்தன்' என்றும் 'சிவ போகம் இங்கிவற்கே யென்ன உழவாரங்கொள் செங் கையர்,' என்று திருநாவுக்கரசரையும் 'பித்தரிறை யென்றறிந்து பேதை பால் தூதனுப்புவித்த சமர்த்தர் என்று சுந்தரரையும், 'புத்தர் தமைவாதில் வென்ற வாதவூர் ஐயன்' என்று மாணிக்கவாசகரையும் 'உல கைத்துறந்த செல்வப்பட்டினத்தார் பத்ரகிரி' என்றும் 'அகண்டாகார சிவம் மெய்யெனவே விண்ட சிவவாக்கியர்,' என்றும் 'சக்கரவாத்தி தவராசயோகியெனும் மிக்க திருமூலன்' என்றும் 'கந்தரநுபூதிபெற்றுக் கந்தரநுபூதி

சொன்ன எந்தை' என்று அருணகிரிநாதரையும் போற்றி அவரருள் பெறுவதெந்நாளோ என்ற ஏக்கம் தாயுமான வரைப் பற்றுகிறது. ஆங்காங்கே சிவனடியார்களை எண் ணித் தாயுமானவர் மகிழ்கிறார்.

*தேவர்தொழும் வாதவூர்த் தேவே என்பேன்*
*திருமூலத் தேவேஇச் சகத்தோர் முத்திக்(கு)*
*ஆவலுறச் சிவவென்வாக் குடனே வந்த*
*அரசேசும் மாவிருந்துன் அருளைச் சாரப்*
*பூவுலகில் வளரருணை கிரியே மற்றைப்*
*புண்ணியர்கா ளோவென்பேன் புரையொன் றில்லா*
*ஓவியம்போல் அசைவறவுத் தானே நிற்பேன்*
*ஓதரிய துயர்கெடவே யுரைக்கு முன்னே.*

தாயுமானவர் பாடல்கள் தமிழிலக்கியத்தை வளம் படுத்தின என்று சொல்லவும் வேண்டுமோ!

## சொல்லகராதி

**எண்: பக்க எண்**

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 20 | 5 | செல்லம் | செல்வம் |
| 25 | 26 | நுன்கலைகள் | நுண்கலைகள் |
| 29 | 23 | பாரதியிள் | பாரதியின் |
| 63 | 15 | கண்டாள் | கண்டான் |
| 76 | 8 | வேகத்தை | மேகத்தை |
| — | 9 | தேங்கமல்ச் பூ | தேங்கமலப் பூ |
| 78 | 28 | மண்கழித்துக் | மண்சுழித்துக் |
| 99 | 4 | நன்னகிரி | நன்னகரி |
| 124 | 8 | சங்கைவீதி | சங்கைவீதி |
| 132 | 11 | இறைவளை | இறைவனை |
| 134 | 20 | தாலாட்டந் தூங்கும் | தாலாட்டத் தூங்கும் |
| 142 | 18 | பார்க்கும்மிட மெங்கு | பார்க்குமிடமெங்கு |
| 151 | 10 | செல்வழி | செவ்வழி |
| 157 | 22 | யடாம் | படாம் |
| 180 | 2 | கூப்புற | கப்புற |
| 182 | 10 | நான் | நரன் |
| 217 | 1 | Sbringarn | Spingarn |
| 248 | 12 | சிக்காதியின் | சிதக்காதியின் |
| 273 | 27 | சிலவாக்கியர் | சிவவாக்கியர் |
| — | 29 | கந்தரது பூதி பெற்றுக் | கந்தரனுபூதி பெற்றுக் |
| — | — | கந்தரது பூதி | கந்தரனுபூதி |




சிலப்பதிகாரம் தரும் தகவலுக்கேற்ப அரங்கம்

1. மேடையின் முகப்புத் தோற்றம்
2. அரங்கத்தின் தரைப் படம்




பரதநாட்டிய சாத்திரம் தரும் தகவலுக்கேற்ப அரங்கம் (முன்பக்கம்) அவைக்களம். அ. அரங்கம்
ஆ. அரங்கமேடை இ 1. இ. 2 மத்தவாரிணி
வா 1 வா 2 வாயில், ஈ. ஒப்பனை செய்யுமிடம்

## க. சி. கமலையாவின் நூல்கள்

# நமது பண்பாடு

**180 பக்கங்கள்** **(கட்டுரைகள்)** **விலை ரூ. 5-00**

## மதிப்புரை

"உலகம் போற்றும் [illegible] லைத் தந்த வள்ளுவன்தான் சாக்காட்டிற்கு உறக்கத்தை உவமை கூறினுன் என்ருல் ஒருவிதத் தத்துவமும் அறியாத நாட்டுப்புறத் தமிழ் மகளும் தன் கணவன் சாக்காட்டை ஒப்பிட்டுப் பாடுகிருள். இதன் இலக்கியச் சுவையை எடுத்துக் காட்டுவதற்குத் திரு. க. சி. கமலையா எழுதிய கட்டுரையே 'நமது பண்பாடு' என்பதாகும். காரைக்காலம்மையாரைப் பற்றிய கட்டுரையும், குற்ருலக் குறவஞ்சியின் பல்வேறு சிறப்புக்களை எடுத்துக் கூறும் 'ஓர் ஆராய்ச்சிக் கருவூலம்' என்ற கட்டுரையும் அவர்தம் ஆராய்ச்சித் திறனை நன்கு புலப்படுத்தும் கட்டுரைகள். மொத்தத்தில் இந்நூல் சிறந்த கட்டுரைக் கருவூலம்."

—'செந்தமிழ்ச் செல்வி', சென்னை (ஏப். '73)

"இந் நூலாசிரியர் திரு. க.சி. கமலையா எப்படித் தமிழைத் துணைக்கொண்டு அறிவையும் இதயப் பண்பையும் பெருக்கிக் கொண்டார் என்பதை இந்த நூலில் உள்ள 26 இலக்கிய அனுபவக் கட்டுரைகள் காட்டுகின்றன."

—'கல்கி', சென்னை (6-5-'73)

"நாட்டிற்கொரு புலவனுய்த் திகழ்ந்த பாரதி அழகிய சொற்கோயில்கள் பல சமைத்து, தமிழ்த்தாயின் திருவடிகளைப் பணியும் முறை, தமிழ் மொழி, தமிழ் நாடு, பாரத தேசம் இவை மூன்றும் அவன் ஆராதித்த மும்மூர்த்திகளாக விளங்கும் திறம் அவன் உணர்ச்சிமிக்க ஆவேசக் கவியாகி அடிமை நிலையில் உறங்கிக் கிடந்த மக்களைத் தட்டியெழுப்பப் பாடிய பாடல்கள் அவர்களிடையே தோற்றுவித்த எழுச்சி, இயற்கைத் திருவினுக்கு அவன் செலுத்திய அஞ்சலி, அவனது 'பாஞ்சாலி சபத'த்தில் அமைத்துக் காட்டிய பாஞ்சாலியின் குணச்சித்திரம்—இவற்றை நான்கு கட்டுரைகள் அருமையாக ஆராய்கின்றன. தமிழார்வம், இலக்கியப் பற்றுக் கொண்டோர் அனைவரும் வரவேற்கத் தகுந்த நன்னூல் ஆசிரியரின் இவ் அரிய படைப்பு"

—'நூலகம்', சென்னை (ஆகஸ்டு, 1973)

